

# ஸ்ரீ தேசிக தர்ப்பண ரத்ன தீப ப்ரகாசிகை

ஸ்வாமி தேசிகன் 752ஆவது
திருவவதார தினத் திருநாள்
வெளியீடு, புரட்டாசி - 2020
திருப்புல்லாணி

*ஸ்ரீ:*
*ஸ்ரீமதே ஸ்ரீரங்கராமானுஜ மஹாதேசிகாய நம:*
*ஸ்ரீமதே ஸ்ரீ வராஹ மஹாதேசிகாய நம:*



# ஸ்ரீ தேசிக தர்சன ரத்ன தீப ப்ரகாசிகை

பகவத் விஷயம் பண்டித பூஷணம் சேட்லூர்
(திருவஹீந்த்ரபுரம்) *ஸ்ரீ உ.ப.வே. நரசிம்மாசார்யார்*
உபந்யாஸங்களிலிருந்து
தொகுத்து அளித்தவர்
***கோமடம் ஸ்ரீ ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஸ்வாமி***

*சார்வரி வருடம் புரட்டாசி மாதம் 11ஆம் நாள்*
***(27-09-2020)***
***ஸ்வாமி தேசிகன் திருவவதாரத் திருவோண நன்னாளில்***
***திருப்புல்லாணி***
***ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்***
***ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன் சந்நிதியில்***
***ஸ்ரீமத்ஆண்டவன் ஸ்ரீவராஹ மஹா தேசிகன் அனுக்ரஹத்தால்***
***வெளியிடப்பட்ட***
***மறுபதிப்பு.***

வேதமுடித் தேசிகனே ! வேதியர் குலத்தரசே !
சாது சனங்களுக்குத் தாவளமே ! - போதமரும்
நின்னடியை யென்று நினைந்திருப்பார் பாதம்என்தன்
சென்னிதனிற் சூடு மலர்.
(கந்தாடை மன்னப்பங்கார் -- தேசிக நூற்றந்தாதி)

வேதாந்த சூத்திரத் துக்கெம் மெதிபதி மெய்விளங்கப்
பாதாந்த மாகப் பணித்தநற் பாடியமாம் பயிர்க்கு
வாதாந்த காரப் பகடழி யாதுவன் காப்பினின்ற
வேதாந்த தேசிகன் தாள்நம் முளத்திருள் வீட்டொளியே.
(பிரபந்தத் திரட்டு -- எதிராஜதாஸர்)

பூவின்மன்னு மங்கைதாள் பொருந்துமார்ப னார்புகழ்
யாவுமங்கம் வேதநான்கு பாடுமாற னாகம
மேவியோங்கு பாச்சியம் விதித்தயோகி நாமமே
நாவிலங்கு தூப்புலய்யர் பாதநண்ணு நெஞ்சமே.
(ஸ்ரீ வேதாந்த தேசிகன் சந்தவிருத்தம்)

யாப்பிலணி யெழுத்தினிற்சொ லரும்பொருளி
லுவமைசொலற் கரியனாகிப்
பாப்பிலுயர் பரவாதப் பற்றுடையார்
தமைநீறு படுத்தியாவுங்
காப்பிலுயர் பரம்பொருளைக் கருத்தினிடை
யனவரதங் கருதிப்போற்றுந்
தூப்பிலவ தரித்தருளும் வேதாந்த
தேசிகன்றாள் தொழுதுய் வேமால்.
(பாதுகா சஹஸ்ரம் தமிழாக்கம் காப்பு 5)
(மதுரகவி ஸ்ரீநிவாஸய்யங்கார்)

***SRIRANGAM SRIMAD ANDAVAN ASHRAMAM***
***1/138, SOUTH CAR STREET***
***THIRUPPULLANI 623532***
***MOBILE/WHATSAPP 9443301091***
**Email:-- pamaran@live.in**




கோட்டோவியங்கள்
நன்றி
ஸ்ரீ சாகேதராமன் வெங்கட்ராமன்
அமெரிக்கா

*ஸ்ரீ தேசிக தர்சந*
*ரத்னதீப ப்ரகாசிகை*
*||ஸ்ரீ:||*
*ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேஸிகாய நம:*
*ஸ்ரீமதே நரசிம்மாசார்ய நம:*

முகவுரை

எண்ணரிய கலைகளெலா மிளமையிற்றா
னிச்சையுடன் எளிதிற் கற்றுக்
கண்ணிரண்டா மெனமுன்னோர் போற்றிடுஞ்சீர்
வேதாந்த மிரண்டு மோதித்
திண்ணமுடன் சீடர்க்குத் தெரிசன நூல்
கருணையுடன் நல்கி நாளும்
வண்ணமிகு சேட்டலூரன் நரசிங்கன்
பெருமையது பேசற் பாற் றோ.
என்னையொரு பொருளாக்கி யெல்லையறு
தகவுடனே அன்பு மிக்குத்
தன்னிகரில் வேதாந்த வாசிரியன்
தகவுமொழி யெனக்கு நல்கிப்
பன்னரிய பேரின்ப வுபாயமதைச்
செய்தென்னைக் காத்த ளித்த -
துன்னுபுகழ்ச் சேட்ட லூரன் நரசிங்க
னுதவி தனைச் சொல்லப் போமோ.

यं सन्तश्शठजिच्छ्रुति प्रवचने नाथाभिधं योगिनं
तद्व्याख्याद्भुत वैखरीषु कुरुका धीशं गुरूणां गुरुम् |
तद्गूढाशयसंप्रदाय विवृतौ श्रुत्यन्तसूरिं विदुः
तं श्रीमन्नरसिंहदेशिकमणिं निश्रेयसाप्त्यै श्रये
दीव्यद्देशिक वीक्षणान्मधुरिपुः पूर्णत्वमाप्तुं दिवो
भेजे वेङ्कटभूधरं श्रुतिशिरे युग्माशयं धीमताम्|
व्याख्यातुं गुरुराडभूत् तदतुलोत्कर्षादि निष्कर्षकः
श्लोकोयं ह्यनुभूयतां गुरु पदासक्तैः सदा सादरम्||

ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்தை இந்த லோகத்தில் பலபடிகளாலும் ப்ரவசனம் செய்து அதை நிலைநாட்டி யருளியவர் **ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகனே** என்பதையும், அவருக்கு இந்த ஸம்ப்ரதாய தத்துவார்த்தங்களை வெளியிடும் உபய வேதாந்தங்களிலும் இருந்த பாண்டித்யத்தைக் கண்டுகந்த ஸ்ரீரங்கநாதன் **வேதாந்தாசார்யர்** என்கிற அஸாதாரணமான பிருதை ப்ரஸாதித்தார் என்பதையும், இந்த பிருது பொருத்தமானது என்பதை நிரூபிக்கப் பல ஸ்ரீஸூக்திகளை அவர் அருளிச் செய்தார் என்பதையும் எல்லாரும் அறிந்திருப்பார்கள்.ஸ்ரீதேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளை ஸத்ஸம்ப்ரதாயத்தோடே பரிசயம் பண்ணின மஹான்கள், அவர் இரண்டு வேதாந்தங்களையும் இரண்டு கண்களாகப் பாவித்தார் என்றும், அவற்றில் த்ரமிட வேதங்களை வலக்கண்ணாகக் கருதினார் என்றும் அருளிச் செய்வர். இப்படிப் பட்ட திவ்ய ப்ரபந்த விஷயமான விசேஷ ஜ்ஞானத்தில் ஈடுபட்ட **ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர்** திருநாராயணபுரத்தில் செல்வப் பிள்ளையின் ஸந்நிதியில் தாம் நைனாராசார்யரிடமிருந்து பகவத் விஷயத்தை எழுபத்து நாலாயிரப்படியுடன் அதிகரித்த ஸமயத்தில் ராமானுஜ தயா பாத்ரம் என்னும் தனியனை அனுஸந்தித்தார் என்பது குருபரம்பராதிகளில் பரக்க நிரூபிக்கப் பட்டிருக்கிறது. இத்தனியன் அவதரித்த நன்னாளான ஆவணி ஹஸ்தத்தன்று திருநாராயணபுரத்தில் ஸ்ரீதேசிகன் ஸந்நிதிக்கு ஸம்பத்குமாரன் எழுந்தருளுவதும், இத்தனியனுடைய அனுஸந்தானபூர்வத்தாய்த் திருவாறாயிரப்படி ஸேவித்து சாற்று முறை செய்யப்படுவதும் ஒரு விசேஷ உத்ஸவமாக இன்றும் பரகால ஸ்வாமியின் ஆதரவில் நடந்து வருகிறது.

இந்த த்ராவிட வேதங்களை சேவிக்கும் காலத்தில் மற்ற எல்லாத் தனியன்களுக்கும் முற்பட அனுசந்திக்கும்படி *ஸ்ரீ* ரங்கநாதன் நியமித்து அருளியதற்கு ப்ரதான காரணம் இந்த *ஶ்*லோகம் ஸ்ரீ தேசிகருடைய பெருமையை விஶேஷித்து வெளியிடுவதேயாகும். நாலாயிரத் தனியன்களுக்கு வ்யாக்யானம் செய்தருளிய *வாத்ஸ்ய அஹோபிலாச்சார்யராலும், சந்த்ரகிரி*

வெங்கடாசார்யராலும் இதற்கு வ்யாக்யானங்கள் அருளிச் செய்யப்பட்டு பகவத் விஷய வ்யாக்யானத்தில் அச்சிடப் பட்டிருக்கின்றன. அவை அக்காலத்திய மணிப்ரவாள நடையில் இருப்பதினால் ஸம்ஸ்க்ருதத்தில் அதிக பரிச்சயமில்லாத இக்காலத்தியவர்களுக்கு ப்ரயோஜனப்படாமல் போய்விட்டது.

இதன் விசேஷார்த்தங்களை பகவத்விஷய காலக்ஷேப ஆரம்பத்திலேயே சதாசார்யர்கள் உபதேசிப்பார்கள். அப்படிப் பட்ட பாக்யம் அடியேனுக்கு நான்கு முறை கிடைத்தது. இதைத்தவிர ஸ்ரீதேசிகருடைய திவ்ய சரித்ரத்தைக் காலக்ஷேப ரூபமாக நடத்திய உபந்யாஸங்களில் இத்தனியனுடைய அர்த்த விசேஷங்களை அடியேனுடைய ஆசார்யனான திருவஹீந்த்ரபுரம் வித்வான் பகவத்விஷயம் பண்டித பூஷணம் தேசிக தர்சநா சார்ய தேசிக தர்சனவிஜயத்வஜ மஹாமஹாபோத்யாய ஸ்ரீஉ.ப.வே.சேட்டலூர் நரஸிம்மாசார்ய ஸ்வாமி சந்நிதியில் க்ரஹிக்கும் பாக்ய விசேஷமும் கிட்டியது. இவற்றை யெல்லாம் ஒன்று சேர்த்து எளிதான தமிழ்நடையில் வெளியிட்டு ஸகலருக்கும் ப்ரயோஜனப்படும்படி செய்யவேண்டுமென்று அடியேனை ஸ்வாமி நியமித்தருளினார். அதை டெல்லியில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த சபையின் உபசபையான ஸ்ரீதேசிக ஸ்ரீஸூக்தி ப்ரசாரண சபை ஆதரவில் வெளியிடப்படவிருக்கும் மும்மணிக் கோவைக்குப் பூர்வாங்கமாக இந்தத் தனியன் வ்யாக்யானம் வெளியிடப்படுகிறது.

ஸர்வஜித் ௵ தாஸன்,
ஆவணி ஹஸ்தம் கோமடம் ஸ்ரீநிவாஸன்.

இந்நூலின் சுத்தமான ப்ரதியைக் கொடுத்துதவிய திருவள்ளூர் ஸ்ரீ ராகவஸிம்ஹன், அதில் விடுபட்டிருந்த பக்கங்களைத் தந்து உதவிய ஸ்ரீரங்கம் ஸ்ரீ சாமம் பார்த்தசாரதி ஐயங்கார் ஸ்வாமி, மிக நேர்த்தியாகத் தட்டச்சிட்டுக் கொடுத்து உதவிய நங்கநல்லூர் ஸ்ரீ சுதர்சன ஸ்ரீநிவாசன் ஸ்வாமி, பெங்களூரு ஸ்ரீ விஜய் ரங்கநாதன் ஸ்வாமி, சென்னை ஸ்ரீமதி சித்ரா கோபால் ஆகியோருக்கு அடியேனது க்ருதஜ்ஞதைகள்.

||ஸ்ரீ:||

# ஸ்ரீ தேசிக தர்சந ரத்னதீப ப்ரகாசிகை

**ராமானுஜ தயாபாத்ரம் ஞானவைராக்ய பூஷணம்|**
**ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்||**

## தனியன் வ்யாக்யானம்.-
## உபோத்காதம்.

ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தமானது பரமாசார்யனான பகவான் தன்னாலேயே ஸர்வலோக ஹிதார்த்தமாக ஜகந்மாதாவான பெரிய பிராட்டியார் (லக்ஷ்மீ) மூலமாய் ப்ரவர்த்தனம் செய்யப்பட்டு ஏற்றம் பெற்றதாயிருக்கும். இப்படி இவள் மூலமாக ப்ரவர்த்திதமானபடியினாலும், இவளை முன்னிட்டே நாம் பகவானிடத்தில் ஶரணாகதி பண்ணுகிறபடியினாலும் ப்ரபன்னர்களை ஸூத்தாந்த ஸித்தாந்திகள் என்னலாம். விஶேஷணங்களுடன் கூடிய வஸ்து விஶிஷ்டம் என்னப்படும். சிதசித் விஶிஷ்டமான வஸ்துவாகிய ப்ரஹ்மம் ஒன்றுதான் (எக்காலத்திலும் இருக்கும்) தத்வம் என்பது இந்த ஸித்தாந்தத்தின் கொள்கையாதலால் இதை விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தம் என்று சொல்லுகிறது. பத்தர் முக்தர் நித்யர் என்கிற மூன்று வகைப்பட்ட சேதனர்களையும், ப்ரக்ருதி, காலம், ஶுத்த ஸத்வம் என்கிற மூன்று விதமான அசேதனங்களையும் தனக்கு பாரமாகவுடைய ஶ்ரிய:பதியான நாராயணனே பரதத்வம் என்பது ஸ்ரீந்யாயஸித்தாஞ்ஜனத்தில் "अशेष चिदचित प्रकारं ब्रह्मैकमेव तत्वं । तत्र प्रकारप्रकारिणोः प्रकाराणांच मिथोऽतयन्त भेदेपि विशिष्टैकयादि विवक्षयैकत्वव्यपदेशः तदितर निषेधश्च। अतः सिद्धमशेष चिदचित प्रकारं ब्रहमैकः श्रीमन्नारायणःइतिः" என்று அருளிச் செய்யப் பட்டிருக்கிறது.

இந்த ஸித்தாந்தத்தின் கொள்கைகளை ஸ்ரீபாஷ்யம் முதலிய க்ரந்தங்களில் பஹுமுகமாக ப்ரவர்த்தனம் செய்தும்,

இந்த மதத்திற்குப் புறம்பான மதஸ்தர்களை வாதத்தில் நிரஸனம் செய்தும் உபகாரம் செய்தவர் எம்பெருமானாராகையினால் இதை *ராமானுஜ ஸித்தாந்தம்* என்றும் சொல்லுகிறது. எம்பெருமானார் இந்த ஸம்ப்ரதாயத்திற்கு ப்ரதானமான சரம ஸ்லோகத்தின் அர்த்த விஶேஷங்களை மிகவும் ப்ரயாஸைப்பட்டு மற்றொருவருக்கும் உபதேஶிக்கக்கூடாது, என்கிற நிபந்தனையுடன் திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே கேட்டருளி, அந்த அர்த்த விஶேஷங்களின் சீர்மையையும் அவற்றை அறிந்தவனுக்கு மோக்ஷம் கட்டாயம் கிடைக்கும் என்பதையும் அறிந்து தம்மை ஆஶ்ரயித்த ஶிஷ்யர்களும் அவர்கள் ஶிஷ்யப்ரஶிஷ்யர்கள் மூலமாக லோகத்திலுள்ள ஜனங்கள் பலரும் உஜ்ஜீவிக்க வேண்டும் என்கிற பரம க்ருபையினால் தூண்டப்பட்டவராய் தெற்காழ்வான் ஸந்நிதியிலே எடுத்துக் கைநீட்டின முதலிகளுக்குக் தாம் கேட்டு வந்த அர்த்தங்களை உபதேஶித்தருள, இதைக் கேட்டு திருக்கோட்டியூர் நம்பி எம்பெருமானார் காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டிருக்கும் இடத்திற்கு எழுந்தருள எம்பெருமானாரும் தண்டன் ஸமர்ப்பித்துநிற்க, நம்பியும் நீர் நம்முடைய நிபந்தனையை மீறி நாம் உமக்குப் பரமரஹஸ்யமென்று உபதேசித்த அர்த்தங்களை உமது ஶிஷ்யர்களுக்கு உபதேசித்தீரே? ஆசார்யனுடைய நியமனத்தை மீறிய இந்தப் பாபத்தின் பலன் என்ன என்பதை அறியீரோ? - என்று கேட்டருள, எம்பெருமானாரும் அடியேனை க்ஷமித்தருளவும், இந்த அபசாரத்தின் பலன் நரகம் என்றறிவேன், ஆனாலும் அடியேன் ஒருவனுக்கு நரகம் கிடைத்தாலும் லோகத்தில் பலர் உஜ்ஜீவிக்கட்டுமென்று செய்தேன் ' என்று விண்ணப்பம் செய்ய, நம்பியும் அவருடைய ஸர்வ லோக ஹிதைஷித்வமாகிற குணத்தை மெச்சி, அவரை உகந்து இப்படிப்பட்ட மனோபாவம் எனக்கு உண்டாகும்படி எம்பெருமான் ஸங்கல்பிக்கவில்லை, அப்படிப்பட்ட பாக்யம் உமக்கே கிடைத்திருக்கிறது. ஆஶ்ரித ஸம்ரக்ஷணத்தில் ஸதா ஜாக்ரூகராயிருக்கும் பகவானுடைய பஞ்சாயுதாவதாரமான உம்முடைய ஸ்வபாவத்திற்கு மிகவும் பொருந்தியிருக்கிறது. உம்முடைய அதிலங்கனத்தை (என்னுடைய

நியமனத்தை மீறி நடந்ததை) க்ஷமித்துவிட்டோம், இப்படி விஶேஷித்து நீர் செய்த உபகாரத்திற்காக இன்று முதல் இந்த ஸித்தாந்தம் *ராமானுஜ ஸித்தாந்தம்* என்று அறியப்படட்டும் என்று நியமித்தருளினார் என்பது ப்ரஸித்தம். ஸ்ரீ தேசிகன் இந்த ஸித்தாந்த ப்ரவர்த்தகர்களான ஸ்ரீ ஆளவந்தாருடையவும் ஸ்ரீபாஷ்யகாரருடையவும் க்ரந்தங்களுக்கு வ்யாக்யானமிட்டும், அதே அர்த்தங்களை எல்லோரும் அறிந்து கொள்ளும்படி ஸ்தோத்திர ரூபமாயும் தமிழ்ப் பாட்டுக்களாயும் மணிப்ரவாளத்தில் ரஹஸ்ய க்ரந்தங்கள் ரூபமாயும் வெளியிட்டும், ப்ரதிவாதி நிரஸனம் செய்தும், உபதேச ரூபமாக ப்ரவசநம் செய்தும் இந்த ஸித்தாந்தத்தை நிலை நிறுத்திய உபகாரத்தை முன்னிட்டு இதை ஸ்ரீதேசிக தர்சனம் என்கிறது. எம்பெருமானாருக்கு மஹாநஸ (திருமடைப்பள்ளி) கைங்கர்யம் செய்து அவரிடமிருந்து ரஹஸ்யார்த்தங்களைப் பலமுகமாக க்ரஹிந்தவரும் வேதாந்தோ தயனர் என்கிற ப்ரஸித்த திருநாமத்தையுடையவருமான *கிடாம்பி ஆச்சான்* (மடைப்பள்ளி ஆச்சான்) மூலமாக அவருடைய புத்ர பௌத்ர பரம்பரையாகக் கிடாம்பி ராமாநுஜப்புள்ளார் வழியாக பெற்ற அர்த்த விஶேஷங்களை ஶிஷ்யர்களுக்கு உபதேசம் செய்தது மாத்திரமன்றிக்கே அவைகளை பிற்காலத்தவர்களும் அறிந்து உஜ்ஜீவிக்க வேண்டும் என்று திருவுள்ளம் பற்றி *ரஹஸ்யங்கள்* எனப்படும் 34 ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்து ஸ்ரீதேசிகன் உபகரித்தமையை முன்னிட்டு *ஸ்ரீதேசிக தர்ஸநம்* என்கிறதாகவுமாம். அன்றிக்கே இந்த ஸம்ப்ரதாயத்திற்கு அஸாதாரணமான த்ரமிடவேதங்களை ஸாக்ஷாத்கரித்து வெளியிட்டருளிய *ஆழ்வார்களின் அவதாரத்தின் பெருமையை யும், திவ்ய ப்ரபந்தங்களின் உத்கர்ஷத்தையும்* க்ரந்தமுகமாக ப்ரமாணோபபத்திகளுடன் ஸ்வாமி நிரூபித்தருளிய உபகார விஶேஷத்தை முன்னிட்டு *ஸ்ரீ தேசிக தர்ஶநம்* என்கிறதாகவுமாம். இந்த ஸித்தாந்தத்தின் பெருமையும் இதை லோகத்தில் பரவச் செய்த ஆசார்யர்களுடைய பெருமையும் ஸ்ரீ தேசிகன் தம்மாலேயே ஸ்ரீ தத்வ முக்தா கலாபத்தில் द्रष्टेऽपह्नुत्यभावादनुमिति विषये लाघव स्यानुरोधात्शः नाथोपज्ञं प्रवृत्तं बहुभिरुपचितं यामुनेय प्रबन्धैः

स्त्रातं सम्यग्यतीन्द्रैरिदमखिलःकशनं दर्सनं नः || என்று அருளிச்செய்யப் பட்டிருக்கிறது. இதன் கருத்து:-- ப்ரத்யக்ஷமாகக் காணப்படும் விஷயங்களை அத்வைதிகள்போல் இல்லை என்று மறுப்பது கிடையாமையாலும், அனுமானத்தால் அறியக்கூடிய விஷயத் தில் வைசேஷாதிகளைப்போல் அநபேக்ஷிகத்தைக் கல்பனை செய்யாமல் லாகவத்தை அனுஸரிப்பதாலும், ஶாஸ்திரங்களைக் கொண்டே அறியவேண்டும் விஷயம் ப்ரமாணங்களுக்கு பாதகமில்லாதிருந்தால், அதை இல்லையென்று சொல்லாமை யாலும், அதாவது ஶாஸ்திரத்துக்கு விரோதமாய் மீமாம்ஸகர் கள் சொல்லும் ஈஶ்வரன் இல்லை என்பது முதலிய அபார்த்தங்களை விட்டுவிட்டபடியாலும் ஸ்ரீமந்நாத முனி களால் ப்ரவர்த்திக்கப்பட்டதும், ஸ்ரீயாமுனாசார்யர் என்கிற ஆளவந்தாரால் ஸித்தித்ரயம் முதலிய ஸூக்திகளினால் விஶேஷமாக வ்ருத்தி செய்யப்பட்டதும், ஸ்ரீபாஷ்யகாரரால் நன்றாக ரக்ஷிக்கப்பட்டதுமான இந்த நம் தர்ஶநம் அஜ்ஞானமாகிற எல்லா இருட்டையும் போக்கடிக்கக் கூடியது - என்பது. இதில் "*நः தர்ஶநம் அகில தமः கர்ஶநம்*" என்கிற பதங்களினால் நம்மால் அருளிச்செய்யப்பட்டிருக்கும் பல க்ரந்தங்கள் இங்கு பரவிய பிறகே இந்த ஸம்ப்ரதாயம் *அகில தமः கர்ஶநம்* என்னும் படியாயிற்று என்கிற அர்த்தமும் த்வனிக்கிறது. அதாவது கலியுகாரம்பத்தில் நம்மாழ்வாரால் ப்ரவர்த்தனம் செய்யப்பட்ட இந்த ஸ்ரீவிஶிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்திற்குக் கால வைபரீத்யத்தினால் க்ஷோபமுண்டாக, "*மதுரகவி முதலாக உண்டான ஸ்ம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும் யோக தஶையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யரானார்*' என்று குருபரம்பரா ஸாரத்திலும்

"अथ पराशरप्रबन्धादपि वेदान्तरहस्यवैशद्यातिशयहेतुभूतैः सद्यः परमात्मनि चित्तरञ्जकतमैः सर्वोपहीव्यैः उपबृंहणैर्मधुरकविप्रभृति संप्रदायपरम्परया नाथमुनेरप्युपकर्तारं कालविप्रकर्षेऽपि परमपुरुषसङ्कल्पात् कदाचिद् प्रादुर्भूय साक्षादपि सर्वोपनिशत्सारोपदेष्टारं पराङ्कुशमुनिं' (பிறகு பராஶரருடைய ப்ரபந்தத்தை விட வேதாந்தங்களின் ரஹஸ்யமான அர்த்தங்களை

மிகவும் விசதமாகத் தெரிந்து கொள்ளுவதற்குக் காரணங்களாயும், அப்பொழுதே பரமாத்மாவின் மனதிற்கு மிகுந்த த்ருப்தியை உண்டு பண்ணக்கூடியனவாயும், அன்றிக்கே பரமாத்மா வினிடத்தில் மிகுந்த ப்ரீதியை உண்டு பண்ணக்கூடியனவாயும், எல்லோராலும் அறியக்கூடியனவாயுமிருக்கிற ப்ரபந்தங்களினால் மதுரகவி முதலாக உண்டான ஸம்ப்ரதாயத்தின் வரிசையினாலும் ஸ்ரீமந்நாத முனிகளுக்கும் உபகாரம் செய்தவரும், வெகு காலம் தாண்டியிருந்த போதிலும் பகவானுடைய ஸங்கல்பத்தினால் ஒரு சமயத்தில் யோக தசையில் ஆவிர்பாவம் செய்து நேரில் எல்லா உபநிஷத்துக்களுக்கும் ஸாரமான அர்த்தத்தை உபதேசம் செய்தவருமான நம்மாழ்வாரை) என்று ஸ்ரீரஹஸ்ய ரக்ஷையிலும் (ஸ்ரீ ஸ்தோத்ர பாஷ்யத்திலும்) அருளிச் செய்யப்பட்டிருக்கிறபடியே கண்ணிநுண் சிறுத்தாம்பு பாசுரங்களை ஆழ்வாரின் அர்ச்சா விக்ரஹத்திற்கு முன்பே பலகால் ஆவ்ருத்தி செய்தருளி ஆழ்வாரை ஸாக்ஷாத்கரித்து அவரிடமிருந்து த்ரமிட வேதங்களையும் மற்ற உபநிஷத்துக்களின் ஸாரமான அர்த்தங்களையும் உபதேசிக்கப் பெற்றவரும், நற்காதலடியவர்களான மேலையகத்தாழ்வான் கீழையகத்தாழ்வான் என்னும் ஶிஷ்யர்களுக்குத் தாளம் வழங்கித் தமிழ்மறை இன்னிசை தந்த வள்ளலும் மூளும் தவ நெறியை மூட்டியவருமான **ஸ்ரீமந்நாதமுனி**களால் ப்ரவர்த்தனம் செய்யப்பட்டதாய், மீளவந்து இன்னும் வினையுடம்பு ஒன்றி விழுந்துழலாது **ஆளவந்தா**ரேனவென்று அருள் தந்து விளங்கிய சீரையுடைய ஸ்ரீ ஆளவந்தாரால் *ஆத்மஸித்தி, ஸம்வித்ஸித்தி, ஈசுவரஸித்தி, ஆகமப்ராமாண்யம், புருஷ நிர்ணயம், கீதார்த்த ஸங்க்ரஹம், சது: ஸ்லோகீ ஸ்தோத்ரம்* எனப்படும் எட்டு ஸூக்திகளினால் வளர்க்கப்பட்டதாய், ஆரண நூல் வழிச்செவ்வை யழித்திடும் ஐதுகர்க்கு ஓர் வாரணமாய் அவர் வாதக்கதலிகள் மாய்த்த பிரானாகிய ஏரணி கீர்த்தி இராமானுச முனியால் (எம்பெருமானாரால்) *ஸ்ரீபாஷ்யம், வேதாந்த ஸாரம், வேதாந்ததீபம், வேதார்த்தஸங்க்ரஹம், ஸ்ரீ கீதாபாஷ்யம், ஶரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம்* எனப்படும் ஒன்பது

ஸூக்திகளினாலும், ஸம்ப்ரதாய ப்ரவசன விசேஷங்களாலும் ப்ரதிவாதி நிரஸனத்தினாலும் நன்றாகப் பரிபாலிக்கப்பட்டதாய் நின்றது இந்த தர்ஶநம். இதற்கு ப்ரதம ப்ரவர்த்தகனான எம்பெருமான் தானே "அன்றிவ்வுலகினையாக்கி அரும்பொருள் நூல் விரித்து நின்று தண்நீள்புகழ் வேங்கடமாமலை மேவிப் பின்னும் வென்றிப் புகழ் திருவேங்கடநாதனென்னும் குருவாய் நின்று திகழ்ந்து மண் மேல் நின்ற நோய்கள் தவிர்த்தனனே' என்கிறபடியே ஸ்ரீதேசிகனாய் அவதரித்து, ஒப்பற்றவனவாயும் நூற்றுக்கு அதிகங்களாயும், ஸம்ஸ்க்ருதம் தமிழ் ப்ராக்ருதம் மணிப்ரவாளம் என்கிற பாஷைகளிலும் காவ்யம் நாடகம் ஸ்தோத்திரம் கத்யம் பத்யம் முதலிய வகைகளிலும் சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் இருப்பனவாயுமுள்ள ஸ்ரீஸூக்திகள் மூலமாகவும் பஹுமுகமான ப்ரவர்த்தநத்தாலும் முன்னாள் புணராத பரமதப்போர் பூரித்தலாலும் ப்ரதிஷ்டாபனம் செய்தபிறகே இந்த ஸித்தாந்தம் 'अखिलतमः कर्षणं दर्शनं नः' என்று உத்கோஷிக்கும்படியான ஏற்றம் பெற்றது என்றபடி.

*தர்ஶநம், மதம், ஸித்தாந்தம்* என்னும் பதங்கள் ஒரே அர்த்தத்தைச் சொல்லுவன. இந்த ஸ்ரீதேசிக தர்ஶநத்தில் ப்ரதிபாத்யமான தேவதையும் கொள்கைகளான அர்த்தவிசேஷங்களும் அநர்க்கங்களான ரத்னம் போன்றவை என்றும் பரம தனமென்றும் அனுஸந்தித்துப்போந்தார்கள் பூர்வாசார்யர்கள். ஸ்ரீஉய்யக்கொண்டாரால் நன்னெறியை உபதேசிக்கப் பெற்ற ஸ்ரீ மணக்கால் நம்பியும் ஸ்ரீமந்நாதமுனிகள் தம் திருப்பேரனான ஸ்ரீஆளவந்தாருக்கு உபதேசம் செய்யும்படி நியமித்த அர்த்த விஶேஷங்களைப் பெரிய நிதியிருப்பதாகச் சொன்னார் என்பது ப்ரஸித்தமிறே. ஶ்ருதியில் பரப்ரஹ்மத்தை நிதியாக உத்ப்ரேக்ஷித்திருப்பதைத் திருவுள்ளம்பற்றி ஸித்தோபாயனான பகவானைப் பெரிய நிதியாக ஸ்ரீதேஶிகன் 'विश्राम्यद्भिरुपर्युपर्यपि दिवानक्तं बहिर्दर्शिभिः अस्मद्देशिक सम्प्रदाय रहितैरद्यापि नालक्षितः। स्वप्राप्तेः स्वयमेव साधनतया जोघुष्यमानः श्रुतौ सत्वस्थेषु भजेत सन्निधिमसौ शान्तावधिः शेवधिः| (सिद्धोपाय शोधनाधिकार निगमन श्लोकः|) (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்: பகல் ராத்திரி

என்கிற வித்யாஸமில்லாமல் எல்லாக் காலத்திலும் இந்த பரமாத்மாவாகிற நிதியின் மேலே இளைப்பாறிக்கொண்டிருந்த போதிலும், அல்லது ஸஞ்சரித்துக்கொண்டிருந்த போதிலும் நம் ஸம்ப்ரதாயத்தையன்றி வேறு ஸித்தாந்தத்தில் நிஷ்டை யுடையவர்களினால், அல்லது வெளியிலிருக்கும் வஸ்துக்களை மட்டும் பார்க்கக்கூடியவர்களினால், அதுவுமன்றிக்கே உபய வேதாந்த ப்ரவசன ஸிம்மாஸனத்தில் முடிசூட்டப்பெற்ற திருக்குருகைப்பிரான் பிள்ளான் பரம்பரையாகவும் யதிவரனார் மடைப்பள்ளி மணமாய் வேதாந்தோதயனர் எனப்படும் மடைப் பள்ளியாச்சான் பரம்பரையாகவும் வந்த ரஹஸ்யார்த்தங்களையும் பெற்ற கிடாம்பிக் குலபதி அப்புள்ளார் ஸம்பந்தமில்லாதவர் களினால் இது வரையில் பார்க்கப்படாமல் இருப்பதாய், தன்னை அடைவதற்குத்தானே ஸாதனமென்று வேதங்களில் உத்கோஷிக்கப்படுகிற எல்லையில்லாத ஹிரண்யநிதி என்று சொல்லப்படும் நிதியானது ஸத்வ குணத்தில் நிஷ்டையுடையவர்களின் ஸமீபத்தை அடைகிறது.) पारंपारंपरीतो भवजलधिभवन्मज्जनानां जनानां प्रत्यक् प्रत्यक्षयेन्नः प्रतिनियतरमासान्निधानं निधानम्| (ஸ்ரீ த்ரமிடோப நிஷத் தாத்பர்ய ரத்னாவளீ - 1 அநாதி காலமாக ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கிக் கிடக்கும் ஜனங்களுக்கு ஒரு கரை போல் இருக்கும் ஆழ்வாருடைய ஸ்ரீ ஸூக்தியானது ஸ்வயம் ப்ரகாசத்துடன் கூடிய பெரிய பிராட்டியாருடன் பிரிவில்லாத எம்பெருமானாகிற நிதியை நமக்கு ப்ரகாசிப்பிக்கட்டும்) नास्ति पित्रार्जितं किञ्चित् न मया किञ्चिदार्जितं अस्ति मे हस्तिशैलाग्रे वस्तु पैतामहम् धनं (வைராக்ய பஞ்சகம் -6 பிதாவினால் சேர்த்து வைக்கப்பட்ட த்ரவ்யமுமில்லை, என்னால் ஸம்பாதிக்கப்பட்டதும் ஒன்றுமில்லை ஆனால் பிதாமஹர் எனப்படும் ப்ரும்மாவின் யாகத்தில் தோன்றியவராய் ஸ்ரீஹஸ்திகிரியில் ஸேவை ஸாதிக்கும் பகவான் பாட்டனாருடைய தனமாக இருக்கிறார்.) என்று நிரூபித்தருளியிருக்கிறார்.

ஆகையினால் இந்த ஸம்ப்ரதாயத்தை *ஸ்ரீ தேசிக தர்ஶந ரத்னம்* என்கிறது. அதாவது ஸ்ரீ தேசிக தர்ஶநம் ரத்னம் போன்ற மஹாநிதி என்கிறபடி. இந்த நிதியை நமக்குக் காட்டிக்கொடுப்பவை ஸ்ரீ

தேஶிக ஸ்ரீஸூக்திகளாகையால் அவற்றை தீபம் என்கிறது. அவற்றின் பெருமையை எடுத்துக்காட்டுகிற இந்நூலை *ஸ்ரீ தேசிக தர்ஶந ரத்னதீப ப்ரகாஶிகை* என்கிறது. அப்படியே ஞானத்தைக் கொடுக்கும் க்ரந்தங்களை தீபங்களாக मानं प्रदीपमिव कारुणिको ददाति,(கருணையையுடைய பகவான் ஶாஸ்திரங்களை விளக்குகள் போல் கொடுக்கிறான்.) என்றும், "வையந்தகளியா வார் கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக.....இடராழி நீங்குகவேயென்று' (முதல் திருவந்தாதி - 1)என்றும், "ஞானச் சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்' (இரண்டாம் திருவந்தாதி - 1) என்றும், சொல்லுகிற ப்ரபந்தங்களை दीपेन केनचित् (ஸ்ரீ தேஹளீஶ ஸ்துதி- 6) என்றும், "ஏற்றி மனத்தெழில் ஞான விளக்கை இருளனைத்தும் மாற்றினவர்க்கு',என்றும், 'நாட்டுக்கிருள் செக நான்மறை யந்தி நடைவிளங்க வீட்டுக்கிடைகழிக்கே வெளிகாட்டும் இம்மெய்விளக்கே' (அதிகாரஸங்க்ரஹம் - 38,50 ) என்றும் நிரூபித்தார்களிறே. அன்றிக்கே ரத்ன என்கிற பதத்தை தீபம் என்பதற்கு விஶேஷணமாக்கி ரத்ன தீபம் என்று யோசிக்கவுமாம். ஸ்படிக மணிமயமான தீபம் தன் ப்ரகாசத்தினால் வஸ்துக்களை ஜ்வலிக்கும்படி காட்டுமாப்போலே இங்கு ஸ்ரீஸூக்திகளும் ஸ்ரீதேஶிக தர்ஶநத்தினுடைய ப்ரபாவாதிஶயங்களை நன்கு எடுத்துக் காட்டுகிறபடியினாலும் அவற்றை *ரத்னதீபம்* என்கிறது. அதுவுமன்றிக்கே ஸ்ரீதேசிகனுடையவும் அவரால் விஶேஷித்து ப்ரவர்த்தனம் செய்யப்பட்ட தர்ஶநத்தினுடையமான பெருமையை எடுத்துக் காட்டுகிறபடியினாலும், அன்றிக்கே ஸ்ரீதேசிகனைப் பார்ப்பதற்கு அதாவது அவருடைய பெருமையை அறிவதற்கு எண்ணை முதலியவற்றின் அபேக்ஷையில்லாத அநர்க்கமான தீபம் போலிருக்கிறபடியினாலும் *ராமானுஜ தயாபாத்ரம்* என்கிற தனியனை *ஸ்ரீ தேசிகதர்சந ரத்னதீபம்* என்கிறதாகவுமாம்

## அவதாரிகை

"नाथोपज्ञं प्रवृत्तं' என்று ஆரம்பிக்கும் ஶ்லோகத்தில் இந்த தர்ஶந ப்ரவர்த்தகர்களாகக் கொண்டாடப்பட்ட

ஸ்ரீமந்நாத ஸ்ரீமத்யாமுன ஸ்ரீமத்ராமானுஜ முனிகளென்ன, ப்ரஹ்மநந்த்யாதிகளுக்குப் பிறகு இந்தக் கலியுகத்தின் ஆரம்பத்தில் இந்த ஸம்ப்ரதாயத்திற்கு ப்ரவர்த்தகரான நம்மாழ்வார் என்ன, காலாந்தரத்தில் இம்மதத்தை ப்ரவசனம் செய்த டங்க,த்ரமிட, குஹதேவ ப்ரப்ருதிகளென்ன, இவர்கள் ப்ரவர்த்தனம் செய்வதற்கு மூலகாரணமாய் அநாதியாய் அவிச்சின்னமாய் அபௌருஷேயங்களாய் இருப்பதனால் உத்க்ருஷ்ட ப்ரமாணங்கள் என்று கொண்டாடப்படுகிற ஸம்ஸ்க்ருத த்ராவிட ரூபங்களான உபய வேதாந்தங்களென்ன, இவற்றை ஓர் ஓர் அவஸரங்களிலே உசிதமான அதிகாரிகளுக்கு உபதேசம் செய்தவனும் இவற்றிற்கு அபஹாராதிகள் பிறந்தபோது மீட்டுக்கொடுத்தவனும் ஹம்ஸ மத்ஸ்ய ஹயக்ரீவ நர நாராயண கீதாசார்யாதி அவதாரங்கள் செய்து, தானே வெளி நின்று தாத்பர்யார்த்தங்களை வெளியிட்டு அருளினவனும் பராங்குச பரகாலாதி ரூபேண ஒரு அபிநவ தசாவதாரம் பண்ணி செய்ய தமிழ் மாலை எனப்படும் த்ரமிட வேதங்களை வெளியிட்டருளினவனுமான எம்பெருமான் என்ன, இவர்கள் நிற்க இவர்களை எல்லாம் அநாதரித்து, ஸ்ரீதேசிகன் ஒருவரையேயிட்டு நிரூபித்துப்போருவதற்குக் காரணம் என்ன என்னில் :-

நமக்குப் பலர் உபகாரம் செய்திருந்தார்களேயாகிலும் அவர்களில் அதிகமான உபகாரம் செய்தவர்களை விஶேஷித்துக் கொண்டாடுவது உசிதமென்று எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே லோக ஹிதார்த்தமாக ஸர்வேஶ்வரன் எடுத்தருளிய விபவாவதாரங்களான மத்ஸ்ய கூர்மாதி முப்பத்துச் சின்ன ரூபங்களில் தஶாவதாரங்களென்றும், அவை தம்மிலும் ஸர்வாதிகாரமான ப்ரபத்தி ஶாஸ்திரத்தை உபதேஶித்து அருளிய அவதாரங்களை ஞானப்பிரான் என்றும், சக்ரவர்த்தித் திருமகன் என்றும், கீதாசார்யன் என்றும் விஶேஷித்துக் கொண்டாடுகிறோம். இதே ந்யாயத்தை அனுஸரித்து இங்கு ப்ரஸ்தாவிக்கப்பட்ட எம்பெருமான் தொடக்கமாக எம்பெருமானார் பர்யந்தமான குரு பரம்பரை யிலுள்ள ஆசார்யர்கள் தனித்தனியாகவும் சேர்ந்தும் செய்திருக்கும் உபகாரங்களையும்

சீர் தூக்கிப் பார்த்த பூர்வர்கள் ஸ்ரீதேஶிகன் செய்தருளிய உபகாரங்களே உயர்ந்தவை என்று கொண்டு அவரை மற்றைய ஆசார்யர்களைவிட அதிகமாகக் கொண்டாடவேண்டுமென்று நிர்ணயித்தார்கள். பொதுவில் ஆசார்யன் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற குரு ஆசார்யன் தேசிகன் என்கிற பதங்கள் ஸ்ரீ தேஶிகன் ஒருவரையே முக்யமாகச் சொல்லும் என்றும், மற்றவர்களிடம் ஔபசாரிகமாக ப்ரயோகிக்கப்படுகிறதென்றும், यस्मिन्ननन्य सामान्या वेदान्ताचार्यता गुरौ। यथा पुरुषता विष्णौ तस्मिन् न्यस्त भरोस्म्यहं॥ (ஸப்ததி ரத்னமாலிகை - 7,) देशिको निगमान्तार्यात् तद्भक्तात् सात्त्विलो जनः। तत्सूक्तोश्च प्रबंधोन्यो नास्ति नास्ति महीतले॥ (*வைபவ ப்ரகாசிகை - 149*) आचार्यत्वोपायुक्ता मुनिगण विहिता देशिकैः स्वेन चोक्ताः। सर्वे भद्रा गुणा स्युः समुदित विभवाः सर्वतन्त्र स्वतन्त्रे। शिष्यत्वे चोपायुक्ता अपिच गुणगणाः कूरनाथे यथा स्युः नान्यत्राचार्यवर्गे कति च न गुणाः प्रायशस्तत्र दृष्टाः॥ (ஸப்ததி ரத்னமாலிகை - 34) என்றிவை முதலியவற்றில் அனுஸந்தித்தார்கள். இவற்றின் கருத்து-எப்படி பகவான், புருஷன் என்கிற பதங்கள் ஶ்ரிய;பதியான எம்பெருமான் ஒருவனிடத்திலேயே முக்ய வ்ருத்தியையுடையனவாய், அதாவது அவனையே முக்யமாகச் சொல்லுகின்றனவாய், மற்றவர்களிடத்தில் கௌணவ்ருத்தியை உடையனவாய் இருக்கின்றனவோ, அதாவது அவர்களிடங்களில் சிற்சில குணங்கள் இருப்பதினால் ஔபசாரிகமாக ப்ரயோகிக்கப் படுகின்றனவோ, அதைப் போலவே தேசிகன் ஆசார்யன் முதலிய பதங்கள் ஆசார்ய லக்ஷணங்களைப் பூர்ணமாகவுடைய ஸ்ரீதேஶிகன் ஒருவரிடத்திலேயே முக்ய வ்ருத்தியை உடையனவாய், மற்றவர்கள் விஷயத்தில் ஔபசாரிகமாக ப்ரயோகிக்கப்படுகின்றன, என்பது. ஆகையினால் ஸ்ரீதேஶிகனை விஶேஷித்துக் கொண்டாடுவது யுக்தமேயாயிற்று.

அன்றிக்கே ஸர்வேஶ்வரன் தானே தன்னால் ப்ரவர்த்திக்கப் பட்டதான இந்த ஸம்ப்ரதாயத்திற்கு ப்ரகடர்களும் ப்ரச்சன்னர் களுமான பாஷண்டிகளால் உபரோதம் வாராமைக்காக, "பீதக வாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து' (*பெரியாழ்வார் திருமொழி 5-2-8*) என்றும் साक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनूं। मग्नानुत्तरते

लोकान् कारुण्यात् शास्त्रपाणिना॥ *(ஜயாக்ய ஸம்ஹிதை)* என்றும் சொல்லுகிறபடியே அகஸ்த்ய ஸேவிதமான தேசத்திலே அனேக தேசிகோபதேசத்தாலே அவதரித்தருளி, அதாவது த்ரமிட தேசத்திலே பல ஆசார்ய ரூபமாக அவதரித்து, 'अध्यासीन तुरंगवक्त्र विलसत्जिह्वाग्र सिंहासनादाचार्यादिह देवतां समधिकामन्यां न मन्यामहे। यस्यासौ भजते कधाचिदाजहद्भूमा समुत्ताराय नारायणः॥ *(ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரம்)* என்கிறபடியே ப்ரஸித்தங்களான ராமக்ருஷ்ணாத்யவதாரங்களில் நிறைவேற்றமுடியாத ஸகல சேதேநோஜ்ஜீவனத்தை ஆசார்ய ரூபமாக அவதரித்தே செய்தபடியினால் பகவானை விட ஆசார்யர்கள் விசேஷித்து பஹுமானம் செய்ய ப்ராப்தரானார்கள். அப்படிப்பட்ட ஆசார்ய ரூபாவதாரங்களில் செய்தருளிய சேதநோஜ் ஜீவனோபகாரகமான கார்யங்களில் ஸ்ரீதேசிகனாயவதரித்துச் செய்தருளிய உபகார விஶேஷங்களே விஞ்சியிருக்கிறபடியினால் இவரை மற்றெல்லோரையும் விட அதிகமாகக் கொண்டாடுவது யுக்தமேயாயிற்று என்றபடியாகவுமாம்.

அப்படி இந்த அவதாரத்தில் செய்தருளிய உபகார விஶேஷம் எது என்னில்:- இந்த *வென்றி புகழ்த் திருவேங்கட நாதனெனும் குருவாய்* அவதரித்தருளிய பிறகேயிறே உபய வேதாந்தங்கள் ஓர் புதுவொளி பெற்று நின்றன. ஶரணாகதியாகிற உபாயம் ஸர்வருக்கும் ஸகல பல ஸாதனமாகவற்றாய் நின்றது. *அந்தணர் அந்தியர் எல்லையில் நின்ற அனைத்துலகும் நொந்தவரே முதலாக நுடங்கி அனன்னியராய் வந்தடையும்* வகை உலகத்தில் கேவலம் ஏட்டுச் சுரைக்காயாகாமல் அனுஷ்டானபர்யந்தமாய் ஸ்தாபிக்கப்பட்டு நின்றது. ஶ்ரிய:பதியான எம்பெருமான் முதலாக ஸாக்ஷாத் ஆசார்யரான கிடாம்பி அப்புள்ளார் வரையிலுமுள்ள இவர் ஒருவரே கொள்கலமாய் நின்றார். திவ்யப்ரபந்தங்களினுடைய உத்கர்ஷத்தையும், அவையே நமக்கு எல்லா அர்த்தத்தையும் சித்த ரஞ்ஜனத்துடன் வெளியிடுகின்றன என்பதையும், ஆழ்வார்கள் எல்லோரும் பகவானுடைய அவிநவ தஶாவதார ரூபர்கள் என்றும், உபய

வேதாந்தங்களும் ஶ்ரிய:பதியான எம்பெருமான் தானே உபாயமும் உபேயமும் என்கிற ஒரே அர்த்தத்தையே ப்ரதிபாதிக்கின்றன என்பதையும், ப்ரபத்திக்கல்லது ஸர்வேசுவரன் பரம புருஷார்த்தம் கொடுப்பதற்கு இசையான் என்பதையும், இந்த ப்ரபத்தியாகிற உபாயத்தை அனுஷ்டிக்குமவர்கள் எந்த ஜாதியராயினும் மறு ஜன்மமின்றியே மோக்ஷமடையலாம் என்பதையும் உபதேசித்தருளியவரும் க்ரந்த முகமாய் ஸ்தாபித்தருளியவரும் இவர் ஒருவரேயாவர். எம்பெருமானார் முதலிய பூர்வாசார்யர்களின் ஸூக்திகளுக்கெல்லாம் வ்யாக்யானம் இட்டருளி அவை எல்லோருக்கும் பயன்படுமாறு செய்தவர் இவரே. எம்பெருமானார் திருமடைப்பள்ளி வந்த மணத்தை எல்லோரும் ஸ்வாதுதமமாய் புஜிக்கும்படி பரிமாறியவர் இவரே. ப்ரபத்தியில் ஸர்வ பல ஸாதனத்வத்தை நிலைநாட்டியருளியவர் இவரே. ஸந்யாஸ ஆஶ்ரமத்தாருக்கே மோக்ஷம் என்று பரவிவந்த கொள்கையைக் கண்டித்து விரக்தி பிறந்தவன் ஸந்யாஸ ஆஶ்ரமத்தை அங்கீகரிக்கக் கடவன் என்று விதிக்கப்பட்ட ஓர் ஆஶ்ரமத்தை மோக்ஷத்திற்கு அவிநாபூதம் என்பது பொருந்தாது, எந்த வர்ணத்தாராயினும் எந்த ஆஶ்ரமத்தாராயினும் எந்த வயதினராயினும் எப்படிப்பட்ட தாழ்ந்த ஸ்திதியில் இருந்தனராயினும் எவ்வளவு பாபிஷ்டனாயினும் எம்பெருமான் திருவடிகளில் ஸர்வாதிகாரமான அங்க பஞ்சக ஸம்பன்னமான ப்ரபத்தியைத் தானேயோ ஆசார்யாதிகள் மூலமாகவோ அனுஷ்டிக்கப்பெற்றவன் மறுபிறவியின்றியே மோக்ஷமடைவான் என்று ப்ரபத்தியின் ப்ரபாவத்தை நாட்டியவர் இவரே. இந்த உபாயத்தினுடையவும் உபாய நிஷ்டர்களினுடையவுமான ப்ரபாவத்தை அளவு கடந்தும் அளவுபடுத்தியும் நிரூபிப்பதைக் கண்டித்து ஶாஸ்திரம் இசைந்த வகையில் வரம்பிட்டருளியவர் இவரே. லோகத்தில் ஜனங்களுடைய பின்னருசியை அனுஸரித் து அவர்கள் எல்லோருக்கும் பயன்படுமாறு ஸ்தோத்திர ரூபமாயும், நாடக ரூபமாயும், காவ்ய ரூபமாயும், கத்ய ரூபமாயும் ஸம்ஸ்க்ருதம், தமிழ், மணிப்ரவாளம், ப்ராக்ருதம் என்கிற பாஷைகளிலும் ஸங்க்ரஹமாயும் விஸ்தாரமாயுமுள்ளனவாய்

ஓரொன்றே வானேறப் போமளவும் வாழ்வைத் தருமவையாயுள்ள நூற்றுக்கும் மேற்பட்டிருக்கிற ஸ்ரீஸூக்திகளை வழங்கிய வள்ளல் இவரே. இப்படிக்கீழ் நிரூபித்தபடி லோகோஜ்ஜீவனார்த்தமாய் இவர் செய்தருளியதெல்லாம் அல்பமானவை என்னும்படி இருக்கும் இவர்தாமே தம்முடைய அவதாரத்தின் முக்ய ப்ரயோஜனமெனக் கருதியதாய், ப்ரபதன கலா ஜன்ம ஜலதியான க்ஷீரஸமுத்திரத்திலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட அம்ருதம் என்னலாம்படியான ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் என்னும் ஸ்ரீஸூக்தியை அருளிச் செய்த உபகார விஶேஷம். ஆக இவர் இந்த லோகத்தில் அவதரித்து மண் மேல் நின்ற நோய்களைத் தவிர்த்திராமல் இருந்தால் विष्णुर्दोषैक भोक्ता व्यसनपरवशः श्रीश्चजीवः शठारिः नित्यं संसारभङ्गी शरणवरणतो यामुनार्योनुशेते। जगुस्साध्योपायं नियतफलदायितवरहितं दुरक्तं कैवल्यं तदपि ननु पर्याय निरयं। तथा विष्वक्सेनं त्रिभुवनविनिर्माण निपुणं हरेरर्थेपापं त्वितिचा कविलोकार्कचारितं॥ वेदान्तोदयनस्य तस्य च बतव्याप्यत्वमुत्प्रेक्षितं लोकेस्मिन् यदि नोदियाय भगवान् वेदान्तविद्यागुरुः॥ व्यासेवै व्यसानुतः स च शुकः शोकाब्धि मग्नान्कृति टङ्काद्याः बहुसङ्कटे निपतिताः वाल्मीकिरुन्मूलितः॥ என்னப்பட்ட தசையை இந்த லோகம் அடைந்திருக்கும். அதாவது எம்பெருமான் தன் தயையின் மிகுதியினால் தோஷத்தைப் போக்யமாய்க் கொண்டு எப்பொழுதும் துக்கியாய் நிற்பான் - தன்னுடைய ஸம்பந்தத்தினாலே எம்பெருமானுடைய பரத்வத்தை ஸ்தாபிக்கிறவளும் மற்ற தேவதைகளுக்கு அவரவர் களுடைய பதங்களையும் ஐஶ்வர்யாதிகளையும் தன்னுடைய கடாக்ஷலேசத்தினால் தந்தருள்பவளுமான பெரிய பிராட்டியார் ஒரு ஜீவனாய் நிற்பாள் -த்ரமிடோபநிஷத் த்ரஷ்டாக்களான ஆழ்வார்கள் நித்யஸம்ஸாரிகளாய் நிற்பர் -- பெரிய முதலியார் ப்ரபத்தியை அனுஷ்டித்தும், அதற்காகப் பின்பு அனுஶயித்தும் தடுமாறிக்கொண்டிருப்பர் - எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யத்தைப் பரரஞ்ஜனார்த்தமாயும் கத்யத்தை ஆர்த்தோபச் சந்தனமாயும் (கீதா பாஷ்யத்தை வேண்டாச்சுமை எடுப்பிப்பதாயும்) நிரூபித்தவராவர் - ஸ்ரீபாஷ்யகாரருடைய நியமனத்தினால் திருவாய்மொழிக்கு முதல் வ்யாக்யானமான ஆறாயிரப்படியை

அருளிச்செய்தவரும் அவர்தம்மாலேயே உபய வேதாந்த ப்ரவசன ஸிம்மாஸனத்தில் அபிஷிக்தருமான திருக்குருகைப் பிரான்பிள்ளான் ய:கஶ்சந என்னும்படியாவர் - ஸாத்யோபயமான ப்ரபத்தி பலன் கொடாததாகும் - கைவல்யமும் நரக ப்ராய மாகும் - விஷ்வக்ஸேநர் ஜகத்ஸ்ருஷ்டி கர்த்தாவாய் விடுவர் - பகவான் பொருட்டு கெட்ட கர்மங்களையும் செய்யும்படியாம் -- எம்பெருமானாருடைய மடைப்பள்ளி மணம் பெற்ற வேதாந்தோதயனர் விலக்கப் பட்டவராவர் - ஸம்ப்ரதாய துரந்தரர்களின் கதியே இவ்வாறாயின் வ்யாஸ சுக டங்காதிகளைப் பற்றிச் சொல்லவேண்டியதில்லையல்லவா! இதன் விஸ்தாரம் மேலே நிரூபிக்கப்படுகிறது. ஆகையினால் கீழ்க்கூறியபடியே செய்த உபகார விசேஷத்தின் ஏற்றத்தாழ்வினால் எம்பெரு மானுடைய அவதாரங்களில் சிலவற்றை விஶேஷித்து ஆதரம் செய்கிறாப்போலேயும், அவனுடைய அபிநவ தஶாவதார பூதர்களான ஆழ்வார்களில் பராங்குச பரகாலர்களை விசேஷித்து ஆதரிக்கிறாப்போலேயும், வாக்ய குரு பரம்பரையில் அந்தந்த ஆசார்ய ரூபத்தில் செய்தருளிய உபகார விசேஷத்தை முன்னிட்டு ஸ்ரீ, ஸ்ரீமத், ஸ்ரீமதே என்கிற விசேஷணங்களினால் சிலரை விசேஷமாய் ஆதரிக்கிறாப்போலேயும், ஸ்ரீதேசிகனை விசேஷமாகக் கொண்டாடுவது யுக்தமாயிற்று என்பது மாத்திர மல்லாமல் நமது கடமையுமாயிற்று.

அன்றிக்கே மற்ற எல்லா ஆசார்யர்களுடையவுமான கடாக்ஷத்திற்கு ப்ரதான பாத்திரராய் இவர் நிற்கிறபடியினால் இவரை விசேஷித்துக் கொண்டாடும்படியாயிற்று என்ற படியாகவுமாம். இதனுடைய ப்ரகாரம் மேலே ராமானுஜதயாபாத்ர ஶப்தார்த்தத்தில் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

அதுவுமன்றிக்கே 'पूर्वोत्पन्नेषु भूतेषु तेषु तेषु कलौ प्रभुः। अनुप्रविश्य कुरुते यत्समीहितमच्युतः'॥ (விஷ்ணு தர்மம் 10.52) என்கிறபடியே ஏற்கனவே அவதரித்திருக்கும் சில ஜீவ விஶேஷங்களை அதிஷ்டானம் செய்து சில அதிஶயித கார்யங்களை நடத்துவதும் விபவபேதம் என்று அறுதியிட்டிருக்கிறபடியே பண்டு அவதரித்திருந்த

பாட்டுக்குரிய பழைய ஸூரிகளான ஆழ்வார்களையும் மற்ற ஆசார்யர்களையும் அனுப்ரவேசித்து த்ரமிட வேதப்ரவர்த்தனம் முதலியவற்றைச் செய்தாப் போலன்றிக்கே, एतत्व्रतं मम (ராமாயணம் -யுத்த. 18-33) वेदविदेह चाहं (கீதை 15-15) मामेकं शरणं व्रज (கீதை 18-66) இத்யாதிகளை உத்கோஷித்த ராமக்ருஷ்ணாதி ரூபனாய் நின்ற எம்பெருமான் போலே कौशिक इव राघवं त्वां पुरस्कृत्य (ஸ்ரீஸங்கல்ப ஸூர்யோதம் அங்கம் 2) वेङ्कटेशावतारोयं (வேதாந்த தேசிகன் மங்களாசாசனம் -4)

'அன்றிவ்வுலகினையாக்கி அரும் பொருள் நூல் விரித்து
நின்று தண்நீள் புகழ் வேங்கட மாமலை மேவிப்பின்னும்
வென்றிப் புகழ் திருவேங்கடநாதனெனும் குருவாய்
நின்று நிகழ்ந்து மண் மேல் நின்ற நோய்கள் தவிர்த்தனனே'
(பிள்ளையந்தாதி -5)

என்கிறபடியே அவனுடைய ஸாக்ஷாத் அவதாரமாய் நின்று உபய வேதாந்த ப்ரவசனம் செய்தருளிய ஸ்ரீதேசிகனை மற்ற ஆசார்யர் களை விட விசேஷித்துக் கொண்டாடுவது யுக்தமேயாகும் என்ற படியாகவுமாம்.

**தனியன் ஶப்தார்த்தம்**

பூர்வாசார்யர்களினுடையவும் அவர்களுடைய ஸ்ரீஸூக்தி களினுடையவும் ப்ரபாவத்தில் ஈடுபட்ட நம் முன்னோர்கள் ஓரோர் அவஸரங்களில் வெளியிட்டிருக்கும் ஶ்லோகங்களும் பாட்டுக்களும் பலவுள. இவற்றைத் *தனியன்* என்று சொல்லுகிறது. *தனி* என்னும் பதத்துடன் *அன்* என்னும் சாரியை சேர்த்துத் *தனியன்* என்றாயிற்று. அப்படியே தமிழ் அகராதியிலும் "*ஒரு நூல் அல்லது ஆக்கியோனைப் புகழ்ந்து கூறும் தனிச்செய்யுள், குரு ஸ்தோத்திரமான ஒற்றை ச்லோகம்*" எனக் கூறப்பட்டிருக்கிறது. தனி - ஒப்பற்றது, ஒன்றின் மஹிமையை விசேஷித்துச் செ ால்லுகிறது என்றும் பொருள் கூறலாம். அந்தந்த ஸூக்திகளையும் ஆசார்யர்களையும் அனுஸந்திக்கும் காலங்களில் எல்லாம் அந்தந்தத் தனியன்களை அனுஸந்திப்பது ஸம்ப்ரதாயமாகும்.

***ஸ்ரீதேசிகன் விஷயமான தனியன்களும்***

## அவற்றின் ஏற்றமும்

ப்ரவ்ருத்தி தர்மங்களை விட நிவ்ருத்தி தர்மங்கள் ஶ்ரேஷ்டமானாற் போலவும், பல வகைப்பட்ட யோகங்களில் வஸுதேவ நந்தன விஷயமான யோகங்கள் ஶ்ரேஷ்டமானாற் போலவும், பகவத் விஷயமான அநந்தங்களான மந்திரங்களில் வ்யாபக த்ரயங்களும் ரஹஸ்ய த்ரயங்களும் ஶ்ரேஷ்டமானாற்போலவும் अत्र परत्र चापि नित्यं यदीय चरणौ शरणं मदीयं (ஸ்ரீஆளவந்தார் ஸ்தோத்ரம் -2) என்றும், "*குருக்கள் குழாங்கள் குரை கழற் கீழ் மாறுதலின்றி மகிழ்ந்தெழும் போகத்து மன்னுவமே*' (அதிகார சங்க்ரஹம் 29) என்றும், "*குருக்கள் அடி சூடி மன்னும் குற்றேவல் அடியவர்தம் குழாங்கள் கூடி*' (ஸ்ரீ பரமதபங்கம் 49) என்றும், '*தத்துவங்கள் எல்லாம் தகவால் அறிவித்து முத்தி வழி தந்தார் மொய்கழலே - அத்திவத்தில் ஆரமுதம் ஆறாம் இரு நிலத்தில்*' (அம்ருத ரஞ்ஜனீ 9) என்றும்,"*பகவத் கைங்கர்யமும் பாகவத கைங்கர்யமும் சேர அனுஷ்டிக்க அரிதான போது பரம புருஷார்த்த காஷ்டையான பாகவத கைங்கர்யமே உபாதேயதமம், இவை இரண்டிலும் ப்ரதானம் ஆசார்ய கைங்கர்யம்*' (ஸ்ரீரஹஸ்ய ரத்னாவளி 20,21) என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானை விட ஆசார்யர்கள் உத்க்ருஷ்டர்களானார் போலவும், ஆசார்யர்களுள் ப்ரதானமான ஸ்ரீதேசிகன் விஷயமான தனியன்கள் மற்ற ஆசார்யர்களுடைய தனியன்களை விட ஶ்ரேஷ்டமாயிருக்கும்.

இப்படி உத்கர்ஷம் பெற்ற தனியன்கள் பலவுள. ஆனாலும் ஜ்ஞாதவ்யார்த்தங்களை விசதமாய் ப்ரதிபாதிக்கிறபடியினால் ரஹஸ்ய த்ரயங்கள் ஓர் ஏற்றம் பெற்றிருக்கிறாப்போலே ஸ்ரீதேசிகனுடையவும் அவருடைய ஸ்ரீஸூக்திகளினுடையவும் பெருமையை விசேஷித்து நிரூபிக்கிற மூன்று தனியன்கள் ஓர் விஶேஷ ஏற்றத்தைப் பெற்று நிற்கும்.

அவை:

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किक केसरी।
वेदान्ताचार्यवर्योमे सन्निधत्तां सदा हृदि॥

என்று *நயினாராசார்யர்* அருளிச்செய்த தனியனும்,

"சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்

பாரொன்றச் சொன்ன பழமொழியுள் - ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு'
என்று *ஸ்ரீபிள்ளை லோகாசார்யர்* அருளிச்செய்த தனியனும்,
रामानुज दयापात्रं ज्ञान वैराग्य भूषणं। श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्तदेशिकम्॥
என்று *ஸ்ரீப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர்* அருளிச்செய்ததும் மேலே வ்யாக்யானம் செய்யப்படுவதுமான தனியனும்.

### *ரஹஸ்யத்ரய ஸாத்ருப்யம்*

இவை திருமந்திரம் த்வயம் சரமஶ்லோகம் எனப்படும் ரஹஸ்யத்ரயத்திற்கு ஸத்ருஶமாயிருக்கும் என்று நம் பூர்வர்கள் அனுஸந்திப்பார்கள்.

இது எங்ஙனே என்னில்:-- "*இத்திருமந்திரத்திற்கு ப்ரவர்த்தகனுமாய் ப்ரதிபாத்யனுமாயிருக்கிற ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான நாராயணன்*' என்றும், "*இம்மந்திரத்திற்கு த்ரஷ்டாவுமாய் தேவதையுமான*' என்றும், (ஸ்ரீரஹஸ்யத்ரய ஸாரம் - திருமந்திராதிகாரம் ) "*இத்திருமந்திரத்தை ஸர்வேஶ்வரன் ஸ்ரீ நாரத பகவானையிட்டு ஸ்ரீபுண்டரீகனுக்கு உப தேசிக்க*' என்றும், "*இம்மந்திரத்தைத் திருமங்கையாழ்வாருக்கு ஸர்வேஶ்வரன் தானே உபதேசித்தான்*' என்றும் (ஸ்ரீரஹஸ்ய த்ரய ஸாரம் ) சொல்லுகிறபடியே மந்திரத்திற்கு விஷயமான ஶ்ரிய:பதியான நாராயணன் தன்னாலேயே ப்ரவர்த்திதமானது என்கிற ஏற்றம் பெற்றது திருமந்திரம். அதைப் போலவே "துளங்கு நீண் முடி' என்கிற பெரிய திருமொழிப் பாட்டில் (பெரிய திருமொழி 5-8-9) "வளம்கொள் மந்திரம் மற்றவற்கு அருளிச்செய்தவாறு' என்பதினால் பரகாலனால் ஸூசிப்பிக்கப்பட்டிருப்பதும், ஆசார்ய த்வாத்ரிம்ஶத் என்கிற ஸ்தோத்திரத்தில்

मानार्हं महतां मलीमराधिकां वैदेशिकं देशिकं वन्देहं सततं यदीयमतालं श्रीमानितीमं मनुमा
पूर्वाचार्यकृतीः कलौ भुवि नृणां ब्रूहीति समपृच्छते राज्ञे श्रीश उपादिषद्वशगिरौ श्रेयः प्रदोऽसाविति॥

("கலியுகத்தில் பூமியில் மனிதர்களுக்குப் பூர்வா சார்யர்களினுடைய உயர்ந்த ஸ்ரீஸூக்தியை உபதேசிக்கக்

கடவீர்' என்றுகேட்ட தொண்டைமான் சக்கரவர்த்திக்கு ஸ்ரீநிவாஸன் திருவேங்கடமலையில் இதுதான் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியதென்று சொல்லி, ஸ்ரீமாந் என்று ஆரம்பிக்கும் எந்த ஆசார்யனுடைய விஷயமான நிகரற்ற மந்திரத்தை உபதேசித்தாரோ, அப்படிப்பட்ட மேன்மை வாய்ந்தவரும் பெரியோர்களினால் கௌரவிக்கத் தக்கவரும் கெட்ட புத்திகளிருக்கிற ஊரிலும் கிட்டாதவருமான ஸ்ரீதேசிகனை நான் எப்பொழுதும் ஸேவிக்கிறேன்) என்று ஸ்பஷ்டமாக அருளிச்செய்யப் பட்டிருப்பதுமான *ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய:* என்னும் தனியனும் திருவேங்கடமுடையானால் ஸர்வ ஶ்ரேயஸ்ஸுக்களையும் தரக்கூடியது என்று ப்ரவர்த்திக்கப்பட்டதாகையினால் திருமந்திரத்திற்கு ஒப்பானது.

ஸ்ரீமந் ந்யாஸ வித்யைக்குக் கரண மந்திரமாய்க் கொண்டு ஒருதரம் உச்சரிக்கப்பட்டதாய் மோக்ஷத்தைக் கொடுத்து, பிறகு ஸ்வயம் போக்யமாய் இருக்கும் ஆகாரத்தினால் எப்பொழுதும் அனுஸந்திக்கப்படுகிற த்வயம் போலே இருக்கும் *ராமானுஜ தயாபாத்ரம்* என்று ஆரம்பிக்கும் தனியன்.

அதாவது இந்தத் தனியனில் ஸ்ரீதேசிகனை ஸேவிக்கிறேன் என்றனுஸந்திக்கப்படுகிறபடியினால் அவருடைய உபதேஶ ஸாரமான ப்ரபத்தியை அனுஷ்டிப்பது ஸித்திக்கும். பிறகு ஶரீரத்தோடே இங்கிருந்த நாள் नित्यं ब्रूते निशयमति च साधू सुव्याहृतानि (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்) "வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது', (நான்முகன் திருவந்தாதி 63) "சீர் கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ் துயரை என் நினைந்து போக்குவரிப்போது?'(பெரிய திருவந்தாதி 86 ) என்கிறபடியே இவனுக்கு உத்தரக்ருத்யமான திவ்ய ப்ரபந்தங்களின் அனுஸந்தானத்தை ப்ரதிதினமும் செய்யும்பொழுது இத்தனியனை ஸேவிக்கிறபடியினால் இது த்வயத்திற்கு ஸத்ருஶமாயிற்று.

'மோக்ஷ ஸாதனமாக விதிக்கப்பட்ட கர்ம யோகம், ஜ்ஞான யோகம், பக்தி யோகம் இவைகளை அனுஷ்டிக்க ஶக்தியில்லாமல் நிற்கிற நீ என்னை ஒருவனையே ஶரணமாக அடை, நான்

உன்னுடைய எல்லா பாபங்களையும் போக்கி உன்னை முக்தனாக்குகிறேன், நீ ஒன்றுக்கும் ஶோகிக்க வேண்டாம் என்று' சொல்லுகிறது சரமஶ்லோகம். அதைப் போலவே "சீர் ஒன்று தூப்புல்' என்றாரம்பிக்கும் தனியனும், "இதுகாறும் ப்ரபத்தி விஷயத்தில் நிஶ்சயமான ஞானம் பெறாமையினால் அவ்வுபாயத்தை அனுஷ்டிக்காமல் இத்தாரணியில் இன்னும் இருந்து வருகிற ஜனங்களைக் குறித்து, "வானேறப் போமளவும் வாழ்வைப் பெறுவதற்கு ஆசைப்பட்டீர்களேயாகில் அதை உங்களுக்கு ஸாதித்துக் கொடுப்பதற்கு திருவேங்கடமுடையான் இந்த ஆசார்யரூபமாய் அவதரித்து ஒரு அஸத்ருஶமான சீர் பெற்று, ஸர்வலோகோஜ்ஜீவன ஹேதுக்களுக்களாக அருளிச்செய்திருக்கும் பழமொழிகளில் ஓரொன்றே அமையும்' என்று ஆஶ்வாஸம் செய்கிறபடியினால் இது சரமஶ்லோகத்திற்கு ஸத்ருஶமானது. சரம ஶ்லோகம் ஸ்ரீக்ருஷ்ணனாய் அவதரித்த காலத்தில் 'शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नं' என்று நேரில் பகவானை ஆஶ்ரயித்த அர்ஜுனனைக் குறித்து உபதேசிக்கப் பட்டதேயாயினும், உபதேசித்தவன் ஸர்வருக்கும் பொதுவாகையினாலே அவனால் உபதேசிக்கப்பட்ட உபாயமும் எல்லோருக்கும் பொதுவானதென்றும் அர்ஜுனன் வ்யாஜம் மாத்திரமென்றும் அறியத்தக்கது என்றும் பின்புள்ளார் நிர்வஹிக்கவேண்டும்படி நின்றது சரமஶ்லோகம். அப்படிப்பட்ட ஶ்ரமம் இத்தனியன் விஷயத்திலில்லை என்பது ஏற்றம்.

2) அன்றிக்கே "இவை மூன்றிலும் தனித்தனியே எல்லா அர்த்தங்களையும் ஶாப்தமாகவும் ஆர்த்தமாகவும் காணலாமாகிலும் ஓரொன்றிலே ஓரொன்றுக்கு நோக்கா யிருக்கும்' (ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரம் திருமந்திராதிகாரம்) என்கிறபடியே ரஹஸ்யத்ரயங்களுக்கு ப்ரயோஜன விஶேஷங்கள் இருக்கிறாப்போலே இம்மூன்று தனியன்களும் ஸ்ரீதேசிகனுடைய பெருமையை தனித்தனியே நிரூபித்தாலும் ஒவ்வொன்றுக்கும் அப்பெருமையில் ஒரு ஆகாரத்தை விஶேஷித்து நிரூபிப்பதிலே நோக்கு இருப்பதினால் இவற்றை ரஹஸ்யத்ரய ஸத்ருஶங்கள் என்கிற தாகவுமாம். அதாவது - *ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய:* என்னும் தனியன்

ஸ்வாமியின் அவதார வைலக்ஷண்யத்தை நிரூபிப்பதிலும், *ராமாநுஜ தயாபாத்ரம்* என்னும் தனியன் பூர்வாசார்யர்களினுடைய பூர்ணமான க்ருபைக்கு ஒரு கொள்கலமாய் இருந்தமையை நிரூபிப்பதிலும், சீரொன்று தூப்புல் என்னும் தனியன் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளின் வைலக்ஷண்யத்தை நிரூபிப்பதிலும் முக்யமான நோக்கத்தையுடையவை என்பது நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது என்றபடி.

(3) அதுவுமன்றிக்கே , "இவை மூன்றும் நமக்கு ஜ்ஞான அனுஷ்டான பல நிதானங்களாய்க் கொண்டு தாரக போஷக போக்யங்கள்." 'व्यक्तं हि भगवान् देवः साक्षान्नारायणः स्वयम् । अष्टाक्षर स्वरूपेण मुखेषु परिवर्तते ॥ (நாரதீயம் 1-22) என்கிறபடியே தேஶிக ஜிஹ்வையிலே இருந்து ஶிஷ்ய ஹ்ருதய குஹாந்தகாரத்தை கழித்து பரஶேஷதைகரஸமான பரிசுத்த ஸ்வரூபத்தை வெளியிட்டு ஸ்த்தாலாபத்தைப் பண்ணுகையாலே திருமந்திரம் தாரகம். சரமோபாயத்திலே ப்ரவர்த்திக்கும்படியான ஜ்ஞானவிஶேஷ உபாயஹேது வாகையாலே ஶ்ரோதவ்ய ஶேஷமில்லாதபடி உபாயோபதேஶ பர்யவஸாநமான சரம ஶ்லோகம் போஷகம். ஸக்ருதுச் சாரணத்தாலே பரமபுருஷார்த்த ஹேதுவாய்க் கொண்டு ஸதாநுஸந்தானத்தாலே க்ருதார்த்தனாக்குகையாலே த்வயம் போக்யம்" என்கிறபடியே தாரக போஷக போக்யங்களாய் நிற்கும் ரஹஸ்ய த்ரயங்கள் போலே இவை மூன்று தனியன்களும் நிற்கிறபடியால் இவற்றை ரஹஸ்யத்ரய ஸத்ருஶங்கள் என்கிறதாகவுமாம். அதாவது - ஸ்வரூப ஜ்ஞானத்தை உண்டாக்கும் திருமந்திரம் போலே ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்னும் தனியன் ஜ்ஞானத்தைக் கொடுக்கிறபடியினால் தாரகம் எனப்படும். அதாவது இத்தனியனில் வேதாந்தாசார்யரான ஸ்ரீதேசிகனை நமது ஹ்ருதயத்தில் நித்யமாக ஸாந்நித்யம் செய்தருளும்படி ப்ரார்த்திக்கிறபடியினால் "புவியும் இருவிசும்பும் நின்னகத்த நீ என் செவியின் வழி புகுந்து என்னுள்ளாய் - அவிவின்றி யான் பெரியன் நீ பெரியன் என்பதனை யார் அறிவார் ஊன் பருகு நேமியாய் உள்ளு',(பெரிய திருவந்தாதி 75) "கல்லும் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம் வெல்ல நெடியான் நிறம் கரியான் உள் புகுந்து நீங்கான் அடியேனது உள்ளத்தகம்' (பெரிய திருவந்தாதி 68) என்றிவை முதலியவைகளில் கொள்ளப்பட்ட ந்யாயத்தினாலே அவர்

ஸாந்நித்யம் செய்தருள அதன் பலனாக ஸ்வரூப ஜ்ஞானம் உண்டாக்கப்படுகிறது என்றபடி. "என்னொருவனையே ஶரணமாகப் பற்று' என்று உபாய அனுஷ்டானத்தை விதிக்கிறது சரமஶ்லோகம். அது போலவே சீர் ஒன்று தூப்புல் என்னும் தனியனும் "வானேறப்போமளவும் வாழ்வுக்கு இவருடைய ஸ்ரீஸூக்திகளில் ஓரொன்றே அமையாதோ" என்று சொல்லுகிற படியினாலே அவற்றில் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கும் ப்ரபத்தியாகிற உபாயத்தை அகிஞ்சனர்களான நாம் அனுஷ்டிக்க வேண்டும் என்று விதிப்பதில் தாத்பர்யத்தையுடையதாகையாலே சரம ஶ்லோக ஸத்ருஶமாய் போஷகமாயிற்று. நித்யம் அனுஸந்தேய மாகையாலே போக்யமாயிருக்கும் த்வயம். அப்படியே *ராமானுஜ தயா பாத்ரம்* என்னும் தனியனும் 'भगवद्वन्दनं स्वाद्यं गुरु वन्दनपूर्वकं" (ஸ்ரீரஹஸ்ய ரக்ஷை)என்கிறபடியே ப்ரதிதினமும் பகவத் ஸந்நிதிகளில் நித்யானுஸந்தானத்தில் அனுஸந்திக்கப் படுகிறபடியினாலே போக்யமாயிருக்கும் என்றபடி.

(4) அதுவுமன்றிக்கே எட்டுப் பதங்கள் அடங்கிய ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்னும் தனியன் எட்டு அக்ஷரங்களையுடைய திருமந்திரம் போலவும், ஐந்து பதங்கள் சேர்ந்து ஒரு வாக்யமான ராமானுஜதயாபாத்ரம் என்னும் தனியன் इदमष्टपदं व्यास समासे षद्पदं विदुः | वाक्यं पंचपदैर्युक्तं" (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய த்வயாதி) என்னப்பட்டட த்வயம் போலவும், சீரொன்று தூப்புல் தனியனில் ஓரொன்றுதானே என்னும் பதங்கள் மாமேகம் என்னும் பதங்களை ஜ்ஞாபகப்படுத்துகிறபடியாலே சரமஸ்லோகம் போலவும் இருக்கிறபடியினால் இவற்றை ரஹஸ்யத்ரய ஸத்ருஸங்கள் என்கிறதாகவுமாம். ஆக இப்படி இம்மூன்று தனியன்களும் ரஹஸ்யத்ரய ஸத்ருஸங்கள் என்கிற யோஜனைக்கு நாலு விதமான உபயோஜனைகள் காட்டப்பட்டன. மேலே இவற்றின் மற்ற ஏற்றங்களைக்காட்டும் எழு யோஜனைகள் நிரூபிக்கப்படுகின்றன.

**மற்ற ஏற்றங்கள்.**

व्यासं वशिष्ट नपटाराम शकतेः पौत्रामकल्मषम्| पराशरात्मजं वनडे शुकतातं तपोनिधिम्||(பாரதம் ஸஹஸ்ர நாமாத்யாயம்.) என்கிற ஸ்லோகத்தில் ஸூசிப்பிக்கப்பட்டதாய், லோகத்தில் ஒருவனுக்கு

ப்ரக்யாதி ஏற்படுவதற்குக் காரணங்களென்று சொல்லப் படுகிற ப்ரக்யாதி பெற்ற வம்ஸத்தில் பிறப்பு, விசேஷமான பெருமையைக் கொடுக்கிற ஜ்ஞானம் முதலியவைகளைத் தானே பெற்றிருத்தல், ப்ரஸித்தி பெற்ற புத்ர ஸிஷ்யாதிகளை உடைத்தாயிருத்தல், என்கிற மூன்றும் ஸ்ரீதேஸிகனுக்கு உண்டு என்பதை இம்மூன்று தனியன்களும் நிரூபிக்கிறபடியினால் இவை மூன்றும் மற்றத் தனியன்களை விட ஓர் விஶேஷம் பெற்றிருக்கும் என்றபடியாகவுமாம். அதாவது பிறப்பு வம்ஸ பரம்பரையாலும் ஜ்ஞான பரம்பரையாலும் இரண்டு விதம். இவை இரண்டும் தமக்கு விஶேஷித்து இருந்தமையை ஸ்வாமிதாமே श्रीमदभ्यांस्याद् सावित्यनुपधि वरदाचार्य रामानुजाभ्यां सम्यक् दृष्टेन सर्वं सह निशिताधिया वेंकटेशन (ஸ்ரீ அதிகரண ஸாராவளீ - 2) सर्वलोकसंभावनीयस्य विस्वाति शायिनो विश्वामित्र गोत्रभूषनस्य विबुधविद्याविहार पुण्डरीकस्य पुण्डरीकाक्ष सोमसूक्तसंभवस्य अनन्तगुण शेवधेरनन्तसूरेरात्मसंभवः (ஸ்ரீ ஸங்கல்ப ஸூர்யோதயம்) என்று அருளிச்செய்திருக்கிறார். அதாவது இங்கு அனுஸந்திக்கப்பட்டிருக்கும் ப்ரஸித்தர்களான நடாதூர் அம்மாள் கிடாம்பி, அப்புள்ளார் என்னும் ஆசார்ய ஸம்பந்தம் பெற்றிருந்தமையைக் காட்டுகிற வேங்கடேஸ: என்கிற பதத்தையுடைய தனியன் அப்படிப்பட்ட ஜ்ஞான பரம்பரையின் பெருமையைத் தெரிவிக்கிறது. இதுவே தம் திருத்தகப்பனாரால் வைக்கப்பட்ட திருநாமமாகையினால் பிறப்பினால் உத்கர்ஷமும் சொல்லப்பட்டதாகிறது. சீர் ஒன்று தூப்புல் தனியனோ வானேறப் போமளவும் வாழ்வுக்கு அமையும்படியான ஸ்ரீஸூக்திகளைச் செய்தவர் என்கிறபடியினால் தன்னுடைய ஜ்ஞானாதிகளினால் ஏற்படும் பெருமையைக் காட்டும். ஸ்ரீதேசிகன் தாமும் திருவரங்கத் தெம்பெருமானும் அக்காலத்தில் எழுந்தருளி யிருந்த அகில பாகவதோத்தமர்களும் மெச்சும்படியான பெருமை வாய்ந்த ராமானுஜதயாபாத்ரம் என்னும் தனியனை அருளிச்செய்த ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ரர் முதலிய ப்ரஸித்தர்களான ஸிஷ்யர்களைப் பெற்றிருந்தமையைக் காட்டுகிறது அந்தத் தனியன் என்றபடி.

2.) அன்றிக்கே, கதாநாயகனே கேட்டு அப்யுபகமம்

செய்தான் என்கிற பெருமைவாய்ந்த ஸ்ரீராமாயணம் போலவும் இராமானுஜ நூற்றந்தாதி போலவும், ஸ்ரீ தேசிகனே இவைகளை அங்கீகரித்திருக்கிறார் என்னும் ஏற்றம் பெற்றதாயிருக்கும் இத் தனியன்கள் என்றபடியாகவுமாம்.

3) அதுவுமன்றிக்கே, திருமந்திரத்திலே பிறந்து சரம ஸ்லோகத்திலே வளர்ந்து த்வயைக நிஷ்டனாவாய் என்றாப் போலே ஸ்ரீமாந்வேங்கட நாதார்ய: என்னும் தனியனில் பிறந்து, அத்தால் ஸ்வரூபஜ்ஞானம் பெற்று, சீர் ஒன்று தூப்புல் என்னும் தனியனில் வளர்ந்து, அதாவது வானேறப் போமளவும் வாழ்வு அமையும்படி செய்கிற ஸ்ரீஸூக்திகளின் பரிசயத்தினால் உபாய விஷயமான நிஷ்கர்ஷம் பெற்று, ராமானுஜதயாபாத்ரம் என்னும் தனியனில் நிஷ்டை யுடையவனாயிரு. அதாவது வளர்ந்ததின் ப்ரயோஜனமான உபாய அனுஷ்டானத்திற்குக் கரண மந்திரமான த்வயத்தை ஒரு தரம் உச்சரிப்பதினால் உபாயானுஷ்டானம் பூர்த்தியாக மேல் ஸ்வயம்ப்ரயோஜனமாய் நிற்கும் த்வயம், அத்தைப்போல இத்தனியனால் ஆசார்யனை ஸரணம் அடைந்து, அவனால் ந்யஸ்தபரனாய் மேல்ப்ரதி தினமும் செய்யப்படும் திவ்ய ப்ரபந்தானுஸந்தான காலங்களில் அனுஸந்திக்கப்படுகிறபடியினால் இதில் நிஷ்டையையுடையவனாயிரு என்னக்கூடிய ஏற்றம் பெற்றவை களாயிருக்கும் இத்தனியன்கள் என்றபடியாகவுமாம்.

4) அன்றிக்கே, எட்டுப் பதங்களையுடையதான ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்னும் தனியன் அஷ்டாங்க யோகம் எனப்படும் பக்தி யோகத்தைக் குறிக்கிறது; அப்படியே ஐந்து பதங்களையுடைய ராமானுஜ தயாபாத்ரம் என்னும் தனியன் ஐந்து அங்கங்களையுடைய ப்ரபத்தியைக் குறிக்கும். இவை இரண்டிற்கும் உபயுக்தமான ஜ்ஞானத்தைத்தரும் ஸ்ரீஸூக்திகளைக் குறிக்கும் சீர் ஒன்று தூப்புல் என்னும் தனியன் என்கிற ஏற்றத்தை உடையவைகள் என்றபடியாகவுமாம்.

5) அதுவுமன்றிக்கே, ப்ரபன்னஜனஸந்தான கூடஸ்தரான ஆழ்வார் இந்த ஸம்ப்ரதாயத்திற்கு க்ரந்த முகத்தாலும், நேரில் உபதேசத்தாலும், ஸிஷ்ய ப்ரஸிஷ்ய

பரம்பரையாலும், செய்தருளிய மூன்று உபகாரங்களையும் ஸ்ரீதேஸிகனும் செய்தருளியிருக்கிறார் என்பதைக் காட்டும் இம்மூன்று தனியன்களும் என்கிற பெருமை வாய்ந்தவை என்றபடியாகவுமாம். அதாவது க்ரந்த முகமான உபகாரம் சீர் ஒன்று தூப்புல் தனியனாலும், நேரில் உபதேசம் செய்தருளிய உபகாரம் ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: தனியனாலும், ஆசார்யபரம்பரா மூலமாகச் செய்தருளிய உபகாரம் ராமானுஜ தயாபாத்ரம் தனியனாலும் குறிப்பிடப்பட்டதாகிறது என்றபடி.

6) அதுவுமன்றிக்கே, தத்வ ஹித புருஷார்த்தங்களை நிரூபிப்பதில் ப்ரதான நோக்கையுடையவை என்கிற பெருமை பெற்றவை இத்தனியன்கள் என்றபடியாகவுமாம். அதாவது ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: தனியன் தத்துவத்தையும், சீர் ஒன்று தூப்புல் தனியன் ஹிதத்தையும், ராமானுஜ தயாபாத்ரம் தனியன் புருஷார்த்தத்தையும் முக்யமாகத் தெரிவிக்கிறது என்று தாத்பர்யம்.

7) அதுவுமன்றிக்கே, நல்ல ஜ்ஞானம் உண்டாவதற்குக் காரணம் என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸித்தோபாய ஸோதனாதிகாரத்தில் அருளிச் செய்யப்பட்ட திருமுகப் பாசுரமும் ஸதாசார்யானுக்ரஹமும் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தியும் என்கிற மூன்று காரணங்களும் ஸ்ரீதேஸிகன் இடம் இருந்தன என்பதை இம்மூன்று தனியன்களும் காட்டுகின்றன என்கிற பெருமை பெற்றவை என்றபடியாகவுமாம். அதாவது தமது முதல் ஸ்தோத்திரமாகிய ஸ்ரீ தேவநாயக பஞ்சாஸத்தில் मातस्त्वमम्बुरुह वासिनि किञ्चिदेतत्विज्ञाप्यते मयि कुरुष्व तथा प्रसादम्। आकर्णयिष्यति सदैवं वक्त (ஸ்ரீதேவநாயக பஞ்சாசத் 4) என்று அருளிச்செய்திருப்பதினால் ஸ்தோத்திரங்களுக்குத் தனியனான ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்னும் தனியன் திருமுகப் பாசுரம் பெற்றதையும், எம்பெருமான் தொடக்கமாக ஸாக்ஷாத் ஆசார்யனான கிடாம்பிக் குலபதி அப்புள்ளார் வரையிலுள்ள குருக்களின் பரிபூர்ணமான அனுக்ரஹம் பெற்றிருந்தமையைக் காட்டுகிற ராமானுஜதயாபாத்ரம் என்னும் தனியன் ஸத் ஸம்ப்ரதாய ஸித்தியையும், "கிடாம்பி அப்புள்ளார் கிளியைப்

பழக்குவிக்குமாப் போலே பழக்குவிக்க' என்றிவை முதலாக அருளிச் செய்திருப்பதினால் தம்முடைய ஸ்ரீஸூக்திகளெல்லாம் ஆசார்யானுக்ரஹத்தால் உண்டானவை என்றேற்படுகிறபடியால் ஸ்ரீதேஸிகன் ஸ்ரீஸூக்திகளின் பெருமையைத் தெரிவிக்கிற சீர் ஒன்று தூப்புல் என்னும் தனியன் ஆசார்யானுக்ரஹத்தையும் தெரிவிக்கிறது என்றபடி .

**ராமானுஜதயாபாத்ரத்**
**தனியனின் ஏற்றம்.**

இப்படிக் கீழ் நிரூபிக்கப்பட்டபடியே ஸ்ரீதேஸிகன் விஷயமான தனியன்களில் மூன்று முக்யங்களாய் நின்ற போதிலும், அவற்றிற்குள் ராமானுஜதயாபாத்ரம் என்னும் தனியன் ஒரு படி ஏற்றம் பெற்றிருக்கும். எங்ஙனே என்னில்:-

(1) ரஹஸ்யத்ரயங்களில் स दैवं वक्ता என்கிற ஏற்றம் பெற்றது த்வயம். அதைப்போன்ற பெருமை பெற்றிருக்கும் இத்தனியன். இதை விவரிப்போமாக -

ஆசார்யர்களுள் மற்றொருவருக்கும் கிடைக்காததாயும் ஸ்ரீ தேஸிகன் ஒருவருக்கே கிடைத்ததுமான பெருமை வேதாந்தாசார்யர் என்னும் பிருது. இதைப் பலபடிகளாலும் தாம் நிர்வஹித்தருளிய ப்ரகாரத்தை ஸ்ரீதேஸிகன் தாமே அருளிச் செய்திருக்கிறார். நமது ஸம்ப்ரதாயத்தில் உபய வேதாந்தங்களும் பிரமாணங்களாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் ஸம்ஸ்க்ருத வேதாந்தார்த்தங்களை ப்ரதிபாதிக்கிற ப்ரஹ்ம ஸூத்திரங்களின் வ்யாக்யானமான ஸ்ரீ பாஷ்யத்தின் அர்த்த ஸங்க்ரஹமான ஸ்ரீ அதிகரண ஸாராவளியில் तेन देवेन दत्तां वेदान्ताचार्यसंज्ञामवहित् बहुवित्सार्थमन्वर्थयामि என்றனுஸந்தித்திருக்கிறபடியினால் ஸம்ஸ்க்ருத வேதாந்தங்களில் தாம் நிகரற்றவர் என்பதை வெளியிட்டு அருளினார்.

आचार्य प्रियचिकीर्षया प्रेरितः तत्प्रसादसन्धुक्षित तत्प्रबन्धानुसन्धानजनित ज्ञान भक्तिपरीवाहरूपे स्तोत्रे" என்கிறபடியே த்ராவிட வேதங்களின் அனுஸந்தான பரிவாஹமான ஸ்ரீஸ்தோத்ர ரத்னத்திற்கு வ்யாக்யானமிட்டருளி அதன் இறுதியில் स्वकमिति हरिदत्तं यामुनस्तोत्रवृत्त्या व्यवृणुत निगमान्ताचार्यकं वेङ्कटेशः என்றருளிச்

செய்திருப்பதினாலே த்ரமிட வேதங்களில் தாம் நிலவர் என்பதை ஸ்தாபித்தருளினார். ஸ்ரீபாஷ்யத்திற்கு விஸ்தாரமான வ்யாக்யானமான ஸ்ரீதத்வடீகையை यतिपतिबुवो भाष्यस्यासौ यथाश्रुत चिन्तित प्रवचनविधावष्टाविंशे जयध्वजपट्टिका என்றும், ஸ்ரீ சது ஸ்லோகீ பாஷ்யத்தில் व्यसन शमन व्यक्तोत्त्येया जयध्वजपट्टिका என்றும் அருளிச் செய்திருப்பதினாலும் உபய வேதாந்தங்களில் பாண்டித்யத்தை உடையவர் என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. இப்படி உபய வேதாந்தங்களிலும் ஆசார்யனாய் விளங்கின போதிலும், "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே'', ''பாணன் ஓதியதோர் இரு நான்கும் இரண்டுமான ஒரு பத்தும் பற்றாக உணர்ந்துரைத்தோம்'', "சந்தமிகு தமிழ் மறையோன்'' என்றிவை முதலாக அனுஸந்தித்திருப்பதினாலே ஒரு விசேஷம்பெற்ற தாயிருக்கும் த்ராவிட வேதங்கள். ஸம்ஸ்க்ருத வேதாந்தங்களின் வ்யாக்யானங்களான ஸ்ரீபாஷ்யம், ஸ்ரீகீதாபாஷ்யம், முதலிய க்ரந்தங்களும் பகவானுடைய மஹிமையையே ப்ரதிபாதித்தபோதிலும், பகவத் குணாதிகளை நேரில் அவ்யவஹிதமாக ப்ரதிபாதிக்கிற த்ரமிட வேதங்களின் வ்யாக்யானங்களுக்குப்போலே அவைகளுக்கு பகவத் விஷயம் என்னும் திருநாமம் கிடைக்க வில்லை. எம்பெருமானாலேயே மயர்வற மதி நலமருளப்பெற்று, அந்த ஜ்ஞானத்தினாலேயே அவனை உள்ளபடியே அனுபவித்து, அனுபவித்தபடியே பேசுகிற பேச்சுக்களான திருவாய்மொழியின் முதல் வ்யாக்யானமாக எம்பெருமானாருடைய நியமனத்தினால் பிள்ளான் பணித்தருளிய ஆறாயிரப்படிக்கே அப்பெருமை. அதற்கு வ்யாக்யானமான எழுபத்திநாலாயிரப்படியின் காலக்ஷேப காலத்தில் அவதரித்த இத்தனியன் மற்றத்தனியன்களை விட ஓர் எற்றம் பெற்றிருக்கும்.

அன்றிக்கே, தடைபட்டு நின்ற திருவத்யயனோத்ஸவத்தை ப்ரதிவாதிகளை நிரஸித்து அந்த மஹோத்ஸவத்தை நடத்தி வைத்த ஸமயத்தில் "லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்' என்னும் தனியனுக்கு முன்பு அனுஸந்திக்கும்படி ஸ்ரீரங்கநாதனால்

நியமிக்கப்பட்ட பெருமை வாய்ந்திருக்கும் இத்தனியன் என்றபடியாகவுமாம்.

அன்றிக்கே, பூர்வாசார்யர்கள் எல்லோரும் உபய வேதாந்தங்களிலும் நிலவர்களாகிலும் அவர்கள் ஸ்ரீதேசிகனைப் போலே உபய வேதாந்தாசார்யத்வத்தில் அபிஷிக்தர்களாகவில்லை. ஏனென்றால் ப்ரபன்ன ஜன ஸந்தான கூடஸ்தரான ஆழ்வார் த்ரமிடோபநிஷத் த்ரஷ்டா என்கிற பெருமை பெற்றவர். யோக தசையில் ஸாக்ஷத்க்ருதராய் ஸ்ரீமந் நாதமுனிகளுக்கு உபய வேதாந்தங்களையும் உபதேசித்தருளினாலும் கிரந்த முகமான உபகாரம் த்ரமிட வேதங்களாலே தான். தமிழ் மறைக்குத் தாளம் வழங்கி இன்னிசை தந்த வள்ளலான ஸ்ரீமந் நாதமுனிகளும் திவ்ய பிரபந்தங்கள் விஷயமாய் க்ரந்த முகமாக உபகாரம் செய்தருளவில்லை. பெரிய முதலியாரும் த்ரமிடவேத த்ரஷ்டாவான ஆழ்வார் விஷயமாக ஒரு ஸ்லோகம் அருளிச்செய்திருந்தபோதிலும் திவ்ய ப்ரபந்தங்களின் ப்ரபாவாதிகளைப் பரக்க நிரூபித்தாரில்லை. தர்ஸந ப்ரவர்த்தகரான எம்பெருமானாருடைய திவ்ய ப்ரபந்தானுஸந்தான ஊற்றம் நூற்றந்தாதியில் 'மாறன் அடி பணிந்து உய்ந்தவன் - பொய்கைப் பிரான் மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி - பூதத்திருவடித் தாள்கள் நெஞ்சத்துறைய வைத்தாளும் - கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த்தலைவன் பொன்னடி போற்றும் - சீரிய நான் மறைச் செம்பொருள் செந்தமிழாலளித்த பாரியலும் புகழ்ப் பாண் பெருமாள் சரணாம் பதுமத்தாரியல் சென்னி - இடம்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவன் இணையடிப்போதடங்கும் இதயத்து - செய்யும் பசும் துளவத் தொழில் மாலையும் செந்தமிழில் பெய்யும் மறைத் தமிழ் மாலையும் பேராத சீர் அரங்கத்து ஐயன் கழல்பணியும் - கொல்லிக் காவலன் சொல்பதிக்கும் கலைக் கவிபாடும் பெரியவர் பாதங்களே துதிக்கும் - பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன் தாள் பேராத உள்ளத்து - அரங்கர் மௌலி சூழ்கின்ற மாலையைச் சூடிக் கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளல் - தண்தமிழ் செய்த நீலன் தனக்கு உலகில்

இனியானை - எய்தற்கரிய மறைகளை ஆயிரமின் தமிழால் செய்தற்கு உலகில்வரும் சடகோபனை - மாறன் விளங்கிய சீர் நெறி தரும் செந்தமிழ் ஆரணமே என்று - தென்குருகைப் பிரான் பாட்டென்னும் வேதப் பசும் தமிழ் தன்னை தன் பத்தி என்னும் வீட்டின் கண் வைத்து திருவாய்மொழியின் மணம் தரும் இன்னிசை மன்னுமிடம் தோறும் நிற்கும் - பண்டரு மாறன்பசும் தமிழ் ஆநந்தம் பாய்மதமாய் ' என்றிவை முதலியவைகளில் விசேஷமாக ப்ரதிபாதிக்கப்பட்டிருந்த போதிலும், க்ரந்த முகமாக ஆழ்வார்களைப் பற்றியோ அவர்கள் ப்ரத்யக்ஷீகரித்து வெளியிட்டருளிய திராவிட வேதங்களைப் பற்றியோ அவர் ஓரிடத்திலும் நிரூபித்தாரில்லை. எம்பெருமானாரால் உபய வேதாந்த ஸிம்மாஸனத்தில் அபிஷிக்தரான பிள்ளானும் த்ரமிடோபநிஷத்தின் அர்த்த விசேஷங்களை ஆறாயிரப்படியில் பரக்க நிரூபித்திருந்தாலும் ஆழ்வார்களின் அவதாரப்ரபாவ விஷயமாய் ஒன்றும் நிரூபித்தாரில்லை. ஸ்ரீதேசிகன் ஒருவரே தான் வேதாந்தாசார்யர் என்னும் தம்முடைய திருநாமத்திற்கேற்ப உபய வேதாந்தங்களின் அர்த்தங்களையும், அவற்றின் உத்கர்ஷத்தையும், ஆழ்வார்கள் த்ரமிட வேத த்ரஷ்டாக்கள் என்பதையும், அவர்களுடைய அவதார ப்ரபாவத்தையும் வெளியிட்டருளியவர். இப்படி உபய வேதாந்தங்களிலும் நிலவரான ஸ்ரீ தேசிகனாலே नित्यं जाता शटरिपु तनोः निष्पतन्ती मुखात्ते प्राचीनानां श्रुतिपरिषदां पादुके पूर्वगण्या என்று கொண்டாடப்பட்டிருக்கும் பெருமையையுடையவைகள் த்ராவிட வேதங்களே. இப்படிப்பட்ட எற்றமுடைய த்ரமிட ப்ரபந்தங்களின் தனியன் என்னும் பெருமை பெற்றது என்றபடியாகவுமாம்.

அன்றிக்கே, ரஸங்களுக்குள் உத்க்ருஷ்டமான ஸாந்தி ரஸத்தை ப்ரதானமாக ப்ரபோதிக்கிறபடியினாலும் ஸம்ஸ்க்ருத வேதங்கள்போல் த்ரைவர்ணிகர்களுக்கு மட்டுமன்றிக்கே ஸர்வாதிகாரங்களாய் நிற்கிறபடியினாலும் பெருமை பெற்ற த்ரமிட வேதங்களுக்குத் தனியன் என்கிற உத்கர்ஷம் பெற்றிருக்கும்.

அன்றிக்கே, ஸரணாகதியையும் அதன் அங்கங்களையும் அதற்கு இன்றியமையாததான பகவானுடைய கருணையையும்

அர்ச்சாவதாரத்தையும் விஶேஷித்து ப்ரதிபாதிக்கிறது என்கிற பெருமையையும்பெற்ற த்ராவிடவேதங்களின் தனியன் என்கிற பெருமை வாய்ந்தது என்றபடியாகயுமாம்.

அன்றிக்கே, नाथे नः என்கிற ஸ்லோகத்தில் பாகவதர்களின் ப்ரஸாதமே நமக்கு உத்தேஸ்யமென்றும், आचार्यादिह देवतां समधिकामन्यां न मन्यामहे என்கிற ஸ்லோகத்தின்படியே ஆசார்யனுடைய கடாக்ஷத்தையே நாம் நாடவேண்டும் என்றும் நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்கும் ஆசார்யகடாக்ஷம் பெற்றிருந்தமையைக் காட்டுகிறபடியினாலே இது மற்றவைகளைக் காட்டிலும் பெருமை பெற்றது என்றபடியாகவுமாம்.

## அவதார க்ரமம்.

இப்படிக் கீழ் நிரூபிக்கப்பட்டபடியே ஸ்ரீ தேசிகன் விஷயமான தனியன்களுள் ப்ரதானதமமானதும், ஸ்ரீதேசிகனுடையவும் அவரால் ப்ரவர்த்தனம் செய்யப்பட்ட ஸித்தாந்தத்தினுடையவும் பெருமையை வெளியிடுகிறபடியினால் ஸ்ரீ தேசிக தர்ஸந ரத்ன தீபம் என்னப்படுமதான ராமானுஜதயாபாத்ரம் என்றாரம்பிக்கும் தனியன் அவதரித்த க்ரமத்தை த்விதீய ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் பன்னீராயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தில்

कल्यब्देषु चतुस्सहस्रशत पङ्क्त्यब्दे यदुक्ष्माधरे
हस्तर्क्षे बहुधान्यवत्सरनभश्शुक्लद्वितीयायुते।
श्रीशश्रीशठजिद्यतीश निगमान्तार्यप्रभावोज्वलस्सुश्लोकाऽवततार
दिव्यमहिमा रामानुजोक्त्यादिमः॥ 23 ॥

என்றனுஸந்தித்திருக்கிறார். நாலாயிரத் தனியன்களுக்கு வ்யாக்யானம் செய்தருளிய ஸ்ரீவாத்ஸ்யாஹோபிலா சார்யரால் "இத்தனியன் திருநாராயணபுரத்தில் நைனாரா சார்யர் ஸந்நிதியில் பகவத் விஷயமான ஆறாயிரப்படியை எழுபத்திநாலாயிரப்படி வ்யாக்யானத்தோடே அதிகரிக்கும் போது நம் தேசிகனுடைய அஜாநசுத்த ஸத்வ்ருத்த குணங்களை சிரானுபவம் பண்ணின ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஜீயர் அருளிச் செய்ததாயிருக்கும்', "துலுஷ்கநிரஸனனாநந்தரம் மதாந்தரஸ்தர்களாலே திருவத்யயனோத்ஸவ ப்ரதிஹதி

உண்டான போது அழகியமணவாளன் நியமனப்படிக்கு நம் தேசிகன் அந்தக்குமதிகளை ஜயித்து, ஆழ்வார்கள் ஆசார்யர்கள் அர்ச்சாஸ்தாபனத்தையும் திருவத்யயனோத்ஸவத்தையும் திவ்யதேசமுள்ளதனையுமவ்யாஹதமாய் செல்லும்படி பண்ணியருளின ஸமயத்தில் திவ்ய தேசங்கள் தோறும் அனுஸந்திக்கும்படிக்கு அழகியமணவாளன் நியமித்தருளினதாயிருக்கும்', "அதில் ப்ரதான ஆசார்ய பரம்பரையில் ஆதிமத்யாந்த பட்டாபிஷேக்தர்களான ஸ்ரிய:பதி ஸ்ரீ சடகோப ராமானுஜ வேதாந்த தேசிகர் ஐவர்களுடைய ப்ரபாவத்தையும் அர்த்த ஸப்த சக்தியாலே ப்ரதிபாதிக்குமதான ராமானுஜ தயாபாத்ரம் என்கிற தனியனாலே நம் தேசிகரை சரணம் அடைந்து அத்தால் நம் தேசிகன் அருள் பெற்று, அம் முகத்தாலே மற்ற நால்வர்களுடைய கடாக்ஷமும் பெற்று, பின்பு அனுஸந்தாதாக்கள் அனைவரும் ஸ்வஸ்வாசார்ய பர்யந்தம் குருபரம்பரானுஸந்தானம் பண்ண ப்ராப்த மென்கிற அபிஸந்தியாலே லஷ்மீ நாத ஸமாரம்பாம் இத்யாதி தனியன்களுக்கு முன்பு இந்தத் தனியனை அனுஸந்திக்கும்படி அழகிய மணவாளன் நியமனப்படிக்குப் பெரியோர்கள் நியமித்தருளினதாயிருக்கும் " என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இதின் கருத்து - துலுக்கர்களுடைய உபத்திரவத்தினால் திருவரங்கத்தெம்பெருமான் ஸ்ரீரங்கத்தைவிட்டு வெளியே செல்லும்படி நேர்ந்த ஸமயத்தில் ஸ்ரீதேசிகனும் ஸ்ரீரங்கத்தை விட்டு வெளிச்சென்று, எம்பெருமானார் மிகவும் உகந்தருளிய திருநாராயணபுரம் அடைந்து, அங்கே சில காலம் எழுந்தருளியிருந்து ஸம்ப்ரதாய ப்ரவசனம் பண்ணிக் கொண்டு வந்த ஸமயத்தில் निर्विष्टं यतिसार्वभौम वचसामावृत्तिभिर्यौवनं என்கிறபடியே ஸ்ரீ பாஷ்யத்தை ஸ்ரீ ஸ்ருத ப்ரகாசிகையுடன் காலக்ஷேபம் ஸாதிக்கும்பொழுது "மாறன் மறையுமிராமானுசன் பாஷியமும் தேறும் படி உரைக்கும் சீர்' என்று சொல்லப்பட்டபடியே மாறன் மறையை மேற்கோளாகக் காட்டியருளி, அதன் அர்த்தத்தை விளக்கும் பிள்ளான் பணித்த ஆறாயிரப்படி பங்க்திகளைக்கொண்டு பல ப்ரகரணங்களிலும்

உபபாதித்தருளினபடியினால் அந்த ஆறாயிரப்படி க்ரந்தத்தைக் காலக்ஷேபம் ஸாதிக்கும்படி நைனாராசார்யர் முதலானோர் ப்ரார்த்தித்தார்கள். ஸ்ரீதேசிகனும் அப்படிச் செய்வதற்கு முன்பு அந்த க்ரந்தத்தில் விஸ்வாஸம் உண்டாவதற்காக அதன் பெருமையை -'தம்முடைய ப்ராசார்யனான பெரியமுதலியார் சரம திருமேனி முன்பே எம்பெருமானார் தாம் செய்த ப்ரதிஜ்ஞைகளில் ஒன்றாகிய திருவாய்மொழிக்கு வியாக்யானம் செய்வதான கைங்கர்யத்தைத் தாம் நேரில் செய்யாமே, ஸ்ரீமந்நாதமுனிகள் திருவம்சத்தில் பிறப்பையும் ஆழ்வாரிடத்தில் நிரவதிக பக்தியை யும் உடையவராய் இவை இரண்டினாலும் திவ்ய ப்ரபந்தங்களில் விசேஷ ஊக்கத்தையுடையவர் திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பதைப் பல ஸமயங்களில் பரீக்ஷித்து அறிந்திருந்தபடியினால் அவரைக் கொண்டு அந்தக் கைங்கர்யத்தைப் பூர்த்தி செய்யத் திருவுள்ளம்பற்றி திருவாய்மொழிக்கு வ்யாக்யானம் செய்யும்படி நியமித்தருளினார். பிள்ளானும் பகவானுடைய கடாக்ஷத்தால் மயர்வற மதிநலமருளப் பெற்று, அத்தால் அவனை உள்ளபடியே அனுபவித்து, தாம் அனுபவித்தபடியே பேசினதோபாதி, ஆசார்ய கடாக்ஷத்தினால் தாம்பெற்ற ஜ்ஞானத்தைக்கொண்டு திருவாய்மொழியின் அர்த்தங்களை உள்ளபடியே அறிந்து, அறிந்ததையே ஒரு க்ரந்தமாக்கி, அதில் தமக்குள்ள பார தந்த்ர்யத்தை வெளியிடுவதற்காக மங்கள ஸ்லோகம் முகவுரை முதலியவை இல்லாமலே எம்பெருமானார் திருமுன்பே வைத்தருளினார். எம்பெருமானாரும் அதைப் பூர்ணமாகக் கடாக்ஷித்து, அதைப் போர உகந்து, அதுவே ஆழ்வாருடைய திருவுள்ளக் கருத்து என்று கொண்டாடி, அதைத் தாமே தம்முடைய சிஷ்யர்களுக்கு ப்ரவசனம் செய்தருளினார் என்கிற ஏற்றம் பெற்றது. திருவாய்மொழிக்கு இதத் தாயான இராமானுச முனியின் காலக்ஷேப ஸங்க்ரஹமாகையால் இதற்கு ப்ரதான கர்த்தர் எம்பெருமானாரே என்கிற திருவுள்ளத்தினால் மங்களஸ்லோகாதிகள் செய்யவில்லை. இப்படி உத்க்ருஷ்டமான க்ரந்தத்தை அருளிச்செய்த இவர் மட்டும் ஸ்ரீபாஷ்ய ப்ரவசன ஸிம்மாஸனத்துடன் பகவத்விஷய ப்ரவசன ஸிம்மாஸனத்திலும்

முடிசூட்டப் பெற்றார். எம்பெருமானாருடைய அவதார ஸமாபனத்திற்குப்பிறகு உபயவேதாந்த ப்ரவசனம் பிள்ளானால் செய்யப்பட்டு வந்தது. இவருக்குப் பிறகு இவரை ஆஸ்ரயித்த விஷ்ணுசித்தர் என்கிற எங்களாழ்வானாலும் அவருக்குப்பிறகு அவருடைய சிஷ்யரான நடாதூர் அம்மாளாலும் ப்ரவசனம் செய்யப்பட்டது. ஸ்ரீபாஷ்யகாரரால் ஸ்ரீபாஷ்ய ப்ரவசன ஸிம்மாஸனத்தில் முடிசூட்டப்பட்ட நால்வரில் ஒருவரான நடாதூர் ஆழ்வானிடமிருந்து க்ரஹித்த தமது தகப்பனாரிடத்தில் ஸ்ரீபாஷ்யத்தை அதிகரிக்க ஆரம்பம் செய்த அம்மாளுடைய மேதையைக் கண்ட அவருடைய திருத்தகப்பனாரால் "உபய வேதாந்த ப்ரவசன ரூபமாக திருவெள்ளறையில் காலக்ஷேபம் செய்யும் எங்களாழ்வானிடம் சென்று க்ரஹி' என்று அனுப்பப்பட்டு அவரிடம் உபயவேதாந்தங்களையும் க்ரஹித்தருளினார். அவரிடம் உபய வேதாந்தங்களையும் க்ரஹித்தருளியவர் நம் ஆசார்யனாகிய கிடாம்பிக் குலபதி அப்புள்ளார். அவர் தேமலர் சேவடி சேர்ந்து, அவரருளால் நாவலரும் தென்வடமொழி பெற்றோம் நாம். இப்பரம்பரையால் பெற்ற அர்த்தங்களே எம்பெருமானார் உகந்தருளிய அர்த்தங்கள். பிள்ளான் பரம்பரையாக அர்த்த விசேஷங்களைப் பெறாத சிலர் பிள்ளானால் பணிக்கப்பட்ட அர்த்தங்களுக்கும் ஸ்ரீ பாஷ்யபங்க்திகளுக்கும் முரண்பாடாகவும் சில வ்யாக்யானங்களை இட்டிருப்பதைக் கண்டு எம்பெருமானார் தர்ஸநத்திலும் அர்த்த விரோதங்கள் காணப்படுகின்றனவே என்று அயலார் சொல்ல இடம் ஏற்பட்டது. இவற்றில் ரஹஸ்யத்ரய விஷயமான ஸங்கைகளுக்கு ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தியில் பரிகாரம் செய்திருக்கிறோம். திவ்ய ப்ரபந்தங்கள் விஷயமாயும், அவற்றை ப்ரத்யக்ஷீகரித்து வெளியிட்டருளிய ஆழ்வார்களின் அவதார ப்ரபாவ விஷயமாயும் எம்பெருமானாருடைய திருவுள்ளத்திற்கும், அவரால் அங்கீகரிக்கப்பட்டு ப்ரவசனம் செய்யப்பட்ட ஆறாயிரப்படிக்கு வ்யாக்யானமுமாக எழுபத்தி நாலாயிரப்படி என்கிற ஒரு க்ரந்தம் செய்திருக்கிறோம். அதில் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸந்தேஹாதிகளுக்குப் பரிஹாரம் சொல்லப் பட்டிருக்கிறது. அதை உங்களுக்கு காலக்ஷேபம் சொல்லுகிறோம்'

என்று அருளிச் செய்து, அந்த க்ரந்தம் ஆரம்பம் செய்வதற்கு ஒரு நன்னாளும் குறிப்பிட்டருளினார். இந்த க்ரந்தம் இப்பொழுது லுப்தம். ரஹஸ்யத்ரய மீமாம்ஸையில் "पठन्तु कतिचिच्चठाः कपचठेति वर्णच्छठाः घटः पट इति तरे कटुरटन्तु वाक्पाटवाक्। वयं वकुळमञ्जरी गळदरीण माध्वीझरी धुरीणगुणरीतिभिः फणितिभिः प्रमोदामहे॥ इति वेदान्याचार्योक्तरीत्या" என்று உதாஹரிக்கப்பட்டிருக்கும் ஸ்லோகம் 74000 படியின் மங்களஸ்லோகங்களில் ஒன்று என்றும், ஸ்ரீபாஷ்யத்திற்கு ஸ்ரீ தத்வடீகையைப் போலே, பகவத் விஷயத்திற்கு நிகமபரிமளம் அருளிச் செய்யப் பட்டதாயிருக்கும் என்பதும் ஸுப்ரஸித்தமிறே. கீழ்ச் சொல்லியபடியே பகவத் விஷயம் ஆரம்பிப்பதற்குக் குறிப்பிடப் பட்ட நன்னாளுக்கு முந்திய தினம் வழக்கம்போல் செல்வப் பிள்ளையை மங்களாஸாஸனம் செய்தருளிய பொழுது அந்த எம்பெருமான் ஸ்ரீ தேசிகனுக்கு அருளப்பாடிட்டருளி, 'நீர் நம்முடைய ஸந்நிதிக்கு முன்பே உம்முடைய பகவத்விஷய காலக்ஷேபத்தை நடத்தும்' என்று நியமித்தருளினார். அப்படியே மறு நாள் காலக்ஷேபம் தொடக்கமான பொழுது, ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் எழுந்து நின்று, "அடியேனுக்கு ஸ்வாமியின் திருக்குமாரரான நைனாராசார்யருடன் இது வரையில் எல்லா க்ரந்தங்களும் காலக்ஷேபம் செய்யும்படியான பாக்யம் ஏற்பட்டது, இத்தால் அவருடன் ஸாதீர்த்யபாவம் உண்டாயிற்று. அவரிடத்தில் ஆசார்யன் என்கிற ப்ரதிபத்தியும் உண்டாவதற்காக இந்த க்ரந்தத்தை அவரிடம் காலக்ஷேபம் செய்யும்படி நியமனம் செய்ய வேண்டும்' என்று ப்ரார்த்தித்தார். ஸ்வாமிபும் மந்தஸ்மிதத்துடன் " உமது ஆசார்ய பக்தியை வெளியிடுகிறது இந்த ப்ரார்த்தனை, உமது இஷ்டப்படியே ஆகட்டும்' என்று நியமித்து விட்டு, நைனாராசார்யர் முதலியவர்களுக்கு காலக்ஷேபம் ஸாதித்தருளினார் என்கிற வ்ருத்தாந்தம் तत्रैव तस्मै यतिराजवीक्ष पात्राय पुत्राय च हर्षयुक्तः। दिव्यप्रबन्धार्थमुपादिशद्यः तं वेदचूडागुरुवर्यमीडे॥ என்று ஸ்ரீவைபவ ப்ரகாசிகையில் ஸூசிப்பிக்கப்பட்டிருக்கிறது. கால க்ரமத்தில் காலக்ஷேபம் முடிந்து சாற்றுமுறை நடந்த காலத்தில் செல்வப்பிள்ளையும் ஸ்ரீ தேசிகனுக்கு ஸகல மரியாதைகளையும்

ப்ரஸாதித்து, "நாம் இது வரையில் யதிராஜ வீக்ஷாபாத்ரம் என்கிற பிருதை நமக்கு அஸாதாரணம் என்று எண்ணியிருந்தோம், எம்பெருமானாருடைய திருவுள்ளத்தை உள்ளபடியே அறிந்தவர் நீர் ஒருவரே என்பது உம்முடைய காலக்ஷேபங்களிலிருந்து நன்கு அறிந்து கொண்டேன், ஆகையினால் அந்த பிருது உமக்கே பொருத்தமுடையது, அத்தை இன்று முதல் நீரே வைத்துக்கொள்ளும்" என்று அருளப்பாடிட்டு அருளினார். திருவரங்கத்தெம்பெருமான் வேதாந்தாசார்யர் என்கிற பிருதைச் சாற்றினதோபாதியும், அடியவர்க்கு மெய்யன் கவிதார்க்கிகஸிம்மம் என்கிற பிருதை அனுக்ரஹித்ததோபாதியும், செல்வப் பிள்ளையும் யதிராஜ வீக்ஷாபாத்ரம் என்கிற திருநாமத்தைச் சூட்டியருளினபடி இது என்றதாயிற்று. இங்கு யதிராஜவீக்ஷாபாத்ராய என்பது செல்வப்பிள்ளையையும், புத்ராயச என்பது ஸ்வாமி தேசிகன் திருக்குமாரரான நைனாரா சார்யரைக் குறிக்கிறது என்று அபிப்ராயப்படுகிறார்கள். சிலர் வீக்ஷாபாத்ராய புத்ராயச என்பது யதிராஜனுடைய ப்ரீதிக்கு விஷயமானவரும் அவரால் புத்திரராகப் பாவிக்கப்பட்டவருமான செல்வப் பிள்ளையைக் குறிக்கிறது என்று அபிப்ராயப்படுகிறார்கள். ஆனால் செல்லப்பிள்ளையின் நியமனத்தினால் ஸ்ரீ தேசிகன் அவர் திருமுன்பே பகவத் விஷயம் காலக்ஷேபம் ஸாதித்தார் என்பதிலாவது, சாற்றுமுறை காலத்தில் அவரால் யதிராஜ வீக்ஷாபாத்ரம் என்னும் பிருதை அளிக்கப் பெற்றார் என்பதிலாவது அபிப்ராய பேதம் கிடையாது.

பிறகு ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் நைனாரா சார்யரிடமிருந்து பகவத்விஷயத்தை காலக்ஷேபம் செய்ய ஆரம்பித்தபொழுது, 74000 படி அருளிச்செய்த உபகார விசேஷத்தை முன்னிட்டு ஸ்வாமி விஷயமாக இத்தனியனை விண்ணப்பம் செய்தார். யதிராஜவீக்ஷாபாத்ரம் என்றதையே இங்கு ராமானுஜ தயாபாத்ரம் என்று அநுஸந்திக்கிறார். காலக்ஷேபம் முடிந்த பிறகு இருவரும் ஸ்ரீ தேசிகனிடம் சென்று, இத்தனியனை விண்ணப்பம் செய்தார்கள்.

ஸ்வாமியும் திருச்செவி சாற்றியருளி, " நமக்குப் பரமோத்தேஸ்யமான பூர்வாசார்யர்களின் கடாக்ஷம் பரிபூர்ணமாய் லப்தமானபடியை இத்தனியன் நன்கு வெளியிடுகிறது. இது பகவத்விஷய காலக்ஷேப காலத்தில், விண்ணப்பம் செய்யப் பட்டபடியால் இதை பகவத் விஷய க்ரந்த காலக்ஷேபங்களில்

அனுஸந்தியுங்கள்' என்று நியமித்தருளினார்.

**அநுஸந்தான க்ரமம்.**

இப்படி இத்தனியனை பகவத் விஷய காலக்ஷேப ஸமயங்களிலே அநுஸந்திக்கும்படி நியமித்தருளி திருநாராயண புரத்திலே எழுந்தருளியிருந்து ஸம்ப்ரதாய ப்ரவசனம் செய்து கொண்டிருக்கும்போது தேசிகனை ஏற்கனவே ஆஸ்ரயித்திருந்த கொப்பணார்யன் என்கிற சிற்றரசன் ஸ்வாமியை தெண்டன் ஸமர்ப்பித்துவிட்டுப்போக அங்கு வந்தான். ஸ்ரீரங்கத்தில் துலுக்கர்களுடைய ஆதிக்கம் மிகவும் குறைந்திருப்பதைக் கேட்டு, அவர்களை நிரஸித்து ஸ்ரீரங்கநாதனை மீண்டும் திருப்ரதிஷ்டை செய்யும்படி நியமித்தருளினார். அவனும் அவ்வாறே செய்வதாக ஒப்புக் கொண்டு, திருவரங்கத்தில் காவல் புரிந்தவர்களை சண்டையில் ஜயித்து ஸ்ரீரங்கநாதனை ஸகல மர்யாதைகளுடன் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு தன்னுடைய பிரதான நகரமான செஞ்சியில் விசேஷமாக ஆராதித்து, ஸ்வாமி தேசிகனை முன்னிட்டு திருவரங்கத்தில் திருப்ரதிஷ்டை செய்வித்தான். ஸ்வாமியும் மிகவும் ப்ரீதராய்க் கொண்டு திருவரங்கத்திலே எழுந்தருளியிருந்து மீண்டும் ஸம்ப்ரதாய ப்ரவசனம் செய்யும்பொழுது திருவத்யயன உத்ஸவம் நடைபெற வேண்டிய சமயத்தில் பல வருஷங்களாக அது நடைபெறவில்லை என்கிற காரணத்தைக் கொண்டு, சிலர் 'இந்த உத்ஸவம் புதிது, தமிழ்ப் பாஷையிலுள்ள ப்ரபந்தங்களைப் பகவத்ஸந்நிதிகளில் சொல்லக்கூடாது, பல வர்ணங்களில் பிறப்பையுடையவர்களான ஆழ்வார்களின் அர்ச்சா ப்ரதிஷ்டை ஆராதனம் முதலியவை செய்யக்கூடாது என்றாக்ஷேபித்தார்கள். அப்பொழுது அவர்களை வாதத்திற்கு அழைத்து, "இந்த உத்ஸவமும் புதிதல்ல, நீங்கள் சொல்லும் ஆக்ஷேபமும் புதிதல்ல, இதே ஆக்ஷேபங்களை இதே இடத்தில் முன்பு சிலர் செய்தார்கள். அவர்களை நிரஸித்த ப்ரகாரம் நம்மால் ஸ்ரீ சததூஷணியில் 65-வது அலேபகமத பங்கமென்கிற வாதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது " என்று எடுத்துக்காட்டி உத்ஸவம் வழக்கம் போலே நடைபெறும்படி செய்தருளினார். இந்த வ்ருத்தாந்தம் "कार्या न भाषाकृतगीतिरत्र

तत्कल्पकार्चाश्चन पूजनीयाः। इत्युक्तपक्षं नृपतेस्समक्षं यः प्राक्षिपत् तं गुरुवर्यमीडे॥' (வைபவ ப்ரகாசிகை - 144 தமிழ் பாஷையில் செய்யப்பட்டதான த்ரமிட ப்ரபந்தங்களை ஸந்நிதிகளில் சேவிக்கக் கூடாது. அவைகளைச் செய்தவர்களுடைய அர்ச்சா ப்ரதிஷ்டை, ஆராதனம் முதலியன நடத்தக் கூடாது என்று ஆக்ஷேபித்தவர்களை ராஜாவின் முன்னிலையில் ஜயித்த ஸ்ரீதேசிகனை சேவிக்கிறேன்) என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பிறகு உத்ஸவம் நடைபெறும் காலத்தில் முன்பு ஸ்ரீமந்நாதமுனிகளினாலும் ஸ்ரீபாஷ்யகாரராலும் ஏற்படுத்தப்பட்ட க்ரமத்தை அனுஸரித்து, ஆழ்வார் ஆசார்யர்களினுடைய அர்ச்சா விக்ரஹங்களுக்கு ஸ்ரீசடாரி முதலிய மரியாதைகள் நடந்த பிறகு, முதலாயிரம் தொடங்குவதற்கு முன்பு அங்குள்ளவர்களில் ப்ரதானரான ஸ்வாமிக்கு அருளப்பாடிட்டருள, ஸ்வாமிக்கு த்ரமிட வேதங்களின் ஈன்ற தாயான குருகூர் நம்பியையும், மொய்ம்பால் வளர்த்த இதத்தாயான இராமானுசனையும் ' ஸாதித்தருள ' என்று ப்ரார்த்தித்து, அவர்கள் தனக்குள் இருந்துகொண்டு ப்ரபந்தானுஸந்தானம் செய்வதாகப் பாவித்து, த்ராவிட வேதங்களின் பொதுத் தனியன்களை அநுஸந்தானம் செய்ய " லக்ஷ்மீ நாத ஸமாரம்பாம்" என்று ஆரம்பித்த பொழுது, *திருவரங்கத்தெம்பெருமான் அர்ச்சக முகத்தால் அதைத் தடுத்து, ' இந்த உத்ஸவம் நடைபெறுவதற்குக் காரணமானவரும் உபய வேதாந்தாசார்யர் என்று நம்மால் முன்பே பஹுமானம் செய்யப்பட்டவருமான உம்முடைய ப்ரபாவத்தை வெளியிடுகிற ' ராமாநுஜதயாபாத்ரம் ' என்னும் தனியனை எல்லாவற்றிற்கும் முற்பட அநுஸந்தியும் '* என்று நியமித்தருள, ஸ்வாமியும் இப்படிப்பட்ட அநுக்ரஹ விசேஷத்தில் ஈடுபட்டு மெய்மறந்து நின்றார். அங்கிருந்த எல்லோரும் " இது ஸ்வாமியின் ப்ரபாவாதிசயங்களுக்கு ஒக்கும் ஒக்கும் " என்று ஆரவாரித்து இத்தனியனை அநுஸந்திக்க, ஸ்வாமியும் மற்றவைகளை அனுசந்தித்து யதாக்ரமம் பெரியாழ்வார் திருமொழியில் முதல் இரண்டு பத்துக்களை அன்று ஸேவித்து

சாற்றுமறை செய்தருளினார். இதே ரீதியில் திருவத்யயனோத்ஸவம் யதாக்ரமம் நடைபெற்றது. ஸ்ரீரங்கநாதனுடைய நியமனம் இது என்றறிந்து மற்ற திவ்யதேசங்களிலும் இத்தனியனை முற்பட அனுஸந்தித்து வருகிறார்கள் வித்வான்கள் என்பதை பன்னீராயிரப்படி குருபரம்பரையில்

वर्षे तत्पर सर्वधारिणी धनुर्मासे तु रङ्गस्थले संप्राप्ताध्ययनोत्सव प्रतिहतिं सम्मोचयन्तं गुरुम्। सम्मान्याखिलहृद्य लक्ष्मणदयापात्राद्य पद्योत्तमम् श्रीश्रीरङ्गपतीच्छया नियमितं दिव्यप्रबन्धाध्ययने॥

तत्पश्चात् भुवि दिव्यदेश पटले श्रीवैष्णवानां गृहे सर्वत्र द्रमिडागम प्रवचनं श्रीरङ्गराट् शासानात्। तत्पद्योत्तम पूर्वमेव सुधियस्सन्तस्तथा कुर्वते तत्सन्तुष्टमनाः सदिष्टफलदः श्रीशस्सदा मोदते॥ (அதற்கு அடுத்த ஸர்வதாரி ஷு மார்கழிமீ ஸ்ரீரங்கத்தில் திருவத்யயனோத்சவத்திற்கு உண்டான தடங்கலை போக்கின ஸ்வாமியை ஸம்மானம் பண்ணி, ராமானுஜதயாபாத்ரம் என்னும் தனியனை திவ்ய ப்ரபந்த ஸேவைக்கு ஆரம்பத்தில் அனுஸந்திக்கும்படி ஸ்ரீரங்கநாதன் நியமனத்தினால் ஏற்பட்டது. அதற்குப்பிறகு இந்த லோகத்தில் எல்லாத் திவ்ய தேசங்களிலும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருமாளிகைகளிலும் ஸ்ரீரங்கநாதன் நியமனத்தினால் அந்தத் தனியனை ஆரம்பமாகக்கொண்டே ஸத்துக்கள் த்ரமிடவேதத்தை அனுஸந்தானம் செய்கிறார்கள். இதனால் ப்ரீதியடைந்த பகவான் அவர்களுக்கு இஷ்ட பலத்தைக் கொடுக்கிறான்.) என்று அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

ஸம்ஸ்க்ருத வேதங்களின் ஆரம்பத்திலும் இறுதியிலும் அனுஸந்திக்கப்படுகிற பெருமை ப்ரணவத்திற்கு இருக்கிறாப் போலே, த்ராவிடவேதங்களின் ஆரம்பத்திலும், சாற்றுமுறையிலும் அனுஸந்திக்கப்படும்படியான பெருமை பெற்றிருக்கும் இத் தனியன். கடவல்லியில் ஓதப்பட்டதாயினும், பகவானாலே பகவச்சாஸ்திரத்தில் சொல்லப்பட்டது என்பதினாலாவது ஆப்தர் உபதேசித்தார் என்பதினாலாவது பூர்வாசார்ய வாக்யம் என்னப் பெற்ற த்வயம் போலே, இத்தனியனும் ஸ்ரீ ரங்கநாதனுடைய நியமனத்தினாலும் அக்காலத்தில் ஸ்வாமியின் ப்ரபாவத்தை நேரில் அனுபவித்த பாகவதர்களின் அங்கீகாரத்தினாலும் மற்றத்

தனியன்களுக்கெல்லாம் முன்பே அனுஸந்திக்கப்படும்படியான பெருமை பெற்றதாயிருக்கும்.

## இத்தனியனின் அவதார காலத்தைப் பற்றிய விசாரம்.

இப்படிக் கீழ்நிரூபித்திருக்கிறபடியே இத்தனியன் கலி 4440வது பஹுதான்ய வருஷத்தில் ஆவணி மாதம் ஹஸ்த நக்ஷத்திரத்தில் ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ரரால் விண்ணப்பம் செய்யப் பட்டது என்பது ஏற்பட்டது. அப்படியே ஸ்ரீரங்கநாதனுடைய நியமனத்தினால் முதல்முதலில் அனுஸந்திக்கப்பட்டு வருவதும் எல்லோரும் அறிந்த விஷயம்.

இதைக்கண்டு ஸந்தோஷப்பட வேண்டியிருக்க ஸத்துக்கள் இருப்பதையே அபராதமாகக்கொண்டு அவர்களை த்வேஷிக்கும் மஹாத்மாக்களைப்போன்ற சிலர் "இது ஸ்ரீ தேசிகன் காலத்தில் அனுஸந்திக்கப்பட்ட தொன்றல்ல, கொஞ்ச காலத்திற்குள் - சுமார் நூற்றைம்பது வருஷத்திற்குள், ஏற்பட்டது, இது வெகுகாலத்திற்கு முன்பே உண்டானது என்று ஒரு நூதன உத்ஸவம் கொண்டாடுவதற்காக இக்காலத்திய பண்டிதர் ஒருவர் " கல்யப்தேஷு" என்றாரம்பிக்கும் ச்லோகத்தை எழுதிவிட்டார்" என்று சொல்லுகிறார்கள்.

இந்தத் தனியனையும் ஸ்வாமி தேசிகனுடைய வாழித் திருநாமம் முதலியவற்றையுமே மூலமாக (மாடலாக) வைத்துக் கொண்டு ஸ்வாமிக்கு பிற்பட்டவரும், ஸ்வாமியின் சிஷ்ய பரம்பரையிலுள்ள ஒருவரிடம் வேதாந்தார்த்தம் க்ரஹித்தவருமான ஒருவரை விசேஷித்துக் கௌரவம் செய்வதற்காக எழுதிய ச்லோகம் முதலியவைகள் அந்த பரம்பரையில் அனுஸந்தித்து வருவது எல்லோரும் அறிந்த விஷயமேயாகையினால் இதை விவரணம் செய்யவேண்டிய அவச்யமில்லை. ஆனாலும் ஸ்வாமி விஷயமானதே முன்னால் எழுதப்பட்டது அதைப் பார்த்து பின்னால் மற்றது செய்யப்பட்டது என்கிற அம்சம் விசாரிக்கப்படுகிறது.

ஸ்ரீ தேசிகன் இந்த விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்திற்கு

க்ரந்தமுகமாகவும், ப்ரவசன ரூபமாகவும், ப்ரதிவாதி நிரஸன ரூபமாகவும் செய்தருளிய உபகார விசேஷங்களை இந்த லோகத்தில் நிலை நாட்ட வேண்டும் என்று திருவுள்ளம் பற்றி ஸ்ரீரங்கநாதன் சில்பி ராஜனோடு வாதம் என்கிற வ்யாஜத்தையிட்டு, ஸ்ரீ தேசிகனுடைய திவ்ய அர்ச்சா விக்ரஹத்தை ஸ்ரீகோசஜ்ஞான முத்ரையுடன் ஏறியருளப் பண்ணும்படி நியமித்தருளினார். ஸ்வாமியும் அந்த நியமனத்தை சிரஸா வஹித்து, விக்ரஹத்தைப் பண்ணியருளினார். தான் செய்து வந்த பீடத்துடன் அதைச் சேர்க்க முடியாமல் கஷ்டப்பட்ட சில்பி, விக்ரஹத்தில் தோஷம் இருப்பதாக ப்ரமித்து, அதை நீக்குவதற்காக தன்னுடைய சிற்றுளியினால் விக்ரஹத்தின் கபோலத்தை தொட, அருகில் நின்ற ஸ்வாமியின் கபோலத்திலிருந்து ரத்தம் பெருகியதைப் பார்த்து சில்பி நடுங்கி உளியை நழுவ விட்டு ஸ்வாமியைத் தண்டன் ஸ்மர்ப்பிவித்து அபராத க்ஷமாபணம் செய்துகொண்டான், ஸ்வாமியும் அப்பீடத்தை வாங்கி அதைச்சீர்ப்படுத்தி விக்ரஹத்துடன் ப்ரதிஷ்டித மாகும்படிசெய்தருளினார். இந்த ஸம்பவம்
कीलकाब्दे धनुर्मासे पञ्चम्यां शुक्ल पक्षके । तत्तारे शिल्पराजं तमजयत् देशिकाग्रणीः|| पीठेस्वकृतके श्लेष्टुं विग्रहं तं तितक्षति| शिल्पराजे समभवत् कपोल रुधिरं गुरोः | यः प्रीत्या रङ्गनाथस्य ज्ञानमुद्रां च पुस्तकम् | अवाप चिह्नभूतं वन्दे वेदान्त देशिकम् || வைபவ ப்ரகாசிகை--153-156.
கீலக வரு மார்கழி மீ சுக்ல பக்ஷம் ஸ்ரவண நக்ஷத்திரம் கூடிய சுப தினத்தில் ஸ்வாமி சில்பிராஜனை ஜயித்தார். தான் செய்த பீடத்தில் ஸ்வாமி செய்தருளிய விக்ரஹத்தைச் சேர்க்கும் பொழுது அந்த சில்பிராஜன் விக்ரஹத்தை உளியால் தொட ஸ்வாமியின் தாடையிலிருந்து ரத்தம் உண்டாயிற்று. எவர் ஸ்ரீரங்கநாதன் ப்ரீதிக்காக, அதாவது அவருடைய நியமனத்தினால் ஸ்ரீகோசம் ஜ்ஞான முத்ரையுடன் தம்முடைய விக்ரஹத்தைச் செய்தருளினாரோ அந்த தேசிகனை ஸேவிக்கிறேன்.) என்று அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. இப்படி ஏறியருளப்பண்ணப்பட்ட அர்ச்சா விக்ரஹம் ஸ்வாமியின் அபிமான விசேஷத்திற்கு ப்ரதான பாத்ரமான திருவஹீந்திபுரத்தில் ஸ்வாமியின்

ஜீவதசையிலேயே அடியவர்க்குமெய்யன் நியமனத்தினால் நைனாராசார்யர் முதலியவர்களினால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது என்பதும், ஸ்வாமி காலத்திற்குப் பிறகு நைனாரா சார்யரால் தஞ்சை மாமணிக்கோவில் முதலிய திவ்யதேசங் களிலும், பிற்பட்டவர்களினால் மற்ற இடங்களிலும் அதே மாதிரியான அர்ச்சா விக்ரஹங்கள் ப்ரதிஷ்டை செய்யப்பட்டன என்பதும் ஸுப்ரஸித்தம். ப்ரஸித்த திவ்யதேசங்களில் ஸ்ரீதேசிகனுடைய அர்ச்சை இல்லாத திவ்யதேசமே இல்லை. பின்பு உண்டான கலாவைஷம்யாதிகளால் ஆக்ரமிக்கப்பட்ட சில திவ்ய தேசங்களில் ஸ்வாமியின் அர்ச்சைக்கு திருவாராதனம் முதலியவை சரிவர நடைபெறாமல் போயிற்று. ஆனாலும் லௌகிக ஸம்பத்துள்ள திவ்யதேசங்களில் பழைய கணக்குகளைப் பார்த்தால் ஸ்ரீ தேசிகனுடைய திருவாராதனத்திற்கென்றே செலவு திட்டம் காணப்படுகிறபடியாலும், பிற்பட்ட மற்றவர்களுக்கு அப்படிப்பட்ட செலவு திட்டம் காணப்படாமையினாலும் ஸ்ரீதேசிகனுடைய ஆராதனமே ப்ராசீனமானது என்பது ஸ்பஷ்டமாக ஏற்படும்.

மேலும் லோகத்தில் ஒருவருக்கு விசேஷ மரியாதை கள் செய்வது என்பது அவர் காலத்திலேயோ அடுத்த ஸமீப காலத்திலேயோதான் இருக்கும். அப்பொழுது கொண்டாடப் படவில்லையாகில் பிறகு அது விஷயமான பிரஸ்தாவமே உண்டாகாது. இதை அனுஸரித்துப் பார்த்தால் ஸ்ரீ தேசிகன் விஷயமான தனியனே முன்பு உண்டானது என்பது ஸித்திக்கும். பின்னால் உண்டானதைப் பார்த்து முன்பே அவதரித்தவராயும் எல்லோராலும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டிருப்பவருமான ஸ்வாமி விஷயமாக இத்தனியன் எழுதப்பட்டிருக்கட்டுமே என்கிற பக்ஷத்தை மத்யஸ்தர்கள் முன்பே நிலைநாட்ட முடியாது. ஸ்வாமியின் விஷயமானதே முன்புண்டானது. இதைப் பார்த்தே பின்பு மற்றவர்களுக்கு எழுதப்பட்டது என்பதையே மத்யஸ்தர்கள் ஒரு ஆக்ஷேபமுமின்றியே அங்கீகரிப்பார்கள்.

இப்படித் திவ்யதேசங்கள் ஆக்ரமிக்கப்பட்டதற்குக் காரணம் எது என்பது விசாரிக்கப்படுகிறது. ஆதியில் அனேகமாய்

எல்லாத் திவ்யதேசங்களிலும் சொட்டைக் குலத்தாருக்கும் கிடாம்பி ஆச்சான் வம்சஸ்தர்களுக்கும் திவ்ய ப்ரபந்தானுஸந்தான உரிமையும் அதையொட்டிய மரியாதைகளும் இருந்து வந்தன. காலத்தின் ஸ்வபாவத்தினால் அவர்கள் அவைகளை நேரில் அனுபவிக்க முடியாமல் போய்விட்டது. ஆகவே அவர்கள் தங்களுக்கு ப்ரதிநிதிகளாக வேறு சிலரை அவ்வுரிமைகளைப் பெறும்படி நியமித்துவிட்டு, தாங்கள் தங்களுக்கு சௌகர்ய முள்ளதாயிருந்த சிலசில திவ்யதேசங்களில் வஸித்து வந்தார்கள். சில விசேஷ உத்ஸவ காலங்களில் மட்டும் நேரில் சென்று அவ்வுரிமைகளை அனுபவித்து வந்தார்கள். நாளடைவில் உண்டான ச்ரத்தைக் குறைவினால் இதற்கும் லோபம் உண்டாகிவிட்டது. பல வருஷங்கள் இப்படிச்செல்ல, அந்த ப்ரதிநிதிகள் அவை தங்களுடையதென்று கொண்டாடி விட்டார்கள். மூல தஸ்தவேஜுகளைக் கொண்டு வ்யவஹாரம் நடத்திய காலத்தில் நீதிபதிகள், அனுபவம் இல்லாமையினால் எழுத்து மூலமான பாத்யம் செல்லாது என்று தீர்மானம் செய்தார்கள். இத்தாலும் ஸ்ரீதேசிகன் விஷயமான தனியனே முன்புண்டாகியது என்பது ஸித்திக்கும்.

மேலும் தற்காலத்தில் இந்தத் தனியன் அனுஸந்தான விஷயமாக நடந்து வருகிற வ்யவஹாரங்களைப் பராமர்சித்தால் ஸ்வாமியின் விஷயமான தனியனே முற்பட்டது என்பதேற்படும். இது மேலே விஸ்தாரமாக நிரூபிக்கப்படுகிறது.

இது வரையில் பொதுவான ஆதாரங்களைக் கொண்டு அவதார காலத்தின் விசாரம் செய்யப்பட்டது. இப்பொழுது க்ரந்தங்களை ஆதாரமாகக் கொண்டு விசாரம் செய்யப்படுகிறது. ஸ்வாமியின் ஸாக்ஷாத் சிஷ்யரான வெண்ணைக் கூத்த ஜீயரால் அனுஸந்திக்கப்பட்ட வாழித் திருநாமத்தில் " சீர்கொள் இராமாநுசா வெனும் மந்திரம் பதிகளில் வாழ்ந்திடு நாள்" என்று அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. இதன் வ்யாக்யானத்தில் "எம்பெருமானும் பிராட்டியும் கேட்டு மகிழும்படி சீர்மைபெற்ற ராமானுஜதயாபாத்ரம் எனும் அநாத்யவித்யாபனஶாச உச்சாடன க்ஷம மந்திரமானது அழகிய மணவாளன் நியமனப்படிக்குக்

கோயில் முதலான திவ்யதேசங்களில் அனுஸந்திக்கப்பட்டு ஜயசீலமாம்படியான நாளாயிற்று என்றபடி“ என்று நிரூபிக்கப் பட்டிருக்கிறது. இத்தால் இத்தனியன் அக்காலத்திலேயே அனுஸந்தானம் செய்யப்பட்டு வந்ததென்பது ஸ்பஷ்டமாய் ஏற்படும்.

மைஸூர் அரசாங்கத்தாரின் ஆதரவில் புராதன சாஸனங்களைப் பரிசீலனை செய்து வெளியிடும் 1938 ஆம் ஷு அறிக்கையில் இந்தத் தனியனுடைய அனுஸந்தான விஷயமாக இரண்டு நிரூபங்கள் வெளியிடப் பட்டிருக்கின்றன. அவற்றில் ஒன்று இங்கு ஸம்ஸ்க்ருத லிபியில் எழுதப்படுகிறது.

कण्ठीरव नरसराजवोडैयरवरु विरोधिसंवत्सर ज्येष्ठ भा १३ लु श्रीमतु मेलुकोटेचामैगे बरसिकळुहिसिद् निरूप अदागि मेलुकोटे तिरुनारायणस्वामियवर सन्निधि मुद्लाद् सन्निधिगळल्लि प्रबन्धानुसन्धानगळु नडवाग राजवुडैयरैय्यनवर आरभ्य नम्म कर्तैय्यनवर दिवसद् वरेगू रामानुजदयापात्र तनियने आवरीतिगे नडदु बन्दु ईगलू अदे रीतिगे रामानुजदयापात्र तनियने नडेसिकोण्डु बरुवदु निरूपद् प्रतियन्नु श्यानबागरा कडित्तक्के बरैसि रामानुजाचार्य सन्निधियल्लि कटिसुवुदु।

இதன் கருத்து - கண்டீரவ நரஸராஜ உடையார் மேல்கோட்டை (திருநாராயணபுரம்) ஸ்ரீமாந் சாமையாகாருக்கு விடுத்த நிரூபம்:

மேல்கோட்டை திருநாராயண ஸ்வாமி ஸந்நிதி முதலியவைகளில் ப்ரபந்தானுஸந்தான காலங்களில் ராஜஉடையார் காலம் முதலாக ஆரம்பித்து நம்முடைய காலம் வரையிலாக அனுஸந்திக்கப்பட்டு வருகிறது “ராமாநுஜ தயாபாத்ரம்“ என்னும் தனியனே. இனிமேலும் அதே ப்ரகாரம் அனுஸந்திக்கப்படட்டும். இந்த நிரூபத்தின் ஒரு ப்ரதி ஷம்போகன் (கணக்குப் பிள்ளை ) வைத்துக்கொள்ள வேண்டும். மூல ப்ரதி திருநாராயணபுரத்தில் எம்பெருமானார் ஸந்நிதியில் ஒட்டப்பட வேண்டும்,என்பது. (விரோதி ஷு ஜ்யேஷ்ட மீ 13 உ)

இதில் ஸ்ரீபரகால மடம் என்று குறிப்பிடாமல் பொதுவில் மேலக்கோட்டையில் ஸந்நிதி முதலியவகளில் என்று குறிப்பிட்டிருப்பதினால் அக்காலத்தில் எல்லா இடங்களிலும்

இத்தனியனே அனுஸந்திக்கப்பட்டு வந்தது என்பது ஸ்பஷ்டமாக ஸித்திக்கிறதல்லவா!

இந்த நிரூபத்தை விடுத்த கண்டீரவ நரஸராஜ உடையார் அரசாண்ட காலம் கி. பி 1704--1713. இதில் விரோதி ஸூ கி பி. 1709. இதில் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கும் ராஜஉடையார் காலம் கி பி. 1579--1618. அவருடைய காலம் முதலாகத் தம் முடைய காலம் வரையிலாக நடந்ததைப் போலவே மேலும் நடைபெறவேண்டுமென உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதினால் முன் அனுஷ்டானத்தை மாற்ற யாரோ ப்ரயத்னப்பட்டிருக்கிறார்கள் என்பதும், பழைய நடை முறையே ஊர்ஜிதப் பட்டிருப்பதினால் அந்தப் புதிய ஏற்பாடு அங்கீகரிக்கப்படவில்லையென்பதும் ஸித்திக்கிறது.

சோபக்ருத் ஸூ பாத்ரபத மீ 5 வ (15 -9-1783) டிப்பு சுல்தானால் விடுக்கப்பட்டது மற்றொரு நிரூபம். இதில் தேவஸ்தான அதிகாரியான பார்த்திபகராகிய குப்பையாவிற்கு உத்திரவு செய்யப்பட்டிருக்கிறது. அரசாங்கத்து உத்யோகஸ்தரான அஞ்சிசாமய்யா என்பவர் புராதனமான அனுஷ்டானத்திற்கு விருத்தமாக தொடக்கம் செய்வதாக அறிந்து, அதைப்பற்றிய உத்திரவு இதில் செய்யப்பட்டிருக்கிறது: அரசாங்க உத்யோகஸ்தர்கள் எல்லோருக்கும் ஸமமாயிருக்க வேண்டுமென்றும்,இனி திருநாராயணபுரத்தில் இரண்டு கலையாருடைய தனியன்களும் அனுஸந்திக்கப்படட்டும் என்றும், இந்த உத்திரவின் நகல் ஷம்போகனிடம் இருக்கவேண்டும் என்றும், மூலம் பரகாலமடத்திற்கு அனுப்பப்படவேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இத்தால் தன்னுடைய செல்வாக்கை வைத்துக் கொண்டு அஞ்சி சாமய்யா என்பவர் அனுஷ்டானத்திற்கு முரண்பாடாக தொடக்கம் செய்வதற்கு ப்ரயத்னம் செய்தார் என்று எற்படுகிறது. கீழில் குறிப்பிடப்பட்ட நிரூபத்தில் இந்தத் தனியனே அனுஸந்தானத்தில் இருந்தது என்பது ஸித்திக்கிறது. ஆகையினால் புதிதாக ஒரு தனியனையே அவர் அனுஸந்திக்க ப்ரயத்னம் செய்திருக்கவேண்டும்,

அரசருடைய உத்திரவு இரண்டையும் அனுஸந்திக்கும்படி இருப்பதினால் மற்றொரு தனியனை அனுஸந்திப்பதில் ஊக்கமுடையவர்கள் இருந்தார்கள் என்பதும், அரசாங்கத்தார் பக்ஷபாதமின்றி இரண்டும் அனுஸந்திக்கப்பட வேண்டும் என்று உத்தரவு செய்திருக்கிறார்கள் என்பதும் ஸித்திக்கும். ஆனால் புதுத் தனியன் எக்காலத்தில் முதன் முதலாக இங்கு ஆரம்பிக்கப்பட்டது என்பது ஏற்படவில்லை.

இதில் மேல்கோட்டை ஸந்நிதி மாத்திரம் சொல்லப் பட்டிருப்பதினாலும், பரகால மடத்திற்கு உத்திரவின் மூல ப்ரதி அனுப்பப்பட்டிருப்பதினாலும், கீழில் நிரூபத்தில்போலே முதலான ஸந்நிதிகளிலே என்று சொல்லப் படாமையினாலும், நரஸராஜ கண்டீரவ உடையார் காலம் முதலாக டிப்பு சுல்தான் காலம் வரையிலாக கடந்துபோன 74 வருஷங்களுக்குள் மேலக்கோட்டை ஸந்நிதியில் மற்றொரு தனியனுடைய அனுஸந்தானத்திற்கு எக்காரணத்தினாலோ ப்ராபல்யம் ஏற்பட்டிருக்கவேண்டும் என்றும், அரசாங்கத்தில் ஏற்பட்ட மாறுதலைக் காரணமாகக் கொண்டு நூதனத் தனியனைச் சிலர் அனுஸந்தித்திருக்க வேண்டும் என்றும், இது ப்ராசீன அனுஷ்டானத்திற்கு விருத்தம் என்று சாமய்யா இத்தனியனை அனுஸந்திக்க ப்ரயத்னம் செய்திருக்க வேண்டும் என்றும், இது அப்பொழுதிருந்த நடை முறைக்கு விருத்தமாயிருந்தபடினால் மேல் அதிகாரிகளுக்கு தகவல் கிடைத்து, அவர்கள் பரிசீலனை செய்து, புராதனமான பாத்யதையையும், அக்காலத்திய நடை முறையையும் பார்த்து இரண்டும் அந்த ஸந்நிதியில் அனுஸந்திக்கப்படட்டும் என்று உத்திரவு செய்திருக்க வேண்டும் என்றும் தோன்றுகிறது. இது எப்படியாயினும் இருக்கட்டும். இத்தனியன் மைஸூர் ஸமஸ்தானத்தில் சுமார் 350 வருஷ காலமாக அனுஸந்தானத்தில் இருந்துவந்திருக்கிறது என்பது நிச்சயம். ஸ்ரீதேசிகனுடைய ஸாக்ஷாத் சிஷ்யரில் ஒருவரும், அவருக்கு பிறகு ஸம்ப்ரதாய ப்ரவசனம் செய்தவருமான ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயருடைய சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவருமான ஒருவரால் பரகால மடம் மைஸூரில்

ஸ்தாபிக்கப்பட்டது என்பது ப்ரஸித்தம். அந்த மடத்து ஸ்வாமியே ராஜ குரு என்னப்படுகிறார். அவருடைய ப்ரதிநிதிகளுக்கே அரசாங்க ஸந்நிதிகளில் தீர்த்தம் சடாரி ப்ரஸாதம் முதலிய ஸகல மர்யாதைகளும். அவருடைய காலத்தில்தான் இத்தனியனுடைய அனுஸந்தானம் ஆரம்பமாயிருக்க வேண்டும். அவர் தம்முடைய தனியனையோ தம்முடைய ஆசார்யனுடைய தனியனையோ ஸ்தாபிக்காமல் இத்தனியனுடைய அனுஸந்தானத்தை ஸ்தாபித்திருப்பதினால் இத்தனியனே அக் காலத்திலே எல்லா இடங்களிலும் அனுஸந்திக்கப்பட்டு வந்தது என்பது ஏற்படுகிறபடியினால் இதுவே புராதனமானது என்பது ஸித்திக்கிறது.

இனி கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட வ்யவஹாரம் நடத்திய தஸ்தாவேஜுகளைப் பராமர்சிப்போம். வ்யவஹாரங்கள் அதிகமாகச் செய்தவற்றில் ப்ரஸித்தமான க்ஷேத்திரங்கள் திருவஹீந்திரபுரமும் காஞ்சீபுரமுமே. திருவஹீந்திரபுரத்தில் கிடாம்பிக் குலத்தாருக்கு தொடக்க உரிமை இருந்தது. அவர்களில் சிலர் தேசிக ஸம்ப்ரதாயத்திலிருந்து மற்றொரு ஸம்ப்ரதாயத்தைக் கைப்பற்றியபடியினால் அந்த உரிமைகளை அனுபவிக்கமுடியவில்லை. அவர்கள் வெகு காலம் அனுபவத் தில் இல்லாத அந்த உரிமையை தங்களிடமுள்ள பழைய தஸ்தவேஜுகளை மட்டும் ஆதாரமாகக் கொண்டு தொடக்க உரிமை தங்களுடையது என்று முன்வந்து புதிதான தனியனை அனுஸந்திக்க ப்ரயத்தனம்செய்ய, அதைத் தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஆக்ஷேபிக்க, வ்யவஹாரம் முற்றி ந்யாயஸ்தலத்தில் நன்றாக விசாரணை நடந்தது. அதன் முடிவு - தொடக்க உரிமை கிடாம்பிக் குலத்தாராகிய உங்களுடையதே, ஆனால் அதை நீங்கள் அனுபவிக்காமல் இருந்துவிட்டபடியினாலும் நூதனமான மந்திரத்தைச் சொல்ல ப்ரயத்தனப்படுகிற படியினாலும் உங்களுக்கு அடியவர்க்கு மெய்யன் ஸந்நிதியில் அப்படிப்பட்ட உரிமை இல்லை - என்பது.

இனி காஞ்சீபுரம் வ்யவஹாரத்தைக் கவனிப்போம். இது தாதாசார்யர்களின் தலைநகரம். ஒரு விதத்தடங்கலும்

இல்லாமல் ஏகபோகமாக எல்லா உரிமைகளையும் அனுபவித்து வந்தார்கள். ஒரு கலாப ஸமயத்தில் ஸ்ரீ தேவாதி ராஜனுடைய திவ்ய அர்ச்சா விக்ரஹத்தை மீட்டுக்கொடுத்த ஒத்தாசைக்கு ப்ரத்யுபகாரமாக அக்காலத்தில் ப்ரபலர்களாயிருந்த தாதாசார்யர்கள் தங்களுடைய உரிமையை அப்படி உபகாரம் செய்த ஆத்தான் ஜீயருக்கு எழுதிக்கொடுத்தார்கள். இப்பொழுது காணப்படும் உடன்படிக்கை ப்ராசீனமான உடன்படிக்கை யல்ல என்று சிலர் அபிப்ராயப்படுகிறார்கள். இவர்கள் சொல்லுவது ஆத்தான் ஜீயர் செய்த உபகாரத்திற்காக அது வரையில் தாதாசார்யர்கள் அனுபவித்து வந்த திவ்ய ப்ரபந்தானுஸந்தான காலங்களில் தொடக்கம் முதலிய உரிமைகளை மட்டும் அவருக்கும் அவருடைய ஸந்ததியாருக்கும் கொடுக்கப்பட்டது. ஆனால் அனுஸந்திக்கப்படவேண்டிய தனியன்களும் வாழித் திருநாமங்களும் ஸ்ரீ தேசிகன் விஷயமானவைகளே. ஆத்தான் ஜீயர் தொடங்கியதும் தாதாசார்யர்களும் மற்றோர்களும் வழக்கம் போல் அனுஸந்தித்து வந்தார்கள். ஸ்வப்னத்திலும் எதிர்பாராத ஒரு உரிமையைப் பெற்றபடியினால் ஆத்தான் ஜீயருக்கும் த்ருப்தி. அக்காலத்தில் இரண்டு கலையாருக்கும் சிற்சில விஷயங்களில் அபிப்ராய பேதங்கள் இருந்த போதிலும் அது தற்காலத்தில் காணப்படுவதுபோல சாஸ்திர வரம்பை மீறவில்லை. அவதார காலப்படி முற்பட்ட ஸ்ரீ தேசிகன் பாஷ்யாதி க்ரந்தபரம்பரையில் அந்யதரானபடியாலும், க்ரந்த முகமாக விசேஷமாக உபகாரம் செய்தவரானபடியாலும் அவர் விஷயமான இத்தனியன் முதலியவற்றை அனுஸந்திப்பதில் அக்காலத்தியவர்களுக்கு ஆக்ஷேபம் இருக்கவில்லை. கலியின் கொடுமையினாலே ஸம்ப்ரதாய ஜ்ஞானத்தைப் பெறுவதில் லோபம் உண்டாயிற்று. ஆகிலும் வைஷம்யம் மட்டும் அதிகமாக வளர்ந்துகொண்டே வந்தது. இத்தைத் தடுக்க ஞானம் ஏற்படவில்லை. ஆகையினால் முதலில் ஏற்பட்டிருந்த உடன்படிக்கையில் கையெழுத்திட்ட தாதாசார்யர்கள் அவரவர்களுடைய ஆசார்யன் திருவடிகளை அடைந்ததும், அந்த உடன்படிக்கையை மாற்றி, தங்கள் ஆசார்யன் விஷயமான

தனியன் முதலியவைகளையே அநுஸந்திக்கும் பாத்தியம் கொடுக்கப்பட்டதாக மாற்றப்பட்டதாயிருக்கும் - என்பது. இது உண்மையாய் இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஏனெனில் தங்கள் ஸ்வரூபத்திற்கே நாசகரமான இப்பொழுது காணப்படும் உடன்படிக்கையை ஒருகாலும் ஒப்புக்கொண்டிருக்கமாட்டார்கள். ஸம்ப்ரதாய ஸ்ரத்தை மிகவும் குறைந்திருக்கும் இக் காலத்தியவரே ஆக்ஷேபிக்கிற இந்த அம்ஸத்தை அக் காலத்தியவர்கள் ஒருக்காலத்திலும் அங்கீகரித்திருக்க மாட்டார்களாகையினால். மேலும் அப்படி அங்கீகரித்ததாக வைத்துக்கொண்டால் தத்காலத்திய வ்யவஹாரங்களுக்கே இடம் உண்டாயிருக்காது, உடன்படிக்கையில் கண்டிருக்கிறபடி வேறு தனியன் அனுஷ்டானத்தில் அநுஸந்திக்கப்பட்டு வந்தால் அதுவிஷயமாய்த் தகராறு உண்டாவதற்கே ப்ரஸ்தாவமில்லை. அனுஷ்டானத்திற்கும் புதிதாகக் காட்டப்பட்ட உடன்படிக்கைக்கும் வித்யாஸம் இருந்தபடியினாலும், உடன்படிக்கை மாற்றப்பட்டது என்பதை ருசுப்படுத்துவதற்கு அதில் கையெழுத்திட்டவர்கள் உயிருடன் இல்லாமையினால் சட்டப்படி அது ப்ரமாணமாய் அங்கீகரிக்கப்பட வேண்டியதாயிற்று. இதில் உண்மை எதுவாகிலும் ஆகட்டும். ஒரு உரிமை புதிதாகக் கொடுக்கப்பட்டது என்றால் அதற்கு முற்பட்டதாய், அனுஸந்திக்கப்பட்டு வந்தது அதைவிட ப்ராசீனமானது என்பது ஸித்தித்து விட்டது. ஆக இத்தனியன் இதற்கு ஸத்ருஸமாகக் கொண்டுவரப்படுகிற தனியனை விட முற்பட்ட காலத்திலிருந்து அனுஸந்திக்கப்பட்டு வந்தது என்பது ஏற்படுகிறது.

இப்படியே திவ்யதேசங்களில் பலவற்றில் ப்ராசீன தினசரியைப் பராமர்சித்தால் ஸ்ரீதேசிகனுடைய திருவாராதனம் நன்றாக நடத்தப்பட்டு வந்தது என்பதும், அது நிரந்தரமாக நடைபெறுவதற்கு, மூல த்ரவ்யம் வைக்கப் பட்டிருக்கிறது என்பதும் ஸ்பஷ்டமாக ஏற்படும். இத்தாலும் பல திவ்ய தேசங்கள் பலாத்காரமாகக் கைக்கொள்ளப்பட்டன என்பது ஸ்பஷ்டம். ஆகையினால் ஸ்ரீதேசிகன் விஷயமான தனியன் பிற்பட்டது என்று சொல்லுமவர்களும், அனுஷ்டானம்

அவதார காலம் முதலியவற்றை அபலபித்து அவருடைய திருவாராதனத்தைக் கடைசியில் நடத்துமவர்களும் ஒரு இனத்தார்கள் என்பதேற்படுமேயன்றி அது ருஜுவான மார்க்கம் என்று ஸித்திக்காது. கீதாச்சார்யனும் अभयं सत्त्वसंशुद्धिः..... अहिंसा सत्यं... भवन्ति संपदं दैवीमभिजातस्य भारत। ... दम्भो दर्पोऽभिमानश्च... न सत्यं तेषु विद्यते (கீதை - "6-1,2,7" பயமில்லாமை ஸத்வ குணத்திற்கு இருப்பிடமான அந்த:கரணத்தின் ஸுத்தி உண்மை இவைகள் தேவதைகளினுடைய ஸம்பத்தை உத்தேசித்துப் பிறந்தவனுக்கு உண்டாகின்றன. அஸுரர்களின் ஸ்வபாவமுடையவர்களிடத்தில் உண்மையும் இல்லை) என்று சொல்லியிருப்பதற்கு இது ஒரு உதாஹரணம்.

மேலும் ஸ்ரீ தேசிகன் விஷயமான இந்தத்தனியன் நவீனமானது - காலத்தினால் பிற்பட்டது என்றே வைத்துக் கொள்ளுவோம். அத்தால் இந்த ஆக்ஷேபம் சொல்லுமவர்களுக்கு லாபம் என்ன? ஸ்ரீதேசிகனுடைய திருவடி ஸம்பந்தத்தினாலே தாங்கள் தன்யர்கள் என்று பாவித்துப் போரும் பரமைகாந்திகள் புதிதாகவே ஏற்பட்ட தனியன் அவதரித்த தினத்தைத் தங்கள் பக்திக்குப் போக்குவீடாக ஓர் உத்ஸவமாகக் கொண்டாடினால் அதை ஆக்ஷேபிப்பதற்கு ஒருவருக்கும் அதிகாரம் இல்லையிறே.

இத்தனியன் ஸ்ரீதேசிகனுடைய பெருமையை யதாவத்தாகக் காட்டவில்லையா? அல்லது இப்படி விசேஷித்து உத்ஸவாதிகளைச் செய்வதற்குத் தகுந்த பெருமை ஸ்ரீதேசிகனுக்கு இல்லையா! மேலே விஸ்தாரமாக இந்த வ்யாக்யானத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறதைப் பராமர்சித்தால் முதல் ஆக்ஷேபம் உசிதமல்ல என்பது ஸித்திக்கும். குருபங்க்தியில் அனுஸந்திக்கப்பட்டுவரும் ஆச்சார்யர்களில் உத்ஸவாதிகள் செய்து கௌரவிக்கத் தகுந்தவர்களில் பிரதானர் ஸ்ரீ தேசிகனே என்பதை ஒருவரும் ஆக்ஷேபிக்கமுடியாது. ஏனெனில் அப்பரம்பரையில் இவர் ஒருவருக்குத் தவிர வேறு யாருக்கு வேதாந்தாசார்யர் என்கிற பிருது லோகத்தில் சகல வஸ்துக்களையும் ஸ்ருஷ்டித்து அவைகளுக்கு உசிதமான நாமரூபங்களைக் கொடுக்கிற ஸர்வேசுவரனாலேயே கொடுக்கப்படும்படியான

பாக்கியம் ஏற்பட்டது? இப்படியே கவிதார்க்கிக ஸிம்மம், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர், யதிராஜவீக்ஷாபாத்ரர், முதலிய பிருதுகள் வேறு யாருக்குக் கிடைத்திருக்கிறது! வேறு எந்த ஆசார்யன், முந்தை மறை மொய்ய வழி மொழி நீ என்று முகுந்தன் தந்த அருள் பெற்று, வேதாந்தார்த்தங்களை எல்லோரும் ஸுலபமாய் அறிந்து, வானேறப் போமளவும் வாழ்வை அடைவதற்கு உபயோகப்படும்படியாகவும் நூற்றிற்கு அதிகங்களாகவும், संक्षिप्तं विस्तृतं वा सरळसमुचितं सावधानप्रियं वा प्राधान्येन प्रणीतं परफणितिपरिष्कारवृत्त्या स्थितं वा ( ஸ்ரீ - ஸங்க - ஸூர் - 2 - 20) சுருக்கமானதாயும், விஸ்தாரமானதாயும், ம்ருதுவான புத்தியுடையவர்களுக்கு ப்ரியமானதாயும் ஊற்றத்துடன் இருப்பவர்களுக்கு ப்ரியமானதாயும் மூலமாகச் செய்யப்பட்டதாயும் பகவானுடைய வார்த்தைக்கு அலங்காரமாகிய வ்யாக்யானமாயிருப்பதாயும்) என்கிற ரீதியிலே சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் ஸரளமாகவும், தமிழ் ஸம்ஸ்க்ருதம், மணிப்ரவாளம் காவ்யம் நாடகம் ஸ்தோத்ரம் வசனம் முதலிய பல வகைப்பட்டவைகளான ஸ்ரீஸூக்திகள் மூலமாக விஶேஷித்து உபகாரம் செய்தருளியிருக்கிறார்! பூர்வாசார்யர்கள் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளுக்கு விஸ்தாரமான வ்யாக்யானமிட்டருளி அவற்றின் உட்கருத்தை லோகத்தில் பரவச்செய்தது யார்? பிரதிவாதிகளின் அட்டஹாஸத்தை அடக்கி முன்னாள் புணராத பரமதப்போர் பூரித்து, தடைபட்டு நின்ற திருவாராதனம் உத்ஸவம் முதலியவைகளை யதாவத்தாக நடத்திவைத்தது தூப்புல் பிள்ளையிறே? பகவான் ஸர்வலோக ஸரண்யன் என்னும் அர்த்தத்தை லோகத்தில் பரவச்செய்து பலர் பகவானுடைய திருவடிகளை அடையும்படி செய்தருளியது யார்? ஆகையினால் இரண்டாவது பக்ஷமும் யுக்தமன்று.

ஸ்ரீ பாஷ்யகாரரால் ப்ரவர்த்தனம் செய்யப்பட்டதான ஸ்ரீவிஸிஷ்டாத்வைத மதம் நவீனமானது என்று சிலர் சொல்லிய ஆக்ஷேபத்திற்கு ஸ்ரீ ஸங்கல்ப ஸூர்யோதயத்தில்

किं ब्रूथ नवीनमेतद् भवतो मतमिति - किञ्चित् केनापि दृष्टं प्रतिहतविषयं त्वेन तत्त्वेन तैस्तैःद्वेचोपादायिषातां द्वितयमपि सदित्यप्रमत्तो न वक्ता।

इत्थं सत्येकभक्तैरितर परिहृतौ न व्यवस्थानसिद्धिः प्रत्येतव्यं तदर्थं पटुतरमतिभिः प्राक्तनं नूतनं वा॥
किञ्च तदात्वे नूतनं सर्वमायत्यं च पुरातनम्। न दोषायैतदुभयं न गुणाय च कल्पते॥

என்று அருளிச்செய்திருக்கும் ஸமாதானம் இங்கும் துல்யம்,

அதாவது - என்ன சொல்லுகிறீர்கள்! உம்முடைய மதம் புதியதென்றா? ஒரு வஸ்து ஒருவனால் பொய்யாகப் பார்க்கப்பட்டது மற்றொருவனால் அது உண்மையாகப் பார்க்கப் பட்டது, அவரவர்களைச் சேர்ந்த ஜனங்களால் அவை இரண்டும் அங்கீகரிக்கப்பட்டன, இரண்டும் உண்மையென்று பைத்தியம் பிடிக்காதவன் சொல்லமாட்டான், இப்படியிருக்க ஒரு கொள்கையில் பக்தியுள்ளவர்களினால் மற்றொன்றை விடுவதில் நிஸ்சயத்தைக் கொடுக்கக்கூடிய யுக்தி முதலியவை ஒன்றும் ஏற்படவில்லை, ஆதலால் எது வஸ்துவின் உண்மையை அனுஸரித்ததோ, அதுவே பழையதாயிருந்தபோதிலும் புதிதாயிருந்தபோதிலும் கூரிய புத்தியுடையவர்களால் நம்பத் தக்கதாகும். மேலும் எல்லாம் அதைச் செய்யும்பொழுது புதியனவே, பிறகு நெடும்காலம் கழித்துப் பழையனவாய் விடும், புதுமை பழமை ஆகிய இரண்டும் தோஷத்திற்கும் காரணமாகாது, குணத்திற்கும் காரணமாகாது. ஆகையால் கீழ் நிரூபிக்கப் பட்டிருக்கிறபடியே இத்தனியனுடைய அர்த்த விசேஷங்களிலும் அதற்கு விஷயமான ஆசார்யனுடைய ப்ரபாவத்தின் மேன்மையிலும் ஒரு விதமான ஆக்ஷேபம் சொல்ல வகையில்லையாகையினால் இது விஷயமாய் சிலர் சொல்லுமது த்வேஷாதிகளின் காரணத்தினால் உண்டானவை என்று அநாதரிக்கத்தக்கவை.

இதற்கு மேல் சில நவீனர்கள் இத்தனியன் அவதரித்த தினத்தைக் குறிக்கிற கீழ் உதாஹரிக்கப்பட்ட ஸ்லோகம் ப்ராசீனமானதல்ல, இக்காலத்திய பண்டிதர் ஒருவரால் புதிதாக உத்ஸவம் கொண்டாடப்படுவதற்காகக் கவனம் செய்யப்பட்டது என்றும், அதில் கவனப்பிழை இருக்கிறது

என்றும் சொல்லுகிறார்கள். இந்த ஸ்லோகம் த்விதீய ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ர ஜீயரால் பன்னீராயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தில் அருளிச்செய்யப்பட்டது என்று நாலாயிரத் தனியன்களின் வ்யாக்யாதாவான ஸ்ரீ வாத்ஸ்யாஹோபிலா சார்யரால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இவர் ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ரருக்குப் பிறகு நாலாவதாகிய ஆசார்யன். காஞ்சீபுரத்தில் ஏற்கனவே வெளியிடப்பட்டிருக்கும் பகவத் விஷய க்ரந்த ஸ்ரீகோசங்களில் இந்த ஸ்லோகம் காணப்படுகிறது. இவற்றை அறியாமலோ, அறிந்தும் அவற்றை மறைத்துவிடலாம் என்று மனப்பால் குடித்துக் கொண்டோவிருக்கும் இவர்கள், எல்லோரும் அருவருக்கக்கூடிய இப்படிப்பட்ட தங்களுடைய அறிவீனத்தை வெளியிடாமலிருப்பதே உசிதம் என்பதை உணரவேண்டும். இந்த சுலோகத்தில் கவனப்பிழை இருப்பதாகச் சொல்லுமவர்கள் தங்களுடைய ஞானத்தின் மாந்த்யத்தையே தெரிவிக்கிறார்களேயன்றி சுலோகத்தில் ஒரு பிழையில்லை. இது இங்கு நமக்கு விவக்ஷிதமில்லையாகையினால் இதை விஸ்தரிக்கவில்லை.

## இத்தனியனுடைய அவதார தினத்தின் ஏற்றம்

இனி இத்தனியன் அவதரித்த தினத்தின் ஏற்றத்தை பராமர்சிப்போம். वेदानां सामवेधोस्मि (கீதை - 10 - 22 வேதங்களுக் குள் சிறந்ததான ஸாமவேதம் நான்.)என்று கீதாசார்யனால் கொண்டாடப்பட்ட ஸாமவேதத்தின் உபாகர்ம தினம் ஆவணி ஹஸ்தமிறே. ஸாமவேதம் பகவானுடைய பெருமையைக் காட்டுவதோபாதி, அந்த பகவானுடைய குருவராவதாரத்தின் பெருமையைக் காட்டும் இத்தனியனும் அந்த வேதத்தின் உபாகர்மத்தன்று அவதரித்தது என்பது ஏற்றம். அன்றிக்கே கானப்ரதானமாகிய ஸாமவேதத்தைப் போலவே இருக்கும் பண்ணமரும் தமிழ்வேதங்களான த்ரமிட வேதங்களின் அனுஸந்தான காலங்களில், அநுஸந்திக்கப்படும் தனியனும், அந்த வேதத்தின் உபாகர்மத்தன்று அவதரித்த ஏற்றம் பெற்றது என்றபடியாகவுமாம்.

## தனியன்

रामानुज दयापात्रं ज्ञानवैराग्यभूषणं ।
श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्तदेसिकम् ।।

ஸமுதாயார்த்தம்

இத்தனியன் ஆசார்ய ஸார்வபௌமனாகிய ஸ்ரீதேசிகனுடைய பெருமையைப் பரக்க வெளியிடுகிற ப்ரகாரம் மேலே விஸ்தாரமாக நிரூபிக்கப்படுகிறது. இதில் நாலு பதங்கள் ஸ்வாமியின் பெருமையை வெளியிடுகின்றன. ஒரு பதம் க்ரியாபதம். இது இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த ஆசார்யன் திறத்தில் ஶிஷ்யர்கள் செய்யவேண்டிய கார்யமாகிற நமஸ்காரத்தைச் சொல்லுகிறது.

இதில் ராமாநுஜ தயாபாத்ரம் என்கிற முதல்பதம் (விசேஷணம்) ஸமஸ்த பதம். இது இவ்வாசார்யன் பூர்வாசார்யர்களுடைய அனுக்ரஹத்திற்கு முக்யமான பாத்ரம் (கொள்கலம்) என்பதையும் ஜ்ஞான வைராக்ய பூஷணம் என்கிற இரண்டாவது விசேஷணம் அப்படிப்பட்ட அனுக்ரஹ விசேஷம் பெறுவதற்குக் காரணமாயிருந்த ஸ்வாமியினுடைய திருக்கல்யாண குணங்களையும், அன்றிக்கே அப்படிப்பட்ட அனுக்ரஹ விசேஷத்தின் பலனாக உண்டான கல்யாண குணங்களின் பூர்த்தியையும், ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் என்கிற மூன்றாம் விசேஷணம் இப்படிப்பட்ட பெருமைகளுக்கு மூலகாரணமான அவதார வைலக்ஷண்யத்தையும், அன்றிக்கே பிறந்து படைத்த ஐஶ்வர்யத்தையும், வேதாந்த தேசிகம் என்கிற நாலாவது விசேஷணம் விசேஷ்யமாகவும் நின்று இப்படிப்பட்ட ஏற்றங்கள் காட்டிலே காயும் நிலவைப் போலே வீணாகாமல் ஸர்வலோக ஹிதார்த்தமாகப் பரவினபடியையும் காட்டுகின்றன. இப்பதங்கள் அர்த்தபஞ்சகம் முதலிய விசேஷார்த்தங்களையும் குறிக்கும்.

**ராமாநுஜ ஶப்தார்த்தம்**

ராம - ராமனுக்கு, அநுஜ - பிற்பாடு உண்டான. இந்தப்பதம் ப்ரதமாசார்யனான எம்பெருமான் தொடக்கமாக ஸாக்ஷாத் ஆசார்யனான கிடாம்பி ராமானுஜ அப்புள்ளார் வரையிலாக

ப்ரஸித்தி பெற்று விளங்கும் குருபரம்பரையிலுள்ள எல்லா ஆசார்யர்களையும் குறிக்கும். எங்ஙனே என்னில் –

(1) रामः रमयतीति रामः மற்றவர்களை ஸந்தோஷப் படுத்துகிறவன் என்றபடி. அதாவது रमन्ते योगिनोनन्ते चिदानन्दे परात्मनि। इति रामपदेनासौ पर ब्रह्माभिधीयते॥ रमन्ते अस्मिन् सूरयः என்கிறபடியே யோகிகள் எல்லோரும் எந்தப் பரமாத்மாவினிடத்தில் செய்யப்படும் த்யானத்தினால் பரம ப்ரீதியை அடைகிறார்களோ, அப்படிப்பட்ட ப்ரீதி விஷயமான பரப்ரஹ்மம் ராம என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. இந்தப் பரமாத்மா திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளி மெத்தையிலே வானிளவரசாய்க் கொண்டு தான் வாழ்கிற வாழ்வை ஸர்வாத்மாக்களும் அனுபவித்து க்ருதார்த்தராக வேண்டுமென்று ஸஹ்ருதயனாய் இருந்த போதிலும் அந்த எண்ணம் கைகூடாமல் உலகத்தவர், உண்டியே உடையே உகந்து ஓடித் திரிந்து நின்றமையினால் அவன் ஏகாகியைப் போலே ஸந்தோஷமில்லாதவனாய் இருக்கும்படியாயிற்று. அந்த தசை மாறும்படி ஜனங்களைத் திருத்தி, ப்ரபத்தியாகிற உபாயத்தின் ப்ரபாவத்தைப் பரக்க நிரூபித்து, அந்த உபாயத்தைப் பலர் அனுஷ்டிக்கும்படி செய்ததின் பலனாக எண்ணிறந்த ஆத்மாக்கள் மோக்ஷம் அடைந்தபடியினால் அந்தப் பரமாத்மாவினுடைய தயைக்கு பாத்திரமானார் என்றபடி. இப்படியே மேலே நிரூபிக்கப்படுகிற ஒவ்வொரு யோசனையிலும் அந்வயித்துக்கொள்வது.

(2) அன்றிக்கே, राम च रामश्च रामौ तयोः अनुजः – रमानुज பிராட்டியும் ராமனும் ராமர்கள், அவர்களுடைய க்ருபைக்குப் பாத்ரமானவர் என்றபடியாகவுமாம். ப்ரமாணங்கள் அகஸ்த்ய ஸம்ஹிதை "वैकुण्ठे तु परे लोके श्रियासार्धं जगत्पतिः। आस्ते" என்றிது முதலியவற்றில் பரப்ரஹ்மம் ஶ்ரிய:பதியாயிருக்கும் என்று உத்கோஷித்தபோதிலும் லோகத்தில் ஜனங்கள் இந்தத் தத்துவார்த்தத்தை (உண்மையை) அறிந்து கொள்ளாமல் லக்ஷ்மி பகவானுக்குச் சக்தி போன்றவள், பரப்ரஹ்மம் என்பது தன்னோடு கூட மற்றொன்றைப் பொறுக்காது, ஆகையினால் அது லக்ஷ்மியுடன் கூட இருக்கமுடியாது என்கிறார்கள். இது

உசிதமன்று என்பதையும் ப்ரமாணபூர்வகமாக நிரூபித்தருளி திவ்ய தம்பதிகளான லக்ஷ்மியும் பகவானுமே நமக்கு உத்தேஶ்யர்கள் என்பதை शेषिदम्पति (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் - நிகமனாதிகாரம்), दम्पती जगतांपती (ஸ்ரீகுருபரம்பரா), युवं दम्पति दैवतं नः (ஸ்ரீஸ்துதி-10), श्रीमान्नारायणोपतिः (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் - பரதேவதா), "ஸ்ரீமானான நாராயணன்", (ஸ்ரீ ரஹஸ்ய ரத்னாவளீ - 2) ஶ்ரிய:பதியான நாராயணன், (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் - நிகமனாதிகாரம்), "விக்ரஹத்தில் ப்ரஹ்மசர்யாவஸ்தையிலுள்பட 'कृष्णाजिनेन संवृण्वन् वधूं वक्षःस्थलालयाम्" என்னும்படியிறே நித்ய யோகம் இருப்பது",(ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் - த்வயாதிகாரம்), "பரதத்வமாவது ஸ்வவ்யதிரிக்த வஸ்துக்கள் எல்லாத்துக்கும் தாரகனுமாய் நியந்தாவுமாய் ஸேஷியுமான ஶ்ரிய:பதி", (ஸ்ரீதத்துவ பதவீ), "தண்டதரத்வமும் புருஷகாரத்வாதிகளும் எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் கூறாக விபஜித்த வ்யாபாரங்கள்", (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் - தத்வத்ரய), "ப்ரதிபுத்தரான நமக்குப் பெரிய பிராட்டியாருடனேயிருந்து என்றும் ஒக்கப் பரிமாறுகிற இவனை யொழிய ப்ராப்யாந்தரமும் ஶரண்யாந்தரமும் இல்லை, இத்தம்பதிகளே ப்ராப்யரும் ஶரண்யரும்", "சாற்றினர் நம் போதமரும் திருமாதுடன் நின்ற புராணனையே", (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் - பரதேவதா), "இப்படி ஶ்ரிய:பதியான நாராயணன் திருவடிகளே உபாய தசையிலும் பல தசையிலும் உபஜீவ்யங்கள்","லக்ஷ்மீ விஶிஷ்டத்வம் உபாயைக்யத்துக்குப் பாதகமாகாது", "யதா ப்ரமாணம் ஶரண்யாபிப்ராய விசேஷானு குணமாக விஶிஷ்டம் உபேயமானாற்போலே விஶிஷ்டமும் உபாயமாகக் குறையில்லை", "ஏகஶேஷித்வத்தாலும் ஏகாபிப்ராயதையாலும் பரஸ்பர ப்ராவண்யாதிஶயத்தாலும் ஸ்வரூபரூபாதிகளில் பிரிவற்ற அந்வய விஶேஷத்தாலும் (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் - ஸித்தோபாயஶோதனாதிகாரம் ) गाढोपगूढानि ते என்னும்படி ஸுஶ்லிஷ்டமான விஶிஷ்ட தத்துவம் நிற்கிற நிலைகுலையாதபடி ஸ்விஶேஷணமான நாராயண ஶப்தம் ப்ரதிபாதிக்கிறபடியை அநுஸந்திக்கை ஸத்துவஸ்தர்க்கு

ப்ராப்தம்",(ஸ்ரீசதுஃஸ்லோகீ - 4 ), "திருநாரணனே மன்னியவன் சரண்" (ஸித்தோபாயஶோதனாதிகாரம்) இத்யாதியான பரஶ்ஶத ஸ்தலங்களில் இம்மிதுனமே பரதேவதை என்று ஸ்தாபித்தருளியது இவர் ஒருவரேயிறே என்றபடியாகவுமாம்.

(3) அன்றிக்கே ராம: என்றது ***ஆத்மாராமனான எம்பெருமானைக்*** குறிக்கிறதாகவுமாம். அதாவது தன்னுடைய திவ்யாத்ம ஸ்வரூபகுண விக்ரஹாதிகளை அனுபவித்துக் கொண்டிருப்பதினால் பரம ப்ரீதனாய் இருப்பவன் பரமாத்மா. அதை இல்லையென்று மறுத்து, பரமாத்மா நிர்க்குணன், நிரவயவன் என்று பிற மதத்தினர் சொல்லுகிறார்கள். இந்த பக்ஷத்தை ஸ்ரீ ஶததூஷணீ முதலிய ஸ்ரீஸூக்திகளில் கண்டித்து, பரமாத்மா ஸகல கல்யாண குணங்களையுடையவன், ஶுபாஶ்ரயமான திவ்ய மங்கள விக்ரஹத்தையுடையவன், என்று ஸ்தாபித்து அருளி அவன் ஆத்மாராமன் என்பது ஸித்திக்கும்படி செய்தருளினபடியினால் அவனுடைய தயைக்குப் பாத்திரமானார் என்றபடி.

(4) அன்றிக்கே, रमा सम्बन्धीति रामः ***லக்ஷ்மியின் ஸம்பந்தம் பெற்றவன்,*** அதாவது அவளுடைய ஸம்பந்தத்தினால் ஏற்றம் பெற்றவன் என்றபடியாகவுமாம். எங்ஙனே என்னில் - பரப்ரஹ்மம் யார் என்று நிர்ணயம் செய்ய ஆரம்பித்தவர்கள் லக்ஷ்மியைத் திருமார்பில் தரித்திருப்பவன் என்று அறுதியிட்டார்கள் இதை மறுத்தவர்களைக் கண்டித்து, இந்த ஸம்பந்தத்தினால் உண்டாகும் ஏற்றம் பகவானுடைய பெருமைக்குப் பாதகமன்று, என்பதை, "जलधिसुतया सार्धं देवो जगत्परिपालयन् परमपुरुषः सिद्धोपायः प्रतिष्टभरस्सताम्" என்றும், "ஸ்ரீமச்சப்தத்தில் தோற்றின நித்யபத்னீ ஸம்பந்த விஶிஷ்டமானாலும் உபாயைக்யத்திற்குக் குறையில்லை" (ஸ்ரீமத் ரஹஸ்ய- ஸித்தோபாய ) ஶ்ரிய:பதித்வ லிங்கத்தாலும் நாராயண ஶப்தத்தாலுமிறே ஶ்ருதிகளில் பரதத்துவ விசேஷ நிர்ணயம் பண்ணப்பட்டது" என்றும், पूर्णं तेजः स्फुरति भवतीपादलाक्षा रसाङ्कम् (ஸ்ரீ ஸ்துதி - 5 ) என்றும் அருளிச்செய்தவராகையினால் என்றபடி.

(5) அன்றிக்கே ராமா என்பது *பெரிய பிராட்டியைக்* குறிக்கிறதாகவுமாம். 'இன்னமுதத் திருமகள்" (குரு பரம்பரா ஸாரம்) என்கிறபடியே ஸாபராதராகிய நம்மைப் போன்றவர்கள் விஷயத்தில் பகவானுக்கு உண்டாயிருக்கும் சீற்றத்தை மாற்றி அவன் நம்மை அங்கீகரிக்கும்படி செய்பவள் பெரிய பிராட்டியாரல்லவா ! இப்படி புருஷகாரமாயிருக்கும் தன்மை இவளுடைய ஈஶ்வரியாயிருப்பதற்குப் பாதகமாகாது. பகவானைப் போலவே உபாயதசையிலும் இவள் ஆஶ்ரயணீயையாகிறாள் என்று நிரூபித்தருளி அவளுடைய பெருமையை வெளியிட்டவராகையினால் என்றபடி.

இவள் அணு, ஜீவகோடிகளில் ஒருத்தி, பகவத் ஸங்கல்பத்தினால் மற்ற வஸ்துக்களுக்கு ஶேஷியாய் இருக்கையைப் பெற்றவளேயன்றி ஸ்வபாவத்திலேயே அப்படிப்பட்ட பெருமையையுடையவளல்லள், பகவானைக் காட்டும் அடையாளம் - உபலக்ஷணம் - மாத்திரமேயன்றி பகவானைப் போலே உபாயதசையிலும் அந்வயமுடையவளல்ல, இவளை எல்லா இடத்திலும் வ்யாபித்திருப்பவள் என்று சொல்லி யிருப்பது தர்மபூத ஜ்ஞானத்தின் வழியாக நித்ய முக்தர்களைப் போல, இவள் ஜீவகோடியிலும் ஈசுவரகோடியிலும் சேராத தனிப்பட்ட தத்துவம், ஈசுவர கோடியில் சேர்ந்தவளாயினும் பகவானையும் தன்னையும் ஒழிந்த மற்ற எல்லா வஸ்துக்களுக்கும் ஶேஷியாயிருந்தபோதிலும், ஜகத் ஶ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களில் அந்வயம் கிடையாது, பகவத் ஸங்கல்பத்தினால் பெற்ற ப்ரபாவ விஶேஷத்தையுடையவள், என்றிப்புடைகளிலே இவளுடைய மேன்மையை வரையறுத்தார்கள் மற்றவர்கள். இவர் ஒருவரே எல்லா ப்ரமாணங்களையும் பரிசீலித்து, அவற்றுடன் முரண்படும் மற்றைப் பக்ஷங்களை நிராகரித்தருளி, இவள் பகவானைப் போலே ஈசுவரீ, பகவான் பதி இவள் பத்னீ என்கிற பேதம் தவிர மற்ற எல்லா விதத்திலும் பகவானுக்கு ஸத்ருஶமான ப்ரபாவத்தை உடையவளாயிருப்பவள், ஆனாலும் இருவரும் சேர்ந்து புருஷகாரத்வாதிகளைப் பிராட்டி கூறாகவும் தண்டதரத்வாதிகளை எம்பெருமான் கூறாகவும் விபஜித்து

- பாகம் செய்து கொண்டிருக்கிறார்கள். பகவானுடைய ஸ்வரூபாதிகளைப் போலே இவளுடைய ஸ்வரூப ரூபாதிகள் ஸ்வதஸ்ஸித்தங்கள் - ஸ்வபாவத்திலேயே ஏற்பட்டவைகள், அனுபவிக்கும் தசையில் போல உபாய தசையிலும் கூட இருந்து மோக்ஷயிஷ்யாமி என்று ஸங்கல்பிப்பவள், ஜகத் ஸ்ருஷ்ட்யாதி ஸங்கல்பங்களில் அந்வயிக்கிறாள், பத்னியும் யஜமானனும் சேர்ந்து இருவர் இருந்த போதிலும் ஒருவன் யஜமானன் என்கிறாப்போலே பரதத்வ விஷயத்திலும் ஒன்று வ்யவஹாரம், என்று நிரூபித்தருளியவர் என்று கருத்து. இவ்வர்த்தங்களை எல்லாம் ஸ்ரீ ஸ்துதி ஸ்ரீ ரஹஸ்ய ரக்ஷை முதலியவற்றில் கண்டு கொள்வது. அன்றிக்கே மோக்ஷம் பெறுவதற்கு ஸாதனமாக எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்ட ஜ்ஞானத்தைக் கொடுப்பவள் இவள் என்பதை "चैतन्य स्तन्यदायिनीम्", (ஸ்ரீ தயாசதகம் - 6), "ஸர்வேசுவரன் இவர்களுடைய பூர்வாபராதத்தாலே இட்ட நினைப்பு ஈடுமாறுகைக்கு ப்ரதான காரணம் மூன்றுண்டு, அவை எவையென்னில்:- அஸ்து மே என்றபேக்ஷித்தால் அஸ்து தே தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே என்கிற திருமுக பாசுரமும்" (ஸ்ரீமத் ரஹஸ்ய - ஸித்தோபாய ) என்றிப்புடைகளில் நிரூபித்தருளியவர் என்றபடியாகவுமாம், அதுவுமன்றிக்கே ஒரு அவதார தசையில் "तेन मैत्री भवतु ते" (ராமா - யுத்த) என்றது ஸவலமாகவில்லையே என்றாக்ஷேபிப்பவர்களுக்கு இப்படி "तेन मैत्री भवतु ते" (ஸ்ரீ அபயப்ரதாந ஸாரம் ) என்றதுவும் ராவணனுக்கு ஶிஶுபாலனான ஜந்மாந்தரத்திலே அந்திம க்ஷணத்திலேயாகிலும் கார்யகரமாயிற்று" என்று ஸமாதானம் அருளிச்செய்து இவள் ஸத்ய ஸங்கல்பத்தை யுடையவள் என்று இவள் பெருமையை நிரூபித்தபடியினால் பெரிய பிராட்டியாருடைய தயைக்கு பாத்திரமானார் என்றபடியாகவுமாம்.

(6) அன்றிக்கே ராமா என்றது ***பூமிப்பிராட்டியைக்*** குறிக்கிறதாகவுமாம். அதாவது அவளுடைய பெருமையை ஸ்ரீ பூஸ்துதியிலும் ஸ்ரீ ரஹஸ்ய ஶிகாமணியிலும் விசேஷித்து அருளிச்செய்தபடியினால் அவளுடைய தயைக்குப் பாத்திரமானார் என்றபடி. "பூமிப்பிராட்டியை ஜகத்துக்கு ஈஶாநா என்று ஶ்ருதி

சொல்லுகையாலே சேதனா சேதன ரூபமான ஜகத்திற் காட்டில் இவளுடைய உத்கர்ஷம் ப்ரஸித்தம். ஸர்வம் ஸஹையான இவளுக்கு ஸர்வேசுவரனைக் காட்டிலும் பெரிய பிராட்டியாரைக் காட்டிலும் க்ஷமாதிகுண பூயஸ்தை உண்டாயிருந்தது. இப்படி யானால் இவளுக்கு தங்களைக் காட்டில் ஏற்றத்தை ஸூரிகளே தாங்களே அறிவார்கள். இத்தை ஸ்ரீ பூமிப்பிராட்டி ஸ்வாபாவிக ஸார்வஜ்ஞ்யத்தாலே அறிந்திருக்கச் செய்தேயும் ப்ரஜா ஹிதார்த்தமாக மாதா கேட்க, ஸர்வபூத ஸுஹ்ருத்தான பிதா அருளிச் செய்த வார்த்தை என்று ப்ரஸித்தமாக வேண்டும் என்று திருவுள்ளம் பற்றி, (ஸ்ரீ ரஹஸ்ய சிகாமணி, ) இத்யாதிகள் இங்கு விவக்ஷிதங்கள்."

(7) அன்றிக்கே ராமா என்றது *நீளாப்பிராட்டி*யைக் குறிக்கிறதாகவுமாம். இவளுடைய ப்ரபாவத்தைத் "திருமகள் மண்மகள் நீளை முதலா எல்லாத் தேவியரும் தன்னுடனே திகழ்ந்து நிற்க"(ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்யம்) என்று நிரூபித்தும், "निशामयतु मां नीला यद्भोगपटलैर्ध्रुवम्। भावितं श्रीनिवासस्य भक्तदोषेष्वदर्शनम्"॥ (தயா சதகம் - 8, ) என்றிப்புடைகளில் இவளுடைய க்ருபை பகவான் பெரியபிராட்டியார் பூமிப் பிராட்டியார் இவர்களுடைய க்ருபையைக் காட்டிலும் அதிகமானது என்றும் நிரூபித்திருக்கிறபடியினால் இவளுடைய தயைக்குப் பாத்திரமானார் என்றபடி. அதாவது பகவானுடைய ஸ்வபாவம் "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்கு மேல் என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்" (பெரியாழ்வார் 4-9-2) என்று சொல்லப்பட்டது. பெரியபிராட்டியாருடைய ஸ்வபாவம் அவதார தசைகளில் " पापानां वा शुभानां वा " (ராமா - யுத்த) என்று பேசப்பட்டிருக்கிறது. க்ஷமையே உருவம் கொண்ட ஸ்ரீபூமிப்பிராட்டியின் விஷயமாய், " वन्दे वृषगिरीशस्य महिषीं विश्वधारिणीम्। तत्कृपा प्रतिघातानां क्षमया वारणं यया॥ " (ஸ்ரீதயா சதகம் 7) என்று நிரூபிக்கப்பட்டது. இவைகளைப் பராமர்சித்தால் பகவான் தன் பக்தர்கள் பாபம் செய்தால் அதை நன்மை செய்ததாக நினைத்துக் கொள்ளுவான். பெரிய பிராட்டியோ

பக்தன் பாபம்செய்தானா நன்மைசெய்தானா என்கிற விசாரமே அனாவஶ்யமானது, எப்படியிருந்தாலும் காப்பாற்றப்பட வேண்டியவன் என்று சொல்லுபவள். பூமிப்பிராட்டியோ எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டுவிடுகிறாள். இவர்கள் மூவரும் பாபம் இருப்பதை அறிந்திருக்கிறார்கள். இவள் ஒருவளுமே தன்னுடைய பாமாலைகளினாலும் தான் சூடிக்கொடுத்த பூமாலைகளினாலும் பகவானைத் தன்னிடம் ஆகர்ஷித்து பக்தர்களின் தோஷங்களைப் பார்க்க முடியாமல் செய்து விடுகிறாள் என்பது இவளுக்கு ஏற்றமாயிருக்கும். இதைத் தான் ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்தில் " अविज्ञाता" என்று சொல்லியிருக்கிறது. அன்றிக்கே ஸ்ரீ கோதா ஸ்துதி முதலியவைகளில் இவளுடைய ப்ரபாவாதிஶயங்களையும் இவளுடைய ஸம்பந்தத்தினால் இவளுடைய திருத்தகப்பனார் மஹத்தரர் என்கிற பட்டம் பெற்றார் என்பதையும் இவள் பகவானை அனுபவித்த ப்ரகாரத்தையே மற்ற ஆழ்வார்கள் பின்பற்றினார்கள் என்பதையும் நிரூபித்து இவளுடைய பெருமையை வெளியிட்டபடியினால் என்றபடி யாகவுமாம்.

(8) அன்றிக்கே ராம என்பது பரமபதத்தில் இருக்கும் எம்பெருமானைக் குறித்து, அநுஜ என்பது அவன் லோக ரக்ஷணார்த்தமாகச் செய்தருளிய விபவாவதாரங்களைப் பொதுவில் குறிக்கிறதாகவுமாம். "இவ் வவதாரங்களெல்லாம் ஸத்யங்களென்றும், இவற்றில் ஈசுவரனுக்கு ஜ்ஞாநாதி ஸங்கோச மில்லை என்றும், இவ்விக்ரஹங்கள் ஶுத்தஸத்துவமயங்கள் என்றும், இவற்றிற்கு ஈசுவரேச்சா மாத்திரமே காரணம் என்றும், தர்ம ரக்ஷணம் பண்ணவேண்டும் காலமே காலம் என்றும், ஸாது பரித்ராணாதிகளே ப்ரயோஜனங்கள் என்றும், இவ்வர்த்தம் தெளிந்து அனுஸந்திப்பார்க்கு ஏக ஜன்மத்திலே ஸ்வாதிகாரானுகுண ஸமீஹித உபாய பூர்த்தியாலே ஜன்மாந்தரமனுபவியாதே முக்தராகலாம்" (ஸ்ரீரஹஸ்ய-- தத்வத்ரய சிந்தனாதி) என்று அவதார ரஹஸ்யார்த்தங்களைப் பரக்க நிரூபித்தருளியபடியினாலும், இந்த அவதார தசைகளில் பக்தர்களை ரஞ்ஜிப்பதற்காகவும்

அஸுர ஸ்வபாவமுடையவர்களை மோஹிப்பதற்காகவும் ஸுக துக்காதிகளை பாவித்ததெல்லாம் கேவலம் அபிநயம் மாத்திரம் என்று அருளிச்செய்திருப்பதினாலும் அவர்களின் தயைக்குப் பாத்திரமானார் என்றபடியாகவுமாம்.

(9) அதுவுமன்றிக்கே ராம- என்னும் பதம் பரமாத்மாவைச் சொல்லி, அநுஜ - என்பது பின்பு அவதரித்த முப்பத்துச் சின்னங்கள் என்று கணக்கிடப்பட்டிருக்கிற விபவாவதாரங்களில் விஶேஷித்து ஜ்ஞான ப்ரதானம் செய்தருளிய ஸ்ரீ ஹயக்ரீவனைக் குறிக்கிறதாகவுமாம். சுருணையிழந்த கணக்கன் நீர்க்கிடை நிலக்கிடை தெரியாமல் பரிதவிக்குமாப் போலே வேதங்களைப் பறிகொடுத்த ப்ரஹ்மா கலங்கிப் பரமாத்மாவை ஸ்தோத்திரம் செய்ய, பகவான் ஹயக்ரீவ ரூபமெடுத்து, பாதாளத்தில் ஒளிந்திருந்த அஸுரனைக் கொன்று, வேதங்களை மீட்டுக் கொடுத்த உபகாரங்களை ஸ்ரீஹயக்ரீவ ஸ்தோத்திராதிகளில் நிரூபித்தருளியபடியினால் என்றபடி. இவரே ப்ரதிவாதி நிரஸனகாலத்தில் அவர்களுடைய ஹ்ருத் பத்ம ஸிம்மாஸனத்திலும், உபதேச காலத்தில் அவர்களுடைய ஜிஹ்வாக்ர ஸிம்மாஸனத்திலும் வீற்றிருந்து அனுக்ரஹிப்பதை நிரூபித்திருப்பதினாலும் என்றபடி யாகவுமாம். அன்றிக்கே குருவாவதாரத்தில் ஸர்வஶாஸ்திரார்த்த ஸங்க்ரஹமாய் அந்த அவதாரத்திற்குப் பரம ப்ரயோஜனமென்று அருளிச் செய்யப்பட்ட ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் இவருடைய அனுக்ரஹமே அந்த க்ரந்தரூபமாக வெளிவந்தது என்பதை "வெள்ளைப் பரிமுகர் தேசிகராய் விரகாலடியோம் உள்ளத்தெழுதியதோலையிட்டனம்"(ஸ்ரீரஹஸ்ய -- நிகமனாதி) என்று வெளியிட்ட படியினால் என்று கருத்தாகவுமாம். அதாவது "பீதகவாடைப் பிரான் பிரம குருவாகி வந்து" அருள் செய்வதும். "பன்னுகலைநால் வேதப்பொருளையெல்லாம் பரிமுகமாயருளிய எம்பரமன்" (பெரிய திருமொழி 7-8, 2-8) என்னப்பட்ட இந்த அவதார ரூபம் கொண்டே என்றதாயிற்று. அன்றிக்கே உபநிஷத்துக்களுக்குள் மிகவும் சிறந்தது என்று தாம் திருவுள்ளம் பற்றிய ஈஶாவாஸ்யோபநிஷத்தின் வ்யாக்யானத்தில் ஹயக்ரீவன்

விஷயமாக மங்களம் அருளிச்செய்திருப்பதினால் அவரே ஸர்வோபநிஷத் ப்ரதிபாத்யன் என்று அவருடைய ப்ரபாவத்தை வெளியிட்டருளினமையால் என்றபடியாகவுமாம். ஸர்வேசு வரனிடமிருந்தே ஸர்வார்த்த க்ரஹணம் பண்ணிய கலியன் வெளியிட்டருளியதான அறிவு தரும் பெரிய திருமொழியை முற்றிலும் மறந்து, ஹயக்ரீவனுடைய அருளால் பெற்ற ஜ்ஞானம் உபாதேயமன்று என்பவர்கள் அவருடைய தயைக்குப்பாத்திரமாக முடியாதல்லவா என்று கருத்து.

(10) அன்றிக்கே கீழ்க்கூறியபடி ராமாநுஜ என்னும் பதம் ஸ்ரீ வராஹநயினாரை குறிக்கிறதாகவுமாம். ஹிரண்யகசிபு பூமியை சுருட்டி எடுத்துக்கொண்டு ஸமுத்திரத்தின் கீழ் ஒளிந்து கொண்ட காலத்தில் ஸ்ரீ வராஹாவதாரம் செய்து, அஸுரனைக் கொன்று, பூமிப்பிராட்டியைக் கரையேற்றி, அவளைத் திருமணம் செய்து கொண்டு, அவளுடைய ப்ரார்த்தனைக்கு இணங்கி, மிகவும் ஸுலபமானதும் எல்லோரும் அனுஷ்டிக்கக் கூடியதுமான ப்ரபத்தியாகிற உபாயத்தை வராஹ சரம ஸ்லோகம் என்னப்படும் இரண்டு ஶ்லோகங்களால் உபதேசித்த உபகார விசேஷத்தை ஸ்ரீ ரஹஸ்ய சிகாமணி என்னும் ஸ்ரீஸூக்தி முதலியவற்றில் நிரூபித்தபடியினால் என்றபடியாகவுமாம். “ஸித்தோபாய பூதராய் ஸத்வஜ்ஞருமான ஸ்ரீ வராஹ நயினார் தம்முடைய வசீகரணார்த்தமாக ஸாத்யமான ஜ்ஞான யஜ்ஞ ஸாரத்தை இவ்வளவிலே ப்ரஸந்நனாய் சந்ம சந்மாந்தரம் காத்து அடியார்களைக் கொண்டு போய்த் தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ்க் கொள்ளும்படியை இரண்டு சுலோகத்தாலே அருளிச்செய்கிறார்“ என்று சுருங்க நிரூபித்தருளி, இதை ப்ரமாண உபபத்திகளுடன் விஸ்தாரமாக உபபாதித்தருளி, ஸம்ஸ்க்ருத பாஷையில் பரிசயமில்லாதவர்களும் இந்த சுலோகங்களின் அர்த்த விசேஷங்களை ஸுலபமாய் அனுஸந்திக்கும்படி ஒரு ச,து, இவற்றின் ஸ்வாரஸ்யம் கூட விடாமல் இடம் பெற்றாரெல்லாம் என்றாரம்பித்து ஒரு பாட்டாலே நிரூபித்திருப்பதும், இந்த அவதாரத்தின் பெருமையை ஸ்ரீ தஶாவதார ஸ்தோத்திரத்திலும் ஸ்ரீ அபீதிஸ்தவத்திலும் அருளிச்செய்திருப்பதும் இங்கனுஸந்தேயம்.

(11) அன்றிக்கே ராமாநுஜ என்பது *சக்ரவர்த்தித் திருமகனைக்* குறிக்கிறதாகவுமாம். ஶரணாகதிவேத மெனப் படும் ராமாயணம் இவ்வவதாரத்தின் பெருமையை நிரூபித்த போதிலும் அது மிகவும் விஸ்தாரமாயிருப்பதினாலும், அறியவேண்டிய விஷயங்களை ஸ்பஷ்டமாகச் சொல்லாமையாலும் அது எல்லோருக்கும் வேண்டிய பயன் தரவில்லை. ஸ்ரீரகுவீர கத்யம் என்னப்படும் மஹாவீர வைபவ ஸ்தோத்திரத்தில் ராமாயணார்த்தங்களை ஸங்க்ரஹித்து ஒவ்வொரு வ்ருத்தாந்தத்தாலும் தெரிவிக்கப்படுகிற குணங்களை ஸம்புத்திரூபமாக நிரூபித்தருளியிருப்பதினாலும் - ராமாயணத்திற்கு அஞ்சுருவாணியான ஶரணாகதி ஶாஸ்திர அர்த்தத்தை ஸ்ரீ அபயப்ரதானஸாரத்தில் விஸ்தாரமாக உபபாதித்து ஶரண்யனுடைய திருவுள்ளத்தை வெளியிட்டிருப்பதினாலும் - ஸ்ரீ ஹம்ஸ ஸந்தேசத்தில் பகவான் தூது விட்டதின் உட்கருத்தைக் காட்டியிருப்பதினாலும் -இந்த அவதாரத்தின் ப்ரயோஜனம் ஸக்ருத் ப்ரபந்நஜந ரக்ஷணைக வ்ரத பரிபாலனம் என்று ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருப்பதினாலும் - பரதாழ்வானுடைய ஶரணாகதி பலன் கொடுக்கவில்லையாகையினால் ஶரணாகதி ஸர்வபலப்ரதம் என்றது பொருந்தாது என்று ஆக்ஷேபிப்பவர்களுக்கு ஸமாதானத்தை "பரதனுடைய ஶரணாகதி ஸபலமானதே. முற்பாடரான தேவர்கள் பண்ணின ப்ரபத்திக்காக ராவண வதத்திற்கு எழுந்து அருளுகையும் பிற்பாடரான ஸ்ரீபரதாழ்வான் பண்ணின ப்ரபத்திக்காக மீண்டும் திருவபிஷேகம் பண்ணி ராஜ்யம் பண்ணுகையும் விருத்தமானபடியினாலே ஸ்ரீ பரதாழ்வானுக்குப் பண்ணினபோதே பரமபலம் சடக்கெனத் தலைக்கட்டித்தில்லையேயாகிலும் அவருக்குக் கைகேயீ கலகத்தாலே ப்ரஸக்தமான அவத்யம் தீரும்படி 'மரவடியைத் தம்பிக்கு வான் பணையம் வைத்துப்போய் வானோர் வாழ' என்கிறபடியே அப்போது ஸாக்ஷாத் பலமான திருவடிகளுக்கு ப்ரதிநிதியான ஸ்ரீ சடகோபனாலே ஸபலத்வம் சொல்லி, பின்பு பூர்வ ப்ரத்ஜ்ஞாதமான தேவகார்யம் தலைக் கட்டினவாறே ஸ்ரீ புஷ்பக விமானத்தாலே ஸாக்ஷாத் பலமான திருவடிகள் ஸ்வயமாக தங்களாய் அயத்னலப்தமானபடி சொன்னான்" என்றும், (ஸ்ரீ அபயப்ரதானஸாரம்) ஸ்ரீ பரதாழ்வான் பண்ணின ப்ரபத்தியாலே அவருடைய விஷயவாஸமாத்ரமே

பற்றாசாகப் பின்பு கோஸல தேசஸ்த ஜந்துஜாத வர்க்கங்களைக் காப்பாற்றினான் என்றும் நிரூபித்து அருளி அந்த ஶரணாகதி ஸபலமானபடியை நிரூபித்திருப்பதினாலும், இதே ப்ரகாரத்தில் ஸமுத்திரராஜனிடத்தில் பகவான் செய்த ஶரணாகதி பலிக்க வில்லையே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக – பகவான் அனுஷ்டித்த வ்யாபாரம் ஶரணாகதியல்ல – பகவான் கையம்பு மாண்டவரல்லாமையாலே அநந்யகதித்வம் என்னும் அதிகாரம் உடையவரல்லாமையினாலும் ஸமுத்திர ராஜனிடம் ஶரண்யனுக்கு வேண்டிய குணபூர்த்தி இல்லாமையினாலும் இங்கு ப்ரஸ்தாவிக்கப்பட்ட கார்யம் ஶரணாகதியன்று, ப்ரதிஶயநாதிபரம் என்று அருளிச்செய்திருப்பதினாலும் – காகாஸுர ஶரணாகதியில் ஶரணாகதி ஶாஸ்திர ப்ரவர்த்தகர்களான மஹர்ஷிகள் ரக்ஷிக்காமல் கைவிட்டார்களே என்கிற ஶங்கைக்கும் ஒரு கண்ணை வாங்கி ரக்ஷித்தபடியினாலே ஶரணாகதனுடைய எல்லாப் பாபங்களும் க்ஷமிக்கப்படும் என்பது பொருந்தாதே என்கிற ஆக்ஷேபத்திற்கும் ஸமாதானமாக – ரக்ஷணம் இரண்டுபடியாயிருக்கும். "தன் ஶக்திக்கு வஞ்சனம் பண்ணாதே ரக்ஷிக்கவேண்டும். அங்ஙன மன்றிக்கே கைக்கொள்ளவுமாம், கைவிடவுமாம் தான் வல்லதொரு விரகால் என்று தாத்பர்யம். ரகு ப்ரப்ருதிகள் ப்ராஹ்மணாதிகளைத் தாங்கள் கைக்கொண்டு ரக்ஷித்தார்கள். தேவர்களும் ரிஷிகளும் காகத்தைப் போக்கற்றதென்று பெருமாள் கைக்கொள்ளுகைக்காகத் தாங்கள் கைவிட்டு ரக்ஷித்தார்கள்" (ஸ்ரீஅபய ப்ரதான ) என்று ரக்ஷணத்தின் ப்ரகார பேதத்தை ஸ்தாபித்தருளி, எம்பெருமான் ஒரு கண்ணழிவு செய்து ரக்ஷணம் செய்ததற்குக் காரணத்தை "காவலினி எமக்கு எங்கும் கடன் என்றெண்ணிக் காண நிலை இலச்சினை அன்றிட்ட வள்ளல்" ( ஸ்ரீஅபய ப்ரதான) என்றருளிச்செய்தபடியாலும் – காவலினி எங்கும் என்பதின் கருத்து – இந்தக் காகத்தின் ரக்ஷணம் இது முதல் எல்லா இடத்திலும் நமது கடனாய் விட்டது, துஷ்ட ப்ரக்ருதியான இக் காகத்தை பூர்ணமாக மன்னித்துவிடுவோமாகில் இது இதே மாதிரியான அபராதத்தை வேறு யாரிடமாவது செய்தால் அவரால் உதைப்புண்டு ப்ராணனை இழக்கும், அப்படியானால்

நம்முடைய ரக்ஷணம் ரக்ஷணமாகாது, ஆகையினால் அதற்கு நல்ல புத்தி உண்டாவதற்காகவும் அபசாரப்பட்டால் தண்டனை கிடைக்கும் என்று தெரிந்துகொள்ளுவதற்காகவும் ஒரு கண்ணை வாங்கியருளினான்- என்பது. “ப்ராணார்த்தியாய் விழுந்த காகத்திற்கு ப்ராணனைக் கொடுக்கையாலே அங்கு ப்ரபத்திபலம் பூர்ணம். துஷ்ப்ரக்ருதியான இக்காகத்திற்கு சிக்ஷையாக ஒரு கண்ணை வாங்கிவிட்டதுவும் நிக்ரஹமன்று, அநுக்ரஹவிசேஷம்“ (ஸ்ரீமத்ரஹஸ்ய - ப்ரபாவரக்ஷா) என்றும், “कृपे काकस्यैकं हितमिति हिनस्ति स्म नयनं“ (ஸ்ரீ தயா -63 ) என்றும் அருளிச்செய்திருப்பதினாலும் - இந்த அவதாரத்தில் ஶரண்யன் தானே வெளியிட்ட அபய ப்ரதான ஶ்லோகத்தின் அர்த்தத்தை ஒருக்காலே என்றாரம்பித்து ஒரு பாட்டாலே நிரூபித்திருப்பதினாலும் என்றபடி. அன்றிக்கே எல்லோரையும் ஸந்தோஷப்படுத்துமவன் என்கிற வ்யுத்பத்திக்கு அனுகுணமாக இந்த அவதாரத்தில் சத்துரு மித்திரன் என்கிற பேதமில்லாமல் எல்லோரையும் ரமிக்கும்படி செய்தமையை “ஶரணாகதனாய் இவர் கைவிடிலும் எங்ஙனம் புகுரிலும் அழியும்படி நிற்கிற விபீஷணாழ்வானையும் இவனை அழிக்க நினைத்த பரிவரையும் ரமிப்பித்தபடியை, விபீஷணாழ்வானுக்கு பஹுமுக பரிபவத்தாலே பிறந்த பரிதாபமெல்லாம் கழியும்படி ரமணீயமாய் நின்ற தயரதன் பெற்ற மரகத மணித்தடமிறே“ (ஸ்ரீஅபயப்ரதான) என்றருளிச்செய்திருப்பதினால் என்றபடியாகவுமாம். அன்றிக்கே எம்பெருமானுடைய பரத்வம் கழற்றவொண்ணாச் சட்டையாய் அவனுடைய ஸௌலப்யமே விஞ்சி இருக்கும் என்றதோபாதி. சக்கரவர்த்தித் திருமகனாய் நின்றாலும் அவனுடைய ஸ்வபாவம் இருந்தபடியை “अनन्यशासनीय - निषाद राज सौहृद सूचित सौशील्य सागर - तरणिसुत शरणागति परतन्त्रीकृत स्वातन्त्र्य“ (ஸ்ரீரகுவீரகத்யம்) என்றருளிச்செய்து பகவான் தன்னிடத்தில் ஶரணாகதி செய்தவர் களிடம் ஒப்புவிக்கப்பட்ட ஸ்வாதந்த்ர்யத்தை உடையவன் என்று பகவானுடைய ஸ்வபாவத்தை வெளியிட்டபடியினால் என்றபடியாகவுமாம்.

(12) அதுவுமன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் ***ஸ்ரீ***

*பரதாழ்வானைக்* குறிக்கிறதாகவுமாம். भरताय परं नमोऽस्तु तस्मै प्रथमोदाहरणाय भक्तिभाजाम्। यदुपज्ञमशेषतः पृथिव्यां प्रथितो राघवपादुकाप्रभावः॥ (ஸ்ரீபாதுகா ஸஹ.2) என்றருளிச்செய்து பகவானுடைய ஸ்ரீபாதுகைகளின் ப்ரபாவத்தை லோகத்தில் வெளியிட்ட உபகாரத்தை நிரூபித்தருளியபடியால் என்றபடி. அன்றிக்கே பகவத் கைங்கர்யமே நமக்கு யாவஜ்ஜீவம் ஸ்வரூப ப்ராப்தம், அதுவும் எம்பெருமான் உகந்தருளின கைங்கர்யமே பரம ப்ராப்யம் என்னும் அர்த்தம் பரதாழ்வானுடைய அனுஷ்டானத்தினால் தெரிவிக்கப்பட்டதாகிறது என்றருளிச் செய்திருப்பதினால் என்றபடியாகவுமாம்.

(13) அதுவுமன்றிக்கே ராமாநுஜ என்பது *இளைய பெருமாளைக்* குறிக்கிறதாகவுமாம். ஸர்வதேச ஸர்வகால ஸர்வ அவஸ்தைகளிலும் ஸர்வ வித கைங்கர்யத்தையும் பகவானுக்குச் செய்வதே நமது கடமை இப்படிப்பட்ட ஶேஷத்வ நிலமை இல்லாத போது ஸ்வரூபம் முடிந்ததாக பாவிக்க வேண்டும் என்கிற அர்த்த விசேஷம் இவருடைய அனுஷ்டானத்தினால் தெரிவிக்கப்படுகிறது என்பதை ப்ரபன்னனானால் "ப்ரார்த்தநீயமான ஶேஷியுகந்த கைங்கர்யத்தை இளையபெருமாளுடையவும் இவருடைய அவதார விசேஷமான திருவடி நிலையாழ்வாருடையவும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளிலே தெளிவது" (ஸ்ரீமத் ரஹஸ்ய -- ப்ரதான) என்று அருளிச்செய்திருப்பதினால் என்றபடியாகவுமாம்.

(14) அன்றிக்கே ராமநுஜ என்னும் பதம் *சத்ருக்னாழ்வானைக்* குறிக்கிறதாகவுமாம். இவர் அனுஷ்டித்துக் காட்டிய பாகவத தாஸ்யமே நமக்கு ப்ரமாணம் என்று கொண்டு அத்தையே ஸார ஶாஸ்திரத்தின் மத்திமமான பதினாறாவது புருஷார்த்த காஷ்டாதிகாரத்தில் நிரூபித்தருளினமையால் என்றபடியாகவுமாம்.

(15) அன்றிக்கே ராமாநுஜ என்கிற பதம் *கீதாசார்யனைக்* குறிக்கிறதாகவுமாம். இந்த அவதாரத்தின் பெருமையை ஸ்ரீ யாதவாப்யுதயம் ஸ்ரீ கோபாலவிம்ஶதி முதலியவைகளில் நிரூபித்திருப்பதினாலும், தன்னை ஆஶ்ரயித்த அர்ஜுநனை வ்யாஜமாகக்கொண்டு ஸர்வலோகமும் அறிந்து

உஜ்ஜீவிக்க வேண்டும் என்று திருவுள்ளம் பற்றி பகவான் ஸர்வவேதாந்த ஸாரமான அர்த்தங்களை ஸ்ரீ கீதையின் ரூபமாக வெளியிட்டருளினான். ஆனால் கீதா ஶ்லோகங்களுக்குத் தங்கள் மனம் போனபடியில் அர்த்தங்கள் சொல்லி அதை நிஷ்ப்ரயோஜனமாக்கிவிட்ட ஸமயத்தில் ஸ்வாமி அவதரித்தருளி ஸ்ரீகீதா பாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை, ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை, ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹப் பாட்டு, முதலியவைகளில் கீதாசார்யனுடைய திருவுள்ளக் கருத்தை வெளியிட்டருளி, அதன் மூலமாய் ப்ரபத்தி ஶாஸ்திரார்த்தத்தை வெளியிட்டருளினபடியினாலும் என்றபடியாகவுமாம்.

*'தீதற்ற நற்குணப் பாற்கடல் தாமரைச் செம்மலர் மேல்*
*மாதுற்ற மாயன் மருவ இக்கீதையின் வண் பொருளைக்*
*கோதற்ற நான்மறை மௌலியின் ஆசிரியன் குறித்தான்*
*காதல் துணிவுடையார் கற்கும் வண்ணம் கருத்துடனே'*

(ஸ்ரீ கீதா-ஸங்க்-பாட்டு-21)

என்று ஸ்ரீகீதை பக்தியோகம் செய்பவர்களுக்கும் ஶரணாகதி நிஷ்டர் களுக்கும் ப்ரயோஜனமாகும் என நிரூபித்திருப்பதினாலும், கீதையினுடைய ஸாரமான ஸமுதாயார்த்தத்தை ஒரு ஶ்லோகத்தில் कृष्णस्तत्त्वं परं तत् परमपि च हितं तत्पदैकाश्रयत्वं शास्त्रार्थोऽयं என்றும், " पिशाच-रन्तिदेव-गुप्त-शङ्कर-यादवप्रकाश-भास्कर- यज्ञस्वामिप्रभृतिभिः स्वंस्वं मथमास्थितैः परश्शतैः भाष्यकृद्भिः अस्मात्सिद्धान्ततीर्थकरैश्च भगवद्यामुनाचार्य भाश्यकारादिभिरविगीत परिगृहितोऽयमत्र सारार्थः 'भगवानेव परं तत्त्वम् अनन्यशरणौर्यथाधिकारं तदेकाश्रयणं प्रमधर्मः" इति॥

என்று நிரூபித்திருப்பதினாலும் என்றபடி. அன்றிக்கே ஸாரார்த்த போதகமான சரம சுலோகம் அங்க ப்ரபத்தி பரமேயன்றி ஸ்வதந்த்ர ப்ரபத்தியை நிரூபிக்கவில்லை, இதில் ஸர்வ தர்மங்களின் ஸ்வரூப த்யாகம் சொல்லப் பட்டிருக்கிறது, ஸர்வ பாப ஶப்தம் புத்தி பூர்வகமாகச் செய்யப்பட்ட உத்தர பாபங்களையும் குறிக்கிறது, என்றிப்புடைகளில் எல்லா ப்ரமாணங்களுக்கும் விருத்தமாக நிரூபித்துப் போருமவர்களுமுள்ள லோகத்தில் ஸ்வாமி அவதரித்தருளி, அந்தப் பக்ஷங்களையெல்லாம் கண்டித்து, தத்வார்த்தத்தை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாராதிகளிலே

பரக்க அருளிச்செய்திருப்பதினால் என்றபடியாகவுமாம். அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞான மூர்த்தியான ஸ்ரீக்ருஷ்ணனால் உபதேசிக்கப் பட்ட கீதையில் எல்லா உபாயங்களும் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதினால் பக்தியும் ப்ரபத்தியும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. யுத்தத்திற்குக் கச்சம் கட்டி வந்து நின்றவனாகிய அர்ஜூநனுக்கு திடீரென்று ஸகல பந்துக்களையும் கொன்றுவிட்டு அவர்கள் ஆசைப்பட்ட ராஜ்யத்தை ஆள்வது உசிதமல்லவே அதைவிட பிச்சை யெடுப்பதே நல்லதென்கிற ஓரெண்ணம் உண்டாக அத்தால் கலக்கப்பட்ட மனதையுடையவனாய், தன்னுடைய வில் முதலிய ஆயுதங்களைக் கீழே நழுவவிட்டு, தான் யுத்தம் செய்யப் போவதில்லை என்று சொல்லாநின்றான். அவனது மனதை மாற்றி அவனைக்கொண்டே பாரத யுத்தத்தை நடத்துவதாக ஸங்கல்பித்திருந்த ஸர்வேசுவரன் அவனுக்கு யுத்தத்தில் ப்ரவ்ருத்தி உண்டாவதற்காக அவரவர்கள் தங்கள் தங்கள் வர்ணாஶ்ரமத்திற்கென்று ஶாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைக் கட்டாயம் அனுஷ்டிக்கவேண்டும், அதை விட வேறு வழியில்லை என்கிற வேதாந்தார்த்தத்தை உபதேசித்து, க்ஷத்ரியவம்சத்தில் பிறந்த அவனுக்கு தர்ம யுத்தம் நடத்துவதை விட வேறு மார்க்கமில்லையென்று காட்டி, அர்ஜூநன் யுத்தத்தில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்வதற்காகவன்றோ இரண்டு ஸேனைகளுக்கும் நடுவில் கீதோபதேசம் செய்தருளியது. இந்த ப்ரகரணத்திற்கு அனுகுணமாகவே எம்பெருமானார் ஸ்ரீகீதாபாஷ்யத்தில் பணித்தருளினது. ஆகிலும் ஸர்வாதிகாரமான ஸ்வதந்த்ர ப்ரபத்தி இந்த சுலோகத்தில் விவக்ஷிதமென்பதை ஸ்ரீ ஶரணாகதி கத்யத்தில் நிரூபித்திருக்கிறார். இதைக் கடாக்ஷித்து சரமசுலோகம் ப்ரபத்தி மோக்ஷத்திற்கு நேரில் உபாயமென்பதைச் சொல்லுகிறது என்று ஸ்பஷ்டமாக நிரூபித்தருளினபடியால் என்றபடியாகவுமாம். அன்றிக்கே இந்தக் கீதா ஶாஸ்திரம் அந்த அவதார காலத்தில் தன் திருவடிகளை ஆஶ்ரயித்த அர்ஜூநனைக் குறித்து உபதேசிக்கப்பட்டதாகையாலே அது ஸர்வோபஜீவ்யமாகாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக

"தன் திருவடிகளைப் பெறுகைக்கும் மற்றும் அபிமதமானவை எல்லாத்துக்கும் பொதுவான ஸாதனமாய் ஆநுகூல்ய ஸங்கல்பாதி வ்யதிரிக்த பரிகர நிரபேக்ஷமாய் லகுதரமாய் க்ஷணமாத்ர ஸாத்யமான ரஹஸ்யதமோபாயத்தை ஶ்ரோதவ்ய சேஷமில்லாதபடி உபதேச பர்யவஸானமான சரம சுலோகத்தால் ஸகல லோக ரக்ஷார்த்தமாக அருளிச்செய்கிறான்" என்றும்,

अनुचितपदवीभिः चिन्तयित्वा प्रयातान्यलमलमतिमात्रैरद्य चित्तेविषादैः।
उपनिषदमुदारामुद्वमन् क्वापि लक्ष्ये शरणमुपगतान्नः त्रायते शार्ङ्गधन्वा॥

என்றும், அருளிச் செய்திருக்கிறபடியால் என்றபடியாகவுமாம்.

(16) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் வாமனனாய் அவதரித்து, த்ரிவிக்ரமனாய் ஓங்கி உலகளந்த உத்தமாவதாரத்தைக் குறிக்கிறதாகவுமாம். அதாவது இந்த அவதாரத்தில் ந்யாய ஸஞ் சாரம், ப்ரமாணாந்தர அபேக்ஷை முதலியன வேண்டாமலே பரதத்துவ நிர்த்தாரணம் செய்யப்பட்டிருக்கிறது என்கிற விஶேஷத்தை

सत्कुर्वतां तव पदं चतुराननत्वं
पादोदकं च शिरसा वहतां शिवत्वम्।
एकत्र विक्रमणकर्मणि तत् द्वयं ते
देहळ्यधीश युगपत् प्रथितं पृथिव्याम्॥ (ஸ்ரீ தேஹளீச ஸ்துதி 12)

என்றும், அப்படிப்பட்ட பரதத்துவம் லக்ஷ்மியுடன் கூடியேயிருக்கும் என்பதை

भिक्षोचितं प्रकटयन् प्रथमाश्रमं त्वं
कृष्णाजिनं यवनिकां कृतवान् प्रियायाः।
व्यक्ताकृतेस्तव समीक्ष्य भुजान्तरे तां
त्वामेव गोपनगरीश जना विदुस्त्वाम्॥ (ஸ்ரீதேஹளீச ஸ்துதி 11)

என்றும் அருளிச்செய்திருக்கிறபடியினால் என்றபடி யாகவுமாம்.

(17) அதுவுமன்றிக்கே ராமெள என்னும் பதம் திவ்ய தம்பதிகளைச் சொல்லி, அநுஜ என்னும் பதம் அவர்களுக்குப் பிறகு ஓர் அவஸரத்திலே அவர்களுடைய நியமனத்தினால் அவர்கள் ப்ரவர்த்தனம் செய்தருளிய இந்த ஸ்ரீவிஶிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்தை மீண்டும் ப்ரவர்த்தனம் செய்ய இந்த லோகத்தில் அவதரித்தருளிய ***விஷ்வக்ஸேநரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவர்

தான் சேனை நாதன் என்றும், சேனைமுதலியார் என்றும் சொல்லப் படுமவர். இவருடைய ப்ரபாவத்தை குருபரம்பரானுஸந்தானப் பாட்டில் பெரிய பிராட்டிக்கு அடுத்தபடி சேனைநாதன் என்றும்,

"वन्दे वैकुण्ठसेनान्यं देवं सूत्रवती सखम्।
यद्वेत्रशिखरस्पन्दे विश्वमेतद्व्यवस्थितम्॥" (ஸ்ரீயதிராஜஸப்ததி3)

"दनुजमथने विष्वक्सेनो भरेस्तदनन्यधीः
अशेषविघ्नशमनमनीकेश्वरमाश्रये।
श्रीमतः करुणाम्भोधौ शिक्षास्रोत इवोत्थितम्॥" (ஸ்ரீதயா சதகம் 5)

என்றும் அருளிச்செய்திருக்கிறபடியினால் என்றபடி யாகவுமாம்.

(18) அன்றிக்கே கீழ்க் கூறியபடியே ராமாநுஜ என்னும் பதம் திவ்ய தம்பதிகளுக்குப் பிறகு லோகஸம்ரக்ஷணார்த்தமாக அவதரித்தருளிய ***ஆழ்வார்களைப் பொதுவில்*** குறிக்கிறது என்ற படியாகவுமாம். அப்பொழுது ஆழ்வார்கள் எல்லோரும் நித்ய ஸூரிகளின் அவதாரம் என்றும்,ஓரோர் அவஸரங்களிலே பகவான் அவர்களைத் தான் விசேஷித்து அதிஷ்டானம் செய்து த்ரமிட வேத ப்ரவர்த்தனமாகிற அதிஶயித கார்யத்தைச் செய்தருளினபடியால் அவர்களை பகவானுடைய அபிநவ தசாவதாரம் என்றும், எப்படி எம்பெருமான் மஹா ப்ரளயத்திற்குப் பிறகு அண்டத்தை ஸ்ருஷ்டித்து அவருக்கு ஸம்ஸ்க்ருத வேதங்களைத் தானே உபதேசித்தானோ, அதைப் போலவே இந்தக் கலியுகத்தில் ஶரணாகதி ஶாஸ்திரத்தை விசேஷித்துப் பரவச்செய்யத் திரு வுள்ளம் பற்றி அதை வெளியிடுகிற த்ரமிட வேதங்களைத் தானே ஆழ்வார்கள் ரூபத்தாலே வெளியிட்டருளினான் என்றும், ஆகையினாலே தான் இரண்டு வேதங்களும் நித்ய நிர்தோஷங்களாய் இருக்கும் என்றும், விஶதமாக வெளியிடுகிறது என்கிற ஆகாரத்தினால் தெளியாத மறைநிலங்களைத் தெளிவிக்கும் என்பதினாலும், ஸர்வாதிகாரமாயிருக்கிறபடியாலும் த்ரமிட வேதங்கள் உத்க்ருஷ்டங்கள் என்றும், பகவானுடைய திவ்யாவதாரங்களில் சேஷ்டைகள் போல இவர்களுடைய அவதார சேஷ்டிதங்கள் இருக்குமென்றும், விதுராதிகளிலும் உத்க்ருஷ்ட ப்ரபாவரானவர்களென்றும், இவர்கள் வெளியிட்டு அருளிய வேதங்கள் ஶ்ராவ்ய வேதங்கள் என்றும், ஸ்வாது

ஸூவ்யாஹ்ருதங்கள் என்றும், பகவதனுபவ பரீவாஹமாய் அவதரித்தவையாகையால் ஸோகத்தின் பரீவாஹமாய் உண்டான ராமாயணத்தைக் காட்டிலும், கருணையின் மிகுதியாலுண்டான கீதையைக் காட்டிலும் ஶ்ரேஷ்டங்கள் என்றும், ஒருகோடி மறைகள் பின்தொடர்ந்தாலும் அவற்றால் காணமாட்டாச் செல்வனும் இப்ரபந்தங்களின் முன் செல்லாமல் இவற்றை மெய்நின்று கேட்டருளும் என்றும், இவர்களுடையவும் இவர்கள் வெளியிட்டருளிய திவ்ய ப்ரபந்தங்களினுடையவும் ப்ரபாவத்தை ஸ்ரீகுரு பரம்பரா ஸாரம், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம், ஸ்ரீ த்ரமிடோப நிஷத் தாத்பர்ய ரத்னாவளீ முதலியவற்றில் பரக்க நிரூபித்தருளினபடியால் என்றபடியாகவுமாம். இவர்களை நித்ய ஸம்ஸாரி என்பவர்கள் இவர்களுடைய தயைக்குப் பாத்ரமாகமாட்டார்களல்லவா!

(19) அன்றிக்கே ராமாநுஜ என்பது இந்த ஆழ்வார்களில் முதலில் அவதரித்தருளிய முதலாழ்வார்கள் என்னப் படும் பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் இவர்கள் மூவரையும் குறிக்கிறதாகவுமாம். முதல் மூன்று திருவந்தாதிகளை ஸாக்ஷாத் கரித்து வெளியிட்டவர்களும், “இன்கவி பாடும் பரம கவிகளால்“ (திருவாய் - 7 - 9 - 6 ) என்றும், “செந்தமிழ் பாடுவார்“(பெரிய திருமொழி) என்றும் கொண்டாடப்பட்டவர்களுமான இவ் வாழ்வார்களுடைய அவதார ப்ரபாவம் முதலியவற்றை ப்ரபந்த ஸாரத்தில் பொதுவில் நிரூபித்தருளி, ‘ பாட்டுக்குரிய பழையவர்“ (அதிகாரசங்க்ரஹம் - 50) என்கிற பாட்டில் இவர்களை பகவானை எப்பொழுதும் அனுபவித்துக்கொண்டு தமிழ்ப் பல்லாண்டு இசையுடன் பாடும் ஸூரிகள் அவதாரம் என்றும், நாட்டுக்கு இருள் செக, நான்மறையந்தி நடை விளங்க, வீட்டுக்கு இடைகழிக்கே வெளிகாட்டும் மெய் விளக்கு என்னும்படியான தீபத்தை ஏற்றினார்கள் என்றும், துஞ்சா நீர் வளம் சுரக்கும், பெண்ணையாற்றங்கரையின் ஓரத்தில் வளருகிறபடியால் மிகவும் அதிகமான ரஸத்தையுடைய கரும்பாகிற பகவானை நெருங்கி, அதாவது அவனுடைய திருக்கல்யாண குணங்களை சீர் தூக்கிப் பார்த்து, அவற்றில் மிகவும் ரஸமான பாகமான,

ஸௌலப்யமே ப்ரதானமானது என்று அறிந்து அதையே மூன்று திருவந்தாதிகளில் வெளியிட்டார்கள் என்றும், பகவானுடைய ஸ்வரூபாதிகளை இன்னமும் விசாரித்து கொண்டிருக்கும் வேத வாக்யங்கள் போலன்றிக்கே பகவானை வளைத்துக்கொண்டு அவனை ஓரிடத்தில் நிறுத்தி, இரண்டு பக்கத்திலும் இரண்டு தீபங்கள்போல் முதல் திருவந்தாதியும் இரண்டாம் திருவந்தாதியும் நிற்க, அத்தால் கண்ட பரதத்துவத்தின், ஸ்வரூபாதிகள் மூன்றாம் திருவந்தாதியில் விவரிக்கப்பட்டிருக்கின்றன என்றும், ஆகையால் "திருக்கண்டேன்" (முதல் பாட்டு ) என்றாரம்பித்து நிஷ்கர்ஷிக்கப்பட்டிருப்பதே ப்ரமாண தமமானது என்றும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம், ஸ்ரீ தேஹளீச ஸ்துதி, ஸ்ரீஸச்சரித்ர ரக்ஷை முதலியவைகளில் அருளிச்செய்திருப்பதால் என்றபடியாகவுமாம்.

(20) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் ***திருமழிசை ஆழ்வாரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவர் சக்கரத்தாழ்வானுடைய அவதாரம் என்பதை "மழிசை வந்த சோதி" (ஸ்ரீ குருபரம்பரா ஸாரம் )என்றும், இவர் "நாயினேன் செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞால நாதனே" (திருச்சந்தவிருத்தம் - 111 ) என்று அனுசந்தித்திருப்பதற்கு ப்ரபன்னன் பாபம் செய்தால் அபச்சார க்ஷாபணம் பண்ணவேண்டியதில்லையென்று ப்ரமாணங்களுக்கு விருத்தமாக வ்யாக்யானம் செய்து அவருடைய திருவுள்ளத்தை புண்படுத்தினார்கள் மற்றவர்கள். இவரோ அதற்கு ஸ்வரஸமான அர்த்தத்தை "தாத்பர்யத்தைப் பார்த்தால் க்ஷமிக்கவேணுமென்று அபேக்ஷித்தபடியாகையாலே ப்ரபன்னனுக்கும் அபராதம் புகுந்தால் ..... க்ஷமைக் கொள்ளப் ப்ராப்தம்" (ஸ்ரீமத்ரஹஸ்ய - ப்ரபாவ வ்யவ ) என்றும் அருளிசெய்திருப்பதினால் என்றபடியாகவுமாம்.

(21) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் ***நம்மாழ்வாரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவருக்கு ஆழ்வார் கோஷ்டியிலும் ஆச்சார்ய கோஷ்டியிலும் உள்ள அந்வயத்தால் ஏற்பட்ட ஏற்றம் முதலியவற்றை மறந்து நித்ய சூரியான இவரை நித்ய ஸம்ஸாரி என்றார்கள் சிலர். இவர் வெளியிட்டருளிய ப்ரபந்தங்களுக்கு ஓராண்வழியாக வந்ததாய், ஸ்ரீ பாஷ்யகாரரால் நியமிக்கப்பட்டு

பிள்ளான் பணித்தருளிய திருவாறாயிரப் படிக்கும் ஸ்ரீ பாஷ்யாதி ப்ரமாணங்களுக்கும் சேராமல் வ்யாக்யானமிட்டார்கள் சிலர். இப்படி இவருடைய ப்ரபாவத்தை மட்டுப்படுத்தியது உசிதமன்று எனத் திருவுள்ளம் பற்றி இவருடைய பெருமையை நாட்டில் நிலை நிறுத்தியபடியால் என்றபடியாகவுமாம். அதாவது இவருடைய அவதார விஷயம் பகவானுடைய திருவவதாரங்கள் போலே தேவகுஹ்யமாகையால் அது விஷயமாய் ஹேது நிர்த்தேசம் செய்யக்கூடாது. அதாவது பகவான் வடமதுரையில் பிறந்து கோகுலத்தில் ஏன் வளர்ந்தான்? கீதையை எப்படி உபதேசித்தான்? குரவை கோத்தது ஏன்? என்றிவை முதலாக எப்படி ஆக்ஷேபிக்கமுடியாதோ, அதைப் போலவே ஆழ்வார் விஷயத்திலும் அவர் ஏன் சதுர்த்த வர்ணத்தில் அவதரித்தார் - ஸ்ரீமதுரகவிகளுக்கு வேதாந்தோபதேசம் எப்படிச் செய்தார் - என்றாக்ஷேபிக்கக்கூடாது என்பதை

"द्रमिडोपनिषद्रष्टुरस्य माहात्म्यमद्भुतम्। संयक् श्रुतवतान्नात्र शङ्कनीय उपप्लवः॥ कः देवगुह्येषु चान्येषु हेतुर्दैवि निरर्थ" इत्यादि न्यायदृष्ट्या च तोष्टव्यमिह सूरिभिः ॥ (ஸ்ரீஸ்தோத்ர பாஷ்யம் - 5) என்று அருளிச்செய்திருப்பதினாலும் व्यपोह्य स्वं भावं हरिचरणसन्तानकलिकामविक्षद्योगी यस्तनुमत कारुण्यविवशः॥ (ஸ்ரீ த்ரமிடோபநிஷத்ஸாரம் -24.) "இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்ம நந்த்யாதிகளுக்குப் பின்பு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானார்" (ஸ்ரீ ஸம்ப்ர.பரி) என்றும், ஸ்ரீ மதுரகவிகள் முதலாக உண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும், திருவாய்மொழி முகத்தாலும், யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆச்சார்ய ரானார்" என்றும், "இவரை ப்ரபன்னஸந்தான கூடஸ்தையாலே ஸ்ரீஆளவந்தார் அருளிச்செய்தார்" (குருபரம் ) என்றும், अथ पराशर प्रबन्धादपि वेदन्तरहस्य वैशद्यातिशयहेतुभूतैस्सद्यः परमात्मनि चित्तरञ्जकतमैः सर्वोपजीव्यैः उपब्रह्मणैः मधुरकविप्रभृति सम्प्रदाय परम्परया नाथमुनेरप्युपकर्तारं कालविप्रकर्षेण्णपि परमपुरुषसङ्कल्पात् कदाचित् प्रातुर्भूय साक्षादपि सर्वोपनिषत्सारोपदेष्टारं पराङ्कुशमुनिम् (ஸ்ரீ ஸ்தோத்ர பாஷ்யம் - 5. பிறகு பராசரருடைய பிரபந்தத்தை விட வேதாந்தங்களின் ரஹஸ்யமான அர்த்தங்களை மிகவும் விசதமாக அறிந்து கொள்வதற்கு காரணங்களாயும், அப்பொழுதே பரமாத்மாவின் மனதுக்கு

த்ருப்தியை உண்டுபண்ணக்கூடியனவாயும் எல்லோராலும் உபஜீவிக்கவேண்டியனவாயுமிருக்கிற ப்ரபந்தங்களினால் மதுரகவி முதலாக உண்டான ஸம்ப்ரதாயத்தின் வரிசையினாலும் ஸ்ரீமந் நாத முனிகளுக்கும் உபகாரம் செய்தவராயும், வெகு காலம் கழிந்தும் பகவானுடைய சங்கல்பத்தினால் ஒரு ஸமயத்தில் யோகதசையில் அவிர்பாவம் செய்து நேரில் எல்லா உபநிஷத்துக்களுக்கும் ஸாரமான அர்த்தத்தை உபதேசம் செய்தவராயும் இருக்கிற நம்மாழ்வாரை) என்றும் அருளிச்செய்திருப்பதினாலும் - மஹாப்ரளயத்தில் ஸம்ஸ்க்ருத வேதங்களைத் தன்னுடன் வைத்திருந்து மறுபடியும் ஸ்ருஷ்டி காலத்தில் ப்ரஹ்மாவிற்கு உபதேசித்தாலும் அவற்றிற்கு மதுகைடபாதிகளால் உபரோதம் ஏற்பட அதை நீக்கி மீண்டும் அவற்றை ப்ரவர்த்தனம் செய்தாலும் வேதங்களின் ஆநுபூர்வியும் நித்யமாயிருப்பதும், எப்படிப் பாதிக்கப்படவில்லையோ அதைப் போலவே, அந்த எம்பெருமானே ஆழ்வார்கள் மூலமாய், த்ரமிடவேதங்களை முதலில் வெளியிட்டபடியாலும் கலியுகத்தின் ஸ்வபாவத்தால் த்ரமிட வேதங்களுக்கு ஏற்பட்ட மறைவை நம்மாழ்வார் மூலமாய் ஸ்ரீமந் நாதமுனிகளுக்கு உபதேசித்து, மீண்டும் அவற்றை லோகத்தில் பரவச்செய்தபோதிலும் த்ரமிட வேதங்களின் ஆனுபூர்வியும் நித்யத்வமும் பாதிக்கப் படவில்லை என்று ஸமர்த்தித்திருப்பதாலும் - ஒரு ஸமயத்தில் பகவான் ஆழ்வாரிடத்திலும், த்ரமிட வேதங்களிடத்திலும் தனக்கு உள்ள ஆதராதிஸயத்தினால் த்ரமிட வேதங்களில் அந்வயமில்லாதவர்களை வைகுண்டத்திற்குள் விட வேண்டாம் என்று ஸ்ரீவிஸ்வக்ஸேனருக்குக் கட்டளையிட, மஹா கருணாநிதியான ஆழ்வார் அப்படிப்பட்டவர்களை காப்பாற்றத் திருவுள்ளம் பற்றி, ஸ்ரீபாதுகைகளாக அவதரித்து, அவற்றின் மூலமாக த்ரமிட வேதங்களின் ஸம்பந்தத்தை அநேகருக்கு உண்டாக்கினபடியை " द्रमिडोपनिशन्निवेशशून्यानपि लक्ष्मीरमणाय रोचयिष्यान्। ध्रुवामाविशति स्म पादुकात्मा शठकोपः स्वयमेव माननीयः।।" (ஸ்ரீபாதுகாஸஹஸ்ரம் 2-2) என்றருளிச் செய்திருப்பதாலும் - இவரும் மற்றைய ஆழ்வார்களும்

ப்ரத்யக்ஷீகரித்து வெளியிட்டருளின த்ரமிட வேதங்கள் தமிழ்ப் பாஷையிலிருப்பதாலும், கான ப்ரதானமாயிருப்பதாலும் இவைகளை பகவத் ஸந்நிதிகளில் அநுஸந்திக்கக்கூடாதென்று ஆக்ஷேபிப்பவர்களுக்கு ஸமாதானமாக भाषागीतिः प्रशस्ता भगवति वाचनात् राजवच्चोपचारात् (ஸ்ரீ த்ரமிடோபநிஷத் தாத் - 4) (பாஷையும் ப்ரஸஸ்தமானது, கீதியும் ப்ரஸஸ்தமானது, பாஷா கீதியும் ப்ரஸஸ்தமானது என்றிவை முதலாக நிரூபித்திருப்பதினாலும் - இதன் கருத்து - வ்யாகரணம் இல்லாத மற்றைப் பாஷைகள் நிஷேதிக்கப்பட்டனவேயன்றி பாணினியைப்போல பெருமை வாய்ந்த அகஸ்த்ய மகரிஷியால் செய்யப்பட்ட பேரகத்தியம் என்னும் இலக்கணத்தையுடையதாகையால் தமிழ்ப் பாஷை நிஷேதிக்கப்பட்டதன்று, ருத்திரனுடைய ஒடுக்கில் இருந்து உண்டான ஸப்தராசிகளே ஸம்ஸ்க்ருத பாஷைக்கு மாத்ருகாக்ஷரங்களாய் நின்றாப்போல் அந்த உடுக்கிலிருந்தே மற்றொரு ஸமயம் உண்டான ஸப்தங்களே தமிழ் பாஷைக்கு உயிரெழுத்துக்களாயும் மெய்யெழுத்துக்களாயும் நிற்பதினாலே தமிழ் பாஷை ஸம்ஸ்க்ருத பாஷை போலே ப்ரஸஸ்தமானது. பகவானை அன்றி மற்றவர்கள் விஷயமான கானமே ஸாஸ்த்ரங் களில் தடுக்கப்பட்டிருக்கிறதேயன்றி பகவத் விஷயமான கானம் ப்ரஸஸ்தமானது, கேட்டாராத செவிக்கினிய செஞ்சொற்களாய் பரமாத்மா திருச்செவி சாற்றியருளின அவனுக்கு ப்ரீதியை உண்டாக்குகிறபடியால் பாஷாகீதியும் ப்ரஸஸ்தமானது - என்பது) 1. नित्यं जाता शटरिपुतनोः निष्पतन्ती मुखात्ते प्राचीनानाम् श्रुतिपरिषदां पादुके पूर्वगण्या|| (ஸ்ரீ பாதுகா சஹஸ்ரம் 2-9) 2.ताम्रपर्णी तटगत शठजित् दृष्ट सर्वीय शाखा (ஸ்ரீ த்ரமிடோபநிஷத் தாத்ப - 10) 3.आत्मनां प्रकृतिमपरां संद्दितां दृष्टवन्तम् (ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரம் 1-3) 4.अखिलाद्रामिडब्रह्मदर्शी(ஸ்ரீ த்ரமிடோபநிஷத் தாத்ப - 118) 5. वकुळधरतनुस्तवं संहितां थामपश्यः(ஸ்ரீ பாதுகா நாத பத்ததி - 76) 6. वकुळ-रमहर्षि दृष्टे द्रमिडानिगमे (ஸ்ரீ ஸச்சரித்ர ரக்ஷை) 7. श्राव्य वेदात् (ஸ்ரீதாத்பர்ய ரத்னாவளீ - 130 ) 8. शटजिदुपनिषद्दुग्धसिन्धुं (ஸ்ரீதாத்பர்ய ரத்னாவளீ - 2) 9. वेदानागस्थभाषा वपुष उदधरत श्रेयसेदेहिनां थः (ஸ்ரீ தாத்பர்ய ரத்னாவளீ - 130 )10. शठमथन

मुनेः संहिता सार्वभौमी (ஸ்ரீ தாத்பர்ய ரத்னாவளீ - 4) 11. वकुलधर महर्षि दृष्ट विश्वजनीनोपनिषत् (ஸ்ரீ தாத்பர்ய ரத்னாவளீ - 130) 12 'கறந்த பாலுள் நெய்யே போல' ( ஸ்ரீ தத்வ த்ரய சுளகம்) என்கிற த்ராவிடோபநிஷத்வாக்யத்திலும் காணலாம். 13 "யானும் தானாய் ஒழிந்தான், (திருவாய்மொழி )இத்யாதி த்ரமிடோபநிஷத் வாக்யங்களுக்கும்", 14 "ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழியும் ஓதி"(ஸ்ரீ குருபரம்பரா ஸாரம்) என்றிவை முதலியவற்றை அருளிச்செய்து இவருடைய ப்ரபந்தங்களை உபநிஷத்துக்களாக நிரூபித்து இவை வேதங்களைப் போலவே ஆச்சார்ய உச்சாரண அனுச்சாரண ரூபமாகவே க்ரஹிக்கப்படவேண்டும் என்று நிரூபித்தும் இருப்பதினாலும் "பராங்குசபரகாலாதி ரூபத்தாலே அபிநவமாக ஒரு தசாவதாரம் பண்ணி" (ஸ்ரீ குருபரம்பரா ஸாரம்) என்றருளிச்செய்து இவருடைய ப்ரபாவத்தை வெளியிட்டிருப்பதினாலும், " பாவளரும் தமிழ்ப் பல்லாண்டு இசையுடன் பாடுவமே" "விண்ணவர் தங்குழாங்களுடன் வேதம்பாடிப் பண்ணுலகில் படியாத இசையால் பாடும் பல்லாண்டே பல்லாண்டும் பாடுவோமே,(ஸ்ரீ பரமபதசோபனம்18,20) என்று அருளிச்செய்து இவரால் ப்ரவர்த்தனம் செய்யப்பட த்ரமிட வேதங்கள் நித்யங்கள் என்று ஸ்தாபித்திருப்பதினாலும், (அதாவது, सर्गोपि नोपजायन्ते प्रळये न व्ययान्ति च (ஸ்ரீகுருபரம்பரா ஸாரம்) என்கிறபடியே ஸ்ருஷ்டி காலத்திலும் ப்ரளய காலத்திலும் மாறுதலில்லாதது என்று ப்ரஸித்தி பெற்ற பரமபதத்தில் தமிழ்ப் பல்லாண்டு பாடுவமே என்றதினால் த்ரமிட வேதங்கள் அங்கு நித்யமாக அநுஸந்திக்கப்படுகின்றனவென்பது ஏற்பட்டு, அத்தால் அவை நித்யங்களென்பது ஸித்திக்கிறதென்றபடி) - இப்ரபந்தங்களுக்கு ***ஸ்ரீ நிகமபரிமளம்*** என்ற விஸ்தாரமான வ்யாக்யானத்தையும் ஸாரமான அர்த்தங்களை ஸுலபமாக அநுஸந்திப்பதற்காக ***ஸ்ரீ த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளீ, ஸ்ரீ த்ரமிடோபநிஷத் ஸாரம்***, என்னும் ஸ்ரீஸூக்திகளையும் அருளிச் செய்திருப்பதினாலும் - திருவிருத்தத்தின்

தாத்பர்யார்த்தத்தை ஸ்ரீஉபகார ஸங்க்ரஹத்தில் விசே ஷித்து நிரூபித்தருளினபடியினாலும் - ஸ்ரீ ப்ரபந்தஸாரத்தில் ஆழ்வார்களுடைய அவதார ப்ரபாவத்தை வரு, வந்து, தோன்றி, என்னும் பதங்களினால் வெளியிட்டபடியினாலும் - லோகம் முழுவதும் வேதாந்தாசார்யர் என்று கொண்டாடும்படியான பெருமை வாய்த்திருந்தபோதிலும் தம்மை சந்தமிகு தமிழ் மறையோன் தூப்புல் தோன்றும் வேதாந்த குரு என்று நிரூபித்துக்கொண்டிருப்பதினால் இப்படியே ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்களை நிரூபித்துக்கொள்ளவேண்டுமென்று தோன்றும்படி அநுஸந்தித்திருப்பதினால் த்ரமிட வேதங்களின் பெருமையை வெளியிட்டிருப்பதினாலும் - ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரத்தில் ஸமாக்யா பத்ததியில் ஆழ்வாரும் ஸ்ரீ பாதுகைகளும் ஒருவரே என்று நிரூபித்திருப்பதினாலும், நாத பத்ததியில் திருவாய்மொழியின் ப்ரபாவத்தை பரக்க நிரூபித்திருப்பதினாலும் -

இன்றென்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான்
அன்றென்னைப் புறம் போகப் புணர்த்ததென் செய்வான்
(திருவாய்மொழி - 10-8-9) '

' வெறிதே அருள் செய்வர்" (திருவாய்மொழி - 8-7-8)

என்றிவை முதலாக ஆழ்வார் அநுஸந்தித்திருப்பதற்கு ப்ரகரணத்திற்கும் ப்ரமாணங்களுக்கும் விருத்தமாக பகவான் தானே அருள் புரிந்த சிந்தையை நம் மேல் வைத்து அவன் தானே ரக்ஷிக்கவேண்டுமேயொழிய, பரதந்த்ரர்களான நாம் உபாயனுஷ்டானமென்று ஒன்றைச் செய்ய வேண்டியதில்லை யென்று சிலர் வ்யாக்யானமிட்டார்கள். இதுஉசிதமல்லவாகை யினால் இதற்கு ப்ரமாணங்களையொட்டி ஸ்வரஸமான அர்த்த விசேஷங்களை ' ஈசுவரனுக்கு ஸஹஜங்களான ஸ்வாதந்தர்ய காருண்யங்களினுடைய ப்ராதான்யத்தாலே இவற்றுக்கு வ்யாஜபூதங்களான விசேஷ காரணங்களை அநாதரித்துப் பண்டு என்னைப் பராங்முகனாக்குகைக்கும் இன்றென்னை அபிமுகனாக்குகைக்கும் உன் ஸ்வாதந்தர்யமும் க்ருபையுமொழிய வேறு ஒரு ப்ரதான காரணம் கண்டிலேன், எனக்குக் காட்டாதே ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான நீ கண்டதுண்டாகில்

அருளிச்செய்யவேணும் என்ன, ஈசுவரன் நிருத்தரானாய் இருக்கிற இருப்பாலே ஸ்வாதந்தர்ய க்ருபைகளினுடைய ப்ராதான்யத்தை நாட்டுக்கு வெளியிடுகிறார்(ஸித்தோபாய ஸோதனாதிகாரம்) என்றும், "திருமாலிருஞ்சோலை மலை என்றேன் என்னத் திருமால் வந்து" (திருவாய்மொழி - 10-8-1) என்றபடியினாலே திருமாலிருஞ்சோலை என்கிற வார்த்தையைச் சொல்லுவதாகிய மிகவும் அல்பமான வ்யாஜத்தையாவது செய்பவர்களுக்கே பகவான் வெறிதே அருள் புரியும், அதுவும் செய்யாதவர்களுக்கு அருள்புரியமாட்டான் என்று ஸித்திக்கிறதென்று அருளிச் செய்திருக்கிறபடியினாலும் - "நீறு செவ்வே இடக்காணில் நெடுமால் அடியார் என்றோடும்." (திருவாய்மொழி - 4-4-7 ) என்கிற பாட்டில் நீறு என்பது பஸ்மத்தைச் சொல்லுகிறதென்று சிலர் வ்யாக்யானம் செய்தார்கள். இது ப்ரமாணங்களுடன் சேராதாகையினால் இதற்கு ஸ்வரஸமான அர்த்தத்தை "ததீயவஸ்து ஸாத்ருஸ்யத்தாலே ததீயமல்லாதவற்றையும் ததீயமாகக் கருதிப் பிதற்றுகிற இவள்" என்கிற திருவாறாயிரப்படி வ்யாக்யானத்தை திருவுள்ளம்பற்றி, ஸ்ரீ ஸச்சரித்ர ரக்ஷையில் ஸமாதானம் நிரூபித்து அருளும் ப்ரகரணத்தில் முதலாவது ஸமாதானத்தில்

"सादृश्य मूल भ्रान्ति प्रातिपादन परत्वात् तस्य वाक्यस्य" என்று அருளிச்செய்து, மேலே "यद्व न तत्र भस्मासाधरण शब्दः प्रयुक्तः | तत्र हि प्रयुक्त शब्दो भगवद्भक्त पादरजसि तेनैवप्रयुक्तः । अतो दिव्यचूर्ण विषयतथापि तछव्यं निर्वेदुम्। नन्वस्तु तत्र तथा, -धवलचूर्णपरामर्शेन भगवत्कामुक नायिकोन्माद प्रशमनाभिधानं कथमिति चेन्न ---- पूर्ववाक्य परमर्शात् धवलचूर्ण परामर्शेन तच्छान्तिरिति वाक्यार्थपरत्वात्। अनन्तर गातायां भगवद्भक्तपादरजसा तच्छन्ति सिद्धान्तिना। धवलशब्दस्यापि 'सितमनसमं" सितिवत् विशद्ध मात्र परतयोत्तरैकार्थ्यै व। तेन भगवत एव वलक्ष चूर्णधारणवचनमपि निर्व्यूढम्। चक्षुषि च तद्धारणं तत्र विर्हितामिति अञ्जनपरत्वमादृरा आर्याः। शक्थः॥ என்று விஸ்தாரமாக நிரூபித்திருப்பதினாலும் - ஆழ்வார் தாமே 'தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள் சொன்னேன்" (திருவாய் - 9-49) என்று பாகவத தாஸ்யத்தை அங்கீகரித்து அதை, ' நெடுமாற்கடிமை (திருவாய் - 8-10) என்னும்

திருவாய்மொழியில் உபபாதித்திருப்பதை ஸங்க்ரஹித்து नाथे न नस्तृणं என்கிற (புருஷார்த்தகாஷ்ட ) ஸ்லோகத்தில் அருளிச்செய்திருக்கிற படியினாலும் என்றபடியாகவுமாம்.

(22) அதுவுமன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் ***ஸ்ரீ மதுரகவி***களை குறிக்கிறதாகவுமாம். இவர் தமது ஆச்சார்யரான ஆழ்வார் விஷயமாக அனுஸந்தித்திருக்கிற கண்ணிநுண் சிறுத்தாம்பு விஷயமாய் ஸ்ரீமதுரகவி ஹ்ருதயம் என்று ஒரு க்ரந்தம் அருளிச்செய்திருப்பதினாலும், இதன் ஸங்க்ரஹம் என்னக்கூடியதாய் இவர் விஷயமாயும் இவருடைய அனுஷ்டானத்தால் வெளியிடப்பட்ட ஆச்சார்ய நிஷ்டை விஷயமாயுள்ள " இன்பத்தில்' என்கிற பாட்டில் விசேஷித்து நிரூபித்திருப்பதினாலும், இவருடைய ஜ்ஞானமே உபஜீவ்யமானது என்பதை ப்ரபந்த ஸாரத்தில் தேறிய மா ஞானமுடன் என்றனுசந்தித்திருப்பதினாலும் என்றபடியாகவுமாம்.

(23) அதுமன்றிக்கே ராமாநுஜ என்பது ***ஸ்ரீகுல சேகரரைக்*** குறிக்கிறதாகவுமாம். ஆரம் கெடப் பரன் அன்பர் கொள்ளாரென்று அவர்களுக்கே வாரம் கொடு குடப் பாம்பிற் கையிட்ட இவருடைய பெருமையை "துய்ய குலசேகரன்" என்று அருளிச்செய்திருப்பதினாலும், இவருடைய மற்றைய ப்ரபாவங்களை "அனுஷங்க ஸித்தைஸ்வர்யரான ஸ்ரீ குல சேகரப் பெருமாளும்" (பரதேவதா பாரமா )என்றும், பஞ்சகால ப்ரக்ரியையாக ஆராதனம் செய்வதற்கு ப்ரமாணம் இவருடைய "இருமுப் பொழுதேத்தி" என்று அநுஸந்தித்திருப்பது (பெரு - திரு - 1 - 7 )என்றருளிச்செய்திருப்பதினாலும், இவர் ஊனேறு செல்வத்து என்கிற திருமொழியில் அனுபவிக்கப் பாரித்த அம்ஸங்களை எல்லாம் ஸ்ரீ தயாஸதகத்தில் ஸங்க்ரஹமாக நிரூபித்தருளியிருப்பதினாலும் என்றபடியாகவுமாம்.

(24) அன்றிக்கே ராமாநுஜ என்கிற பதம் ***பெரியாழ்வாரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவர் ப்ரபாவ விஷயமாக "கல்ப ஸூத்திர வ்யாக்யாதாக்களான பெரியாழ்வார்" (புருஷார்த்த காஷ்டாதி) என்றும். "இந்த ரூபா விசேஷத்தையுடைய பரமபுருஷனே ஸர்வவேத ஸாரபூத ப்ரணவப்ரதிபாத்யதையாலே"

(பரதேவதா பாரமார்த்) "மூலமாகிய ஒற்றையெழுத்தை மூன்று மாத்திரை உள்ளெழ வாங்கி வேலை வண்ணனை மேவுதிராகில்" (பெரியா. திரு - 4-5-4) என்று பெரியாழ்வார் அருளிச்செய்தார், என்றும் அருளிச்செய்திருப்பதினாலும் என்றபடி. அன்றிக்கே பல்லாண்டு என்று தொடங்கி, சாயைப் போலப் பாடவல்லார் என்னுமளவாக ஏகப்ரபந்தமாய் இவருடைய திருமொழி நிற்கும் என்பதை,ஏரணி பல்லாண்டு முதற் பாட்டு நானூற்றெழுபத்தொன்றிரண்டும் (ப்ரபந்தஸாரம் - 9) என்றருளிச் செய்திருப்பதினாலும் என்றபடியாகவுமாம். அன்றிக்கே இவர் தொடங்கிய திருப்பல்லாண்டு பாடும் நிஷ்டையே நமக்குப் பரமபதத்தில் செல்லா நிற்கும் என்பதை ஸ்ரீ பரமபத சோபானத்தில் ப்ராப்தி பர்வத்தில் "தமிழ் பல்லாண்டிசையுடன் பாடுவமே" என்றருளிச்செய்திருப்பதினால் என்றபடியாகவுமாம். அதுவுமன்றிக்கே இவருடைய"என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்" (பெரிய திரு - 4-10-2) என்கிற பாட்டுக்குச் சிலர் பாபம் செய்தால் அது நல்லது தான், அதற்காக பிராயஸ்சித்தாதிகள் வேண்டாமென்று ப்ரமாணங்களுக்குச் சேராமல் வ்யாக்யானம் செய்தார்கள். அது உசிதமல்லவாகை யினால்."ப்ராமாதிகமாகப் புகுந்தால் நாமே க்ஷமிப்புதோம், புத்தி பூர்வகமாகப் புகுந்தால் அவர்கள் க்ஷமை கொள்ளாத அளவிலும் சிக்ஷாவிசேஷங்களாலே நாம் க்ஷமிப்புதோம், ஒரு படிக்கும் கை விடோம் என்று தாத்பர்யம். "நன்று செய்தார் என்பர் போலும் என்று சொல்லுகையாலே இது வாஸ்து வ்ருத்தியில் நன்று அன்று என்னுமிடம் ஸூசிதம்" (ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரம்) என்று ப்ரமாணங்களுடனும் முரண்படாமல் அர்த்தத்தை நிரூபித்திருப்பதினால் என்றபடியாகவுமாம்.

(25) அதுவுமன்றிக்கே ராமா என்னும் பதம் ஸ்ரீநீளாப் பிராட்டியின் அவதார ரூபிணியாய் த்ரமிட வேதங்களில் ஒரு பாகத்தை வெளியிட்டு அருளிய ***ஆண்டாளை*** குறிக்கிறதாகவுமாம். இவளுடைய ப்ரபாவத்தை ஸ்ரீகோதா ஸ்துதி முதலியவற்றில் நிரூபித்தபடியினால் என்றபடி. இவளுக்குத் திருத்தகப்பனார் என்று சொல்லும்படியான பாக்யம்

பெற்றபடியால் ஸ்ரீ விஷ்ணுசித்தருக்கு மஹத்தரர் - பெரியவர் என்கிற பிருது கிடைத்தது என்றும், இவள் பகவானை, அனுபவித்த ப்ரகாரமே உத்க்ருஷ்டதமமானதென்றும், மற்றைய ஆழ்வார்கள் இவள் காட்டியருளிய வழியையே பின்பற்றி - கொஞ்சம் ஏற்றத்தாழ்வுகளுடன் பகவானை அனுபவித்தார்கள் என்றும், ப்ரபத்தியின் முகபேதமான ஆச்சார்ய நிஷ்டைக்கு ப்ரமாணமாய் "வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" (நாச்சியார் திருமொழி-10-10) என்று நாச்சியார் அருளிச் செய்கையாலும், என்று இவளுடைய அனுஷ்டானத்தையே உதாஹரித்திருப்பதினாலும்" என்றபடி. அன்றிக்கே " நாராயணனே பறை தருவான்" (திருப்பாவை1) என்றும், "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமே யாவோம் .... மற்றை நம் காமங்கள் மாற்று" (திருப்பாவை - 28)என்றும் அனுஸந்தித்த நாச்சியார் க்ருஷ்ணனைப் பெறுகைக்காகப் பண்ணின காமதேவார்ச்சனம் ஸ்ருங்கார ஸமாத்யனுகுண க்ருஷ்ண ரூபாந்தர விஷயம்" என்று அருளிச்செய்து இவளுடைய பரமைகாந்தித்தவத்தை ஸ்தாபித்தருளியபடியால் என்றபடியாகவுமாம்.

(26) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் ***தொண்டரடிப் பொடி ஆழ்வாரைக்*** குறிக்கிறதாகவுமாம். 'போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே"(திருமாலை - 41) என்கிற இவருடைய பாட்டுக்கு பாகவதர்களுடைய உச்சிஷ்டமும் உண்ணத்தக்கது என்று சிலர் வ்யாக்யானமிட்டிருக்கிறார்கள். இது உசிதமன்றாகையினால் ப்ரமாணங்களை அநுஸரித்து "என்றதும் குரு விஷயமாமித்தனை. பொதுவானாலும் பகவத் ஸங்கீர்த்தநபரர் தேசகாலாதி வைகுண்யத்தாலே ஊநவ்ருத்திகளுமாய் ஊநகாரர்களுமாய் இருந்தார்களேயாகிலும் தாங்கள் அமுது செய்த சேடம் தருவராகில் புனிதமென்றிதித்தனை, இதில் சேஷ ஸப்தம். (ப்ராபவ வ்யவஸ்தாதிகாரம்). अन्नशेषः किं क्रियतां इष्टैः सह भुज्यताम् (ஸ்ராத்த ப்ரயோகம்) இத்யாதிகளில் ந்யாயத்தாலே "பாண்டஸ்த விஷயமானால் விரோதமில்லை. உச்சிஷ்ட ஸப்தம் தானும் ஸ்ருத்யாதிகளிலே புக்த ஸிஷ்டமாய் பாகபாத்ரஸ்தமானதிலும்

ப்ரயுக்தம்" என்றருளிச்செய்திருப்பதினால் என்றபடி. அதாவது சேடம் என்றது பாண்டத்தில் மீதியானால் - பாகம் செய்த பாத்திரத்தில் மிகுதியானால் பொது விஷயம் என்றும், பாத்ரஸ்த சேஷமானால் - போஜனம் செய்த இலையில் மீதியானால், ஆச்சார்ய விஷயமென்றும் வ்யவஸ்தை செய்துகொள்ள வேண்டுமென்று கருத்து. இந்த பாட்டிற்கு ஸ்ரீ கீதா பாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்ப்பு அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. அன்றிக்கே "பாகவத சேஷத்வமே தமக்கு நிரூபகமாக ருசித்த தொண்டரடிப்பொடி ஆழ்வார்" (அபராதபரிஹாரம்) என்று இவர் ப்ரபாவத்தை வெளியிட்டிருப்பதினாலும் என்றபடியாகவுமாம்.

(27) அன்றிக்கே ராமாநுஜ என்றது ***திருப்பாணாழ்வாரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவர் வெளியிட்டருளின அமலனாதி பிரான் ப்ரபந்தத்திற்கு வ்யாக்யானமாக ஸ்ரீ முனிவாஹன போகம் என்னும் ரஹஸ்யத்தை அருளிச்செய்திருப்பதினாலும் - தமக்கு வேதாந்தா சார்யர் என்கிற திருநாமம் சூட்டிய ஸ்ரீ ரங்கநாதனாலேயே ***முனிவாஹனர்*** என்கிற திருநாமம் சூட்டப்பெற்றவராகையினால் தமக்கு ஜ்யேஷ்ட ப்ராதாவானதைக்கருதி நம் பாணநாதன் என்று அநுஸந்தித்திருப்பதினாலும் - என்றபடி.

(28) அன்றிக்கே ராமாநுஜ என்றது ***திருமங்கையாழ்வாரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவருடைய ப்ரபாவத்தை "இம்மந்த்ரத்தை திருமங்கையாழ்வாருக்கு ஸர்வேசுவரன் தானே உபதேசித்தான்" (திருமந்திராதிகாரம்) "ஸர்வேசுவரன் பக்கலிலே ஸர்வார்த்த க்ரஹணம் பண்ணின ஆழ்வார்" (ஸ்ரீமத் ரஹஸ்ய பரதேவதா) என்றும், "இம்மந்த்ரத்திற்கு த்ரஷ்டாவுமாய் தேவதையுமானவன் பக்கலிலே இதை ஸார்த்தமாகப் பெற்ற திருமங்கை யாழ்வார்" (திருமந்திராதிகாரம்) என்றும், "ஈசுவரன் தனக்கும் போக்யதமமான நித்யவிக்ரஹானுபவத்தில் ஊற்றத்தாலே திருமங்கையாழ்வார் தம்மை ஈசுவர விஷயத்தில் தேஹாத்ம வாதிகளாக அருளிச்செய்வர்" (திருமந்திராதிகாரம் த்வயாதி) என்றும், இவருடைய பிரபந்தங்களின் உத்கர்ஷத்தை "அறிவு தரும் பெரிய திருமொழி" (ப்ரபந்தஸாரம் - 13)

என்றனுசந்தித்திருப்பதினாலும் - இவர் தம்முடைய அவதார தசையில் பாகவத ததீயாராதனத்திற்காகச் செய்த ஸ்தேயம் (திருட்டு) ஸாஸ்த்ரீயமானது என்பதை ஸ்ரீ ஸ்தேயாவிரோதம் என்னும் ஸ்ரீ ஸூக்தியில் விஸ்தாரமாகவும், ஸ்ரீ பரமதபங்கத்தில் "ஸ்தேய ஸாஸ்திரமும் 'असाधुभ्योर्थमादाय साधुभ्यः संप्रयच्छति" "प्रसध्य वित्तहरणम् न कल्कः" என்கிறபடியே "க்ஷத்ரியாதிகளுக்குப் பரகாலாதி ந்யாயத்தாலே தர்மோபயுக்தமாக ப்ரவ்ருத்தம்" என்று ஸங்க்ரஹமாகவும் அருளிச்செய்திருப்பதினாலும் என்றபடி. இதை கணிசித்தே "கலியனுறை குடிகொண்ட கருத்துடையோன் வாழியே"(வாழித்திருநாமம்) என்று பின்புள்ளோர் அநுஸந்தித்தார்கள். அன்றிக்கே இவர் மாற்றமுளவாகிலும் என்கிற திருமொழியில் ஸம்ஸாரத்தின் துஸ்ஸஹதையை நிரூபிக்க எந்த உதா ஹரணங்களை அனுஸந்தித்திருக்கிறாரோ, அவற்றையே ஸமான ப்ரகரணத்தில் ஸ்ரீ ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் மூன்றாவது அங்கத்தில்

" यध्येवं त्वया दत्त हस्तः संसारसागरमतिलङ्घते पुरुषः तत् कथं दवदहन प्र ज्वालेन पार्श्वयुगल दारुदरगत इवकिटः सारमेयगणपरिगत इव सारङ्गः, समीरणान्दोलन डोलायमान पोतोदर इव सांयात्रिकसार्थः, महाप्रवाह मध्यानिरोध संभ्रान्तनयन इव जम्बुकः, विषधर परिगृहीत गृहधूर्णमान हृदय इव कुटुम्बिनः, विकटतर भङ्ग संभ्रम संक्षुभित गङ्गातट वेपमान संहनन इव शाखिमण्डलः------ साध्वसगृहीतो भवति" என்று அருளிச்செய்திருப்பதினால் என்றபடியாகவுமாம். இங்கு இருபாடெரி கொள்ளியின் உள்ளெறும்பே போல -காற்றத்திடைப்பட்ட கலவர் மனம் போல - வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போல - பாம்போடொரு கூரையிலே பயின்றாப்போலே - ஆற்றங்கரை வாழ்மரம் போல -என்கிற பெரிய திருமொழிப் பாட்டுக்கள் விவக்ஷிதங்கள்.

(29) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் பகவானுடைய முப்பத்துச்சின்னங்களான விபவாவதார ரூபங்களில் ராம க்ருஷ்ணர்களை விசேஷித்துக் கொண்டாடுகிறாப் போலே, அவனுடைய அபிநவ தசாவதார பூதர்களான ஆழ்வார்களில் விசேஷித்து உபகரித்திருக்கும் *பராங்குச பரகாலர்*களைக்

குறிக்கிறதாகவுமாம். இவர்கள் நம் போலியர்கள் அனுஸந்திப்ப தற்காக அருளிச் செய்திருக்கும் மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து, ஓடி ஓடி, வாடினேன் வாடி, இத்யாதிப் பாசுரங்களைப் பார்த்து இவர்கள் ஸம்ஸாரிகள் என்றார்கள் சிலர். இவர்கள் இப்படியாகில் आत्मानं मानुष्यं मन्ये (இராமாயணம்) अहं वैबान्धवोजातः (பாகவதம்) இத்யாதிகளைச் சொல்லிய ராம க்ருஷ்ணர்கள் துல்யந்யாயத்தால் ஸம்ஸாரிகளாவர்களே என்பதனை மறந்தார்களத்தனை என்று திருவுள்ளம் பற்றி இப்பாசுரங்களின் கருத்தை "தனக்கு அனுஸந்தேயமாக உதாஹரித்த" (ஸ்வநிஷ்டாபிஜ்ஞானாதிகாரம்) என்றும்,

अन्येषु तु विशेषं बोधयामि --
भयाभयस्थानविशेष वेदिनः
प्रमादमुक्तस्य परीक्ष्यकारिणः
परानुभूति प्रतिबन्धशङ्कया
भयानुभावो(बन्धो)प्यबयाय कल्पते (ஸ்ரீ ஸங்கல்பஸூர்யோதயம்)

என்றும், (அதாவது பயத்திற்கும் அபயத்திற்கும் காரணங் களானவற்றின் விசேஷத்தை அறிந்தவர்களாயும், அஜாக்கிரதை யினால் விடப்பட்டவர்களாயும், யோசித்துக் கர்மங்களை அனுஷ்டிக்கக் கூடியவர்களாயும் இருக்கிறவர்களுக்கு பகவானுடைய அனுபவத்திற்குத் தடங்கல் வரும் என்கிற ஸந்தேஹத்தினால் பயம் உண்டாவதும் மற்றவர்களுடைய அபயத்திற்குக் காரணமாகிறது) என்றும், இவர்களுடைய ஏற்றத்தை ப்ரபந்தஸாரத்தில் இவர்களுடைய ப்ரபந்தத்தையிட்டு மூதலிப்பித்திருப்பதினாலும், "பராங்குச பரகாலாதிகளுடைய ப்ரபந்தங்களிலே கண்டுகொள்வது" (ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரம்) என்று அனுஸந்தித்திருப்பதினாலும் என்றபடியாகவுமாம்.

(30) அன்றிக்கே ராமாநுஜ என்ற பதம் ஆச்சார்ய பரம்பரையில் முதல் முதலாக அவதரித்தருளிய *ஸ்ரீமந் நாதமுனி* களைக் குறிக்கிறதாகவுமாம். இவர் பெருமையை नाथोपज्ञा प्रवृत्तं (ஸ்ரீதத்வமுக்தகலாபம் - 496) "அகஸ்த்ய ஸேவிதமான தேசத் திலே அநேக தேசிகாபதேசத்தாலே அவதரித்தருளினான். இவ்வாச்சார்யர்களில் ஈசுவர முனிகள் பிள்ளை நாதமுனிகள்.

இவர் நியாய தத்வம் என்கிற ஸாஸ்திரமும் யோக ரஹஸ்யமும் அருளிச்செய்தார். இவருக்கு ...... நம்மாழ்வார் ஆச்சார்யரானார். (ஸ்ரீ குருபரம்பரா ஸாரம்), "தாளம் வழங்கி தமிழ் மறை இன்னிசை தந்த வள்ளல் மூளும் தவநெறி மூட்டிய நாதமுனி கழலே நாளும் தொழுதெழுவோம் நமக்கார் நிகர் நானிலத்தே, (ஸ்ரீ குருபரம்பரா ஸாரம்)

नाथेन मुनिना तेन भवेयं नाथवानहम्।
यस्य नैगमिकं तत्वं हस्तामलहतां गतम्।। (ஸ்ரீ யதிராஜ ஸப்ததி - 5) என்றும் அருளிச்செய்திருப்பதினால் என்றபடி. அன்றிக்கே இவர் அருளிச்செய்த ஸ்ரீ ந்யாய தத்துவ வாக்யங்களை ஸ்ரீ ந்யாய பரிசுத்தி முதலியவற்றில் பல இடங்களில் உதாஹரித்திருக்கிறபடியினால் என்றபடியாகவுமாம்.

(31) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் ஸ்ரீ ***உய்யக் கொண்டாரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவருடைய ப்ரபாவத்தை "நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக் கொண்டார்'(ஸ்ரீ குருபரம்பரா ஸாரம்),नमस्याम्यरविन्दाक्षं नाथभावे व्यवस्थितम् | सुद्धसत्त्वमयं शौरेरवतारमिवापरम्।।' (ஸ்ரீயதிராஜ ஸப்ததி - 6) என்றருளிச் செய்திருப்பதினால் என்றபடி.

(32) அன்றிக்கே ராமாநுஜ என்பது ***மணக்கால் நம்பி***யைக் குறிக்கிறதாகவுமாம். இவருடைய ப்ரபாவத்தை अनुज्झित क्षमायोगमपुण्यजनबाधकम्।अस्पृष्टमदरागं तं रामं तुर्यमुपास्महे।।(ஸ்ரீயதிராஜ ஸப்ததி - 7) என்று பகவானுடைய அவதாரங்களான மூன்று ராமர்களுடன் ஸத்ருஸமாக்கி இவரை நாலாவது ராமனாய் அருளிச்செய்திருப்பதினாலும், "மணக்கால் நம்பி ஆளவந்தாருக்கு நெடுநாள் பச்சையிட்டு ஒரு விரகாலே ஆகாங்க்ஷை உண்டாக்கி உபதேசித்தது பரமாசார்ய குலத்திற்குத் தாம் ஒரு கிஞ்சித்காரம் பண்ணுகையிலும் ஆசார்ய நியோகத்தைக் கடுகத் தலைக் கட்டுகையிலும் உண்டான த்வரையாலும் சிரகால பரீக்ஷாதிகள் வேண்டாதபடி (ஸ்ரீஸம்ப்ரதாய பரிசுத்தி) बोधनञ्च मुहुः क्रमात् என்கிற யுகதர்மானுஸாரத்தாலும் உபபந்நம் " என்று இவர் ஸ்ரீ ஆளவந்தாரிடம் தாமே சென்று அவருக்கு வேதாந்த காலக்ஷேபம் சொல்லியது ஸாஸ்த்ரீயமானதென்று ஸ்தாபித்து

அருளியபடியினாலும் என்றபடி. ஸ்ரீதத்துவ டீகையில், त्र्यन्तार्थे हि सूचितम् என்று அருளிச் செய்திருப்பது இவருடைய ப்ரபாவத்தைப் பற்றியது என்று சிலர் அபிப்ராயப் படுகிறார்கள்.

(33) அன்றிக்கே ராமாநுஜ என்றது பெரிய முதலியார் எனப்படும் ***ஸ்ரீ ஆளவந்தாரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவருடைய ஸ்ரீஸூக்திகளில் ஸ்ரீ சதுஸ்லோகீ, ஸ்ரீ ஸ்தோத்ர ரத்னம், ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹம், இவற்றிற்கு விஸ்தரமான வ்யாக்யானமிட்டும், ஆகம ப்ராமாண்யம், ஸம்வித்ஸித்தி, ஈச்வரஸித்தி, ஆத்மஸித்தி, புருஷ நிர்ணயம், இவற்றின் தாத்பர்யார்த்தங்களை ஸ்ரீபாஞ்ச ராத்ர ரக்ஷை முதலிய ஸ்ரீஸூக்திகளில் வெளியிட்டுமிருப்பதினால் என்றபடி. அன்றிக்கே ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹத்தில், शास्त्र सारार्थ उच्यते (கீதா - ஸங்க் - 22.) என்பதற்கு இவ்விடத்தில் ஸாஸ்த்ர ஸாரார்த்தம் सर्व गुह्य तमं (கீதை18 -64) என்றாரம்பித்து மிகவும் ப்ரீதியுடன் அர்ஜுனனை ஸாவதானமாய் இருக்கும்படி செய்து, मन्मना भव मद्भक्तः(கீதை18 -65) सर्वधर्मान् परित्यज्य (கீதை 18 -66) என்கிற இரண்டு ஸ்லோகங்களினால் சொல்லப்பட்டது.

ஸாரார்த்தமாவது பக்தியோகமென்று கீதாபாஷ்யத்தில் சொல்லி யிருப்பதோவெனில் அங்கப்ரபத்திபரமாகச் சொல்லும் பக்ஷத்தில் ப்ரபத்தியைக் குறித்துப் பக்தி அங்கியாகையினாலே ப்ரதானமாகையினால் என்றும், ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹப் பாட்டில் ''காதல் துணிவுடையார் கற்கும் வண்ணம் கருத்துடனே'' (கீதா - ஸங் பாட்டு - 21)என்றும் அருளிச்செய்து கீதையில் சொல்லப்பட்ட பக்தி ப்ரபத்திகளாகிற இரண்டு உபாயங்களும் ஸாஸ்திர ஸாஸ்த்ர ஸாரார்த்த என்னும் பதத்தினால் சொல்லப்பட்டதாகிறதென்று நிரூபித்திருப்பதினாலும், प्रीत्यैव कारितः(கீதா -ஸங் -31) என்ற ஸாஸ்திர விருத்தமாய் கேவலம் தன்னுடைய இச்சையைப்பற்றிச் செய்யலாம் என்றபடியன்று என்பதை ''ஸாஸ்திரம் வேண்டா என்றபடியன்று, இங்கு ஸாஸ்திரம் கொண்டே அறிய வேண்டுகிற கைங்கர்யம் தன்னில் ஸ்வாமி ஸந்தோஷ ஜனகத்வமடியாக ஸேஷபூதனான தனக்குப் பிறக்கிற ப்ரீதியினுடைய ப்ரேரகத்வாதிசயம் சொல்லுகையிலே

இதற்குத் தாத்பர்யம். ப்ரீத்யைவ என்கிற அவதாரணத்தாலே போதனத்வ புத்தியை வ்யவச் சேதித்தார் என்னுமிடம் உபாயதாம் பரித்யஜ்ய என்று விவரிக்கையாலே வ்யக்தம். சாஸ்த்ரீய கைங்கர்யத்தில் ப்ரீதியினுடைய ப்ரேரகத்வாதிஸயம் விவக்ஷிதமானாலும் ''நிஜகர்மாதி பக்த்யந்தம்'' என்கிற இவற்றின் ஸ்வரூபத்துக்கு ஸாஸ்திரமே ப்ரமாணம் என்னும் இடம் நிஜகர்ம ஸப்தத்தாலே ஸூசிதமாயிற்று'' (ஶாஸ்த்ரீய நியமனாதிகாரம்) என்று நிரூபித்திருப்பதினாலும், ஸ்தோத்திரத்தில் वपुरादिषु (ஸ்தோத்ரரத்னம்52) என்கிற ஸ்லோகத்தில் ஆத்ம ஸமர்ப்பணம் செய்து, मम नाथ (ஸ்தோத்ரரத்னம்53) என்கிற ஸ்லோகத்தில் அதற்காக அனுஶயிக்கிறார் என்று சிலர் வியாக்யானம் செய்திருப்பது உசிதமன்றென்பதை ஸாஸ்த்ர சோதிதமாய்த் தாம் அனுஷ்டித்த ஸமர்ப்பணத்தை அஜ்ஞக்ருத்யமாக்கின படியன்று(ஸாங்கப்ரபதனாதி). ஆக இரண்டு ஸ்லோகத்தாலும் யதாவஸ்தித ஸ்வரூபாதி விவேகமில்லையேயாகிலும் ந மம என்று ஸ்வஸம்பந்தம் அறுக்கையே अहमपि तवैवास्मि हि भरः (ஸ்தோத்ரரத்னம் 60) என்னும்படி பரஸமர்ப்பண ப்ரதானமான ஸாஸ்திரார்த்தத்தில் ஸாரம்'' என்றருளிச்செய்து இவருடைய அனுஷ்டானமே ஸாஸ்த்ரீயமானது என்று ஸமர்த்தித்திருப் பதினாலும், இப்படியே प्रसीद मद्वृत्तमचिन्तयित्वा (ஸ்தோத்ரரத்னம் 65) என்றனுஸந்தித்திருப்பதற்கு ''இஸ்தோத்திரத்தில் ஆத்யந்தங்களில் பண்ணின ஆசார்ய புரஸ்காரம் இங்கு அருளிச்செய்கிற ப்ரபத்திக்கு அபேக்ஷிதமாயாதல் வைகல்ய பரிஹாரார்த்தமாயாதலாய் உபயுக்தமாய் வந்ததித்தனை'' (சரம சுலோகாதிகாரம்) என்றருளிச் செய்திருப்பதினாலும், தம் ஆசார்யரான மணக்கால் நம்பிகளை ஸ்தோத்திரம் பண்ணாதே அவருக்கும் ப்ராசார்யரான ஸ்ரீமந் நாதமுனிகளைக் குறித்து ஸ்தோத்திரம் செய்திருப்பதற்குக் காரணத்தை ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தியில் ஆளவந்தார் தாம் நாத முனிகளை முன்னிட்டு ஸ்தோத்திரம் பண்ணித்தும், ஸரணம் புக்கதுவும், தம்முடைய ஆசார்யருக்கு இது ப்ரியதமம் என்றும், தமக்கு ஆசார்யவத்தை முதலான ஸகல ஸம்பத்துக்களுக்கும் நாத

முனி வம்ஸத்தில் பிறவியென்று தோற்றுகைக்காகவும், ஆசார்யவிஷயத்தில்போலே பரமாசார்ய விஷயத்திலும் க்ருதஜ்ஞதாதிகள் வேணுமென்கைக்காகவும் என்றறியப் படும்'' என்றருளிச்செய்திருப்பதினாலும் என்றபடி. அன்றிக்கே ஸ்ரீ குருபரம்பரா ஸாரத்தில் இவருடைய ஸிஷ்ய பரம்பரையையும் வம்ச பரம்பரையையும் இவருடைய க்ரந்தங்களின் திருநாமங்களையும் நிரூபித்திருப்பதினால் என்றபடியாகவுமாம். இந்த யோசனா விசேஷத்தை மற்ற ஆசார்யர்கள் விஷயத்திலும் செய்து கொள்ளவும்.

(34) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் ***பெரியநம்பி***களைக் குறிக்கிறதாகவுமாம். இவருடைய ப்ரபாவத்தை ''ஆளவந்தாருடைய நியோகத்தாலே ஸ்ரீபாஷ்யகாரரை அங்கீகரித்த பூர்ணரான பெரியநம்பி இவரைத் தமக்கு ஸப்ரஹ்மசாரிகளான திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே அர்த்தஸிக்ஷை பண்ணவும், திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கவும், ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர் பக்கலிலே நல் வார்த்தை கேட்கவும் நியோகித்ததும் . . . ஸிஷ்யபூதரை பஹுகமாகத் திருத்தவேண்டும் என்கிற அபிஸந்தியாலே உபபந்தம்''(ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி) என்றும், ''பெரியநம்பி முதலான பரமா சார்யர்களும் தம் தம் ஸூத்திரங்களின்படியே யஜ்ஞாதிகள் பண்ணினார்கள் என்னுமிடம் ஸர்வர்க்கும் ப்ரஸித்தம்''(ஸ்ரீமத் ரஹஸ்ய சரம சுலோகா) என்றும் அருளிச் செய்திருப்பதினால் என்றபடி.

(35) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் தர்ஸநதாபகர் என்கிற ப்ரஸித்தியைப் பெற்ற ***எம்பெருமானாரைக்*** குறிக்கிற தாகவுமாம். இவருடைய பெருமையை ஸ்ரீ யதிராஜ ஸப்ததி முதலிய ஸ்ரீஸூக்திகளில் பரக்க நிரூபித்திருக்கிறபடியினாலும் - இவருடைய க்ரந்தங்களில் ஸ்ரீ பாஷ்யத்திற்கு ஸ்ரீ தத்வடீகையிலும், கீதாபாஷ்யத்திற்கு ஸ்ரீ தாத்பர்ய சந்த்ரிகையிலும், கத்யத்ரயத்திற்கு ஸ்ரீ ரஹஸ்யரக்ஷையிலும், வேதார்த்த ஸங்க்ரஹத்திற்கு ஸ்ரீ வேதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யானத்திலும், நித்யத்திற்கு ஸ்ரீ பாஞ்சராத்திர ரக்ஷையிலுமாக விஸ்தாரமான தாத்பர்யம் அருளிச்

செய்திருப்பதினாலும் - இவர் ப்ரவர்த்தனம் செய்தருளிய ஸம்ப்ரதாயத்தின் பெருமையைப் பலமுகமாக ப்ரதிஷ்டாபனம் செய்தருளினபடியாலும் என்றபடி. எம்பெருமானாருடைய திருவடி ஸம்பந்திகள் என்று தங்களைச் சொல்லிக்கொண்டு, அவருடைய ஸூக்திகளுக்கு ஸாஸ்திர விருத்தமாக அர்த்தம் செய்யுமவர்களும், கத்யமானது அழுத குழந்தைக்கு வாழைப் பழம்போல் இருக்கும் என்றும், மற்றவர்கள் ப்ரீதிக்காக ஸ்ரீபாஷ்யம் என்றும், வேண்டாச் சுமை எடுத்துகைக்காக ஸ்ரீகீதா பாஷ்யம் என்றும், நித்யத்தில் நிரூபித்திருக்கும் திருவாராதன க்ரமம் நமது அனுஷ்டானத்திற்காகவன்று என்றும் சொல்லுமவர்களுடன் வித்யாஸத்தைத் தெரிவிக்கிறது இந்தப் பதம் என்றபடியாகவுமாம். இவருடைய பரஸ்ஸதங்களான ஸ்ரீஸூக்திகளில் 'எம்பெருமானாருடைய ஸூக்திகள் ஒவ்வொன்றும் நமக்கு உபாதேயமானது, அவற்றில் ஓரிடத்திலாவது ஸாஸ்திரத்திற்கு விருத்தமான அம்ஸம் கிடையாது, அவற்றில் நிரூபிக்கப்பட்டிருக்கும் பக்தி ப்ரபத்திகளாகிற இரண்டு உபாயங்களும் மோக்ஷத்தை ஸாதிக்கக்கூடியவை, அவற்றில் ஆபாத ப்ரதீதியில் தோன்றும் சில ஆபாஸ யுக்திகளைக் கொண்டு ஒன்றை நிராகரித்தால் துல்யந்யாயத்தால் மற்றொன்றும் அப்ரமாணமாய் உபாயமொன்றுமே இல்லாமல் போய்விடும், பக்தியோகத்தில் இழிந்தவர்களும் அது தலைக்கட்டுவதற்குத் தடங்கலாய் நிற்கும் விரோதிகளைப் போக்கடிப்பதற்காக ப்ரபத்தியை அனுஷ்டிக்கலாம், நேரிலேயே அதாவது மற்றொரு உபாயத்தின் மூலமாகவல்லாமல் ப்ரபத்தியை அனுஷ்டித்து மோக்ஷம் பெறலாம், ஆகையால் ப்ரபத்தி ஸகல பலத்தையும் கொடுக்கக் கூடியது,இதில் உபாய விரோதியைக் கழிக்கும் கட்டளையை ஸ்ரீ கீதா பாஷ்யத்தில் இரண்டாவது யோஜனையிலும், உபாயாந்தர ஸ்தானத்தில் நின்று ப்ராப்தி விரோதியைக்கழிக்கும் கட்டளையை கத்யத்திலும் அருளிச்செய்தார். இவை இரண்டிடத்திலும் ஒன்றை அநாதரித்து ஒன்றை அருளிச்செய்ததன்று. இரண்டிடமும் ஸர்வாபிமத ஸாதனமான இவ்வுபாயத்தின் ப்ரபாவத்திற்கு

உதாஹரணபரம் என்றுமிறே இவர் ப்ரவசனம் செய்தருளியபடி. அப்படியே 'இதில் சொன்ன உபாயம் ஸர்வாநிஷ்டங்களையும் கழிக்கவற்றாகையாலே உபாய விரோதியைக் கழிக்கும்படியை ஸ்ரீமத் கீதாபாஷ்யத்திலும் ப்ராப்தி விரோதியைக் கழிக்கும் படியைக் கத்யத்திலும் உதாஹரித்தருளினார்'' (ஸ்ரீமத் ரஹஸ்யத்ய ஸாரம்.) என்று அருளிச்செய்திருக்கிறார். நித்யத்தில் நிரூபிக்கப்பட்ட திருவாராதனக்ரமமே ப்ரபன்னர்களான நமக்கு உபஜீவ்யம் என்பதை ஸ்ரீ பாஞ்சராத்ர ரக்ஷையில் நிர்த்தாரணம் செய்திருக்கிறார். சரம ஸ்லோகத்தில் ஸர்வ தர்ம ஸ்வரூப த்யாகம் சொல்லப்படுகிறதென்பதே பாஷ்யகாரர் திருவுள்ளம் என்றார்கள் சிலர். இது அஸம்பாவிதமாயும் ஸாஸ்திர விருத்தமாயும் இருப்பதினாலே இப்பக்ஷத்தை எம்பெருமானார் ஒரு காலத்திலும் அங்கீகரித்திருக்க மாட்டார் என்று நிரூபித்திருக்கிறார். எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளுகிறபொழுது ஸ்ரீ பாதத்திலே ஸேவித்திருந்த முதலிகளை வ்யாஜமாகக் கொண்டு ப்ரபன்னர்கள் அனுஷ்டிக்க வேண்டிய உத்தரகைங்கர்யத்தின் பிரகாரத்தை அருளிச் செய்ய, அதை உபதேசபரம்பரையால் அறிந்து, அது ஸர்வருக்கும் பயன்படுமாறு அந்த உபதேசத்தை க்ரந்தத்திலே '' இவர் அருளிச்செய்தருளின வார்த்தை '(ஸ்ரீமத் ரஹஸ்ய ஸாஸ்த்ரீய) என்றாரம்பித்து அருளிச்செய்திருக்கிறார். ' ஒரு மலையில் நின்று ஒரு மலையிலே தாவும் ஸிம்மம் ஸரீரத்தில் ஜந்துக்களைப் போல பாஷ்யகாரர் ஸம்ஸார லங்கனம் பண்ண அவரோடுண்டான குடல் துவக்காலே நாம் உத்தீர்ணராவுதோம்'' (அதிகாரி விபாகாதிகாரம்.) என்கிற முதலியாண்டான் பாசுரத்திற்குத் தாத்பர்யத்தை அறியாமல் எம்பெருமானார் அனுஷ்டித்த ஸரணாகதியே போதும், இக்காலத்தவர்களும் ஸ்வாத்ம ரக்ஷணத்திற்காகத் தனித்து ஓர் உபாயம் அனுஷ்டிக்க வேண்டாம் என்று சிலர் சொன்னார்கள். "ஆழ்வான் அந்திம தசையிலே விடாயிலே நாக்கொட்டி எம்பெருமானார் திருவடிகளைப் பிடிக்க, இவர் அப்போது ஆழ்வான் செவியிலே த்வயத்தை அருளிச்செய்ய, இப்பேறு நமக்கு வருகை அரிது, நாம் என்ன செய்யக்கடவோம், என்று அப்போது

ஸேவித்திருந்த முதலிகள் கலங்க, இவர்கள் அபிப்ராயத்தைத் திருவுள்ளம் பற்றி ''ஆழ்வான் ப்ரக்ருதி அறியீர்களோ, இவ்வவஸ்தையில் இவருக்கு இது கர்ப்பூரத்தையும் கண்ட சர்க்கரையையும் இட்ட மாத்திரமன்றோ, நாம் உபாயத்திற்குப் பரிகரமாகச் செய்தோமல்லோம்'' என்றருளிச்செய்ய முதலிகள் தெளிந்து நிர்ப்பரரானார்கள்'' (நிர்யாணாதிகாரம்.) என்று அருளிச் செய்திருக்கிறபடியினால் ஆழ்வான் பாசுரத்திற்குத் தாத்பர்யார்த்தத்தை வெளியிட்டருளி, அதன் மூலமாய் எம்பெருமானார் திருவுள்ளத்தை வெளியிட்டபடியாலும், அதாவது முதலியாண்டான் பாசுரத்திற்கு எம்பெருமானார் தாம் அனுஷ்டித்த உபாயமே மற்றவர்களுக்கு மோக்ஷ ஸாதனமாகில், அதாவது அப்படி அவர் திருவடிகளிலே ஆஸ்ரயித்த முதலிகள் க்ரஹித்திருந்தார்களேயாகில், ஆழ்வானுக்கு த்வயத்தை உபதேசித்ததைக் கண்டு முதலிகள் கலங்கவே இடமில்லையல்லவா? அவர்கள் கலங்கினபடியால் அதற்குக் காரணம் எது என்னில் - ஆழ்வானைப்போலே அந்த முதலிகள் ஸ்ரீ பாஷ்யகாரரால் பரஸமர்ப்பணம் செய்யப்பெற்றவர்கள் அந்திமதசையில் காதில் ஒரு மந்திரத்தை உபதேசிக்கப் பெற்றால்தான் உபாயம் பூர்த்தியாகுமோ என்ற ஸந்தேஹத்தினால், அவருடைய காலத்திற்குப் பிறகு அப்படிப்பட்ட பாக்யம் தங்களுக்குக் கிட்டாதே என்று முதலிகள் கலங்கினார்கள் - என்பது. இதை நிவ்ருத்தி செய்ய வேண்டுமென்று திருவுள்ளம் பற்றி ஆழ்வான் செவியில் த்வயத்தைச் சொல்லியதற்குக் காரணம் ப்ராக்ருதமான ஸரீர ஸம்பந்தத்தினால் நாக்கு ஜலத்தை அபேக்ஷிக்க, ஆழ்வானுடைய ஸ்வபாவத்தை நன்கு அறிந்திருந்தவராகையாலே அமுதூறுவது போல அனுபவிக்கவேண்டிய த்வயத்தை தத்கால சாந்தியாகச் சொல்லியருளினார். இது முன்பு அனுஷ்டிக்கப்பட்ட உபாயம் பூர்த்தியாவதற்காக அனுஷ்டிக்கப்பட்டதன்று என்று சமாதானம் அருளிச்செய்து கலக்கத்தைத் தெளிவித்தார் என்பது ஏற்படுகிறது. ஆகையினால் எம்பெருமானாருடைய ஆத்மீய பரஸமர்ப்பணத்தில் சேர்க்கப்படாமல் காலத்தினால்

பிற்பட்ட நமக்கு அந்த உபாயம் கார்யகமாகாதென்பதும் ஸித்திக்கிறது. ஆழ்வானுடைய த்ருஷ்டாந்தத்திலும் இவ்வர்த்தம் காட்டப்பட்டிருக்கிறது. எங்ஙனே என்னில்:- குடல் துவக்காலே என்பதினால் தத்கால ஸம்பந்தம் வேண்டுமென்பது காட்டப்படுகிறது. எப்படி ஸிம்மம் தாண்டும் ஸமயத்தில் அதன் ஸரீரத்தில் இருந்த ஜந்துக்கள் மட்டுமே ஒரு மலையிலிருந்து மற்றொரு மலைக்குப் போகுமேயொழிய அது தாண்டிய பிறகு அதனுடன் ஸம்பந்தம் பெற்ற ஜந்துக்கள், அதாவது அது தாண்டும் காலத்தில் அதன் ஸரீரத்தில் இல்லாதவை, தாண்டுவதைப் பற்றிய ப்ரஸக்தியேயில்லையோ, அதைப் போலவே ஸ்ரீபாஷ்யகாரருடைய குடல் துவக்கான அவருடைய ஆத்மீய ஸமர்ப்பணத்தில் சேர்க்கப்படாத நம் போன்றவர்களுக்கு அவருடையதான உபாயம் மோக்ஷத்திற்கு ஸாதனமாகாது என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. ஸாஸ்திர விருத்தங்களான சில ஐதிஹ்யங்களைக் காட்டி அவற்றைக் கொண்டு எம்பெருமானார் அனுஷ்டானம் ப்ரமாணம் என்று சிலர் சொல்லுகிறார்கள். இது அனுசிதம். ஏனென்றால் பெரியோர்களுடைய வார்த்தையே நமக்கு முற்றிலும் ப்ரமாணம், அவர்களுடைய அனுஷ்டானத்தில் சிற்சில பாகங்களே ப்ரமாணமாகாகுமென்பது ईश्वराणां वचस्सत्यं (பாகவதம்) என்றிவை முதலிய ப்ரமாணங்களைப் பார்த்தால் பெரியோர்களின் வார்த்தையே முற்றிலும் ப்ரமாணம், அவர்களுடைய அனுஷ்டானத்தில் வர்ணம் ஆஸ்ரமம் முதலியவற்றிற்கு விரோதமில்லாத அம்ஸங்களே ப்ரமாணமாகும் என்று ஏற்படுகிறது. ஆகையினால் எம்பெருமானாருடைய அனுஷ்டானங்களையெல்லாம் நாம் பின்பற்ற முடியாது. அனுஷ்டானமும் ஸாஸ்திர விரோத மாயிருக்கவில்லையென்பதையும் கர்மானுஷ்டான விஷயத்தில் மிகவும் ஜாகரூகராய் இருந்தாரென்பதையும் ''பாஷ்யகாரர் அந்திம தசையிலும் வருந்தி எழுந்திருந்து ஸந்த்யா காலத்திலே ஜலாஞ்ஜலி ப்ரக்ஷேபம் பண்ணியருளினார்''(ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்.) ''எம்பெருமானாருள்ளிட்ட பரமா சார்யர்களுடைய அந்திம திவஸாவதியான அனுஷ்டானங்களை''

(ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்.) என்றிவை முதலாக அருளிச் செய்திருப்பதினால் என்றபடி. அன்றிக்கே ஸ்ரீபரமபத ஸோபானத்தில் ''எதிவரனார் மடைப்பள்ளி வந்த மணம் எங்கள் வார்த்தையுள் மன்னியதே'' என்றும், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் इति यतिराज महानस परिमळ परिवाह वासितां என்றும் அருளிச் செய்திருப்பதினால் என்றபடியாகவுமாம்.

(36) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் எம்பெருமானாரால் அநிதாஸாதாரணமாய் ஸ்ரீபாஷ்யம் ஸ்ரீபகவத் விஷயம் என்கிற உபயஸிஹ்மாஸனாதிபத்யத்தில் மூர்த்தாபிஷேக்தரானவரும் எம்பெருமானாருக்குப் பிறகு அந்த ஸம்ப்ரதாயத்தை விஸேஷித்து ப்ரவசனம் செய்தவரும் வடுகநம்பியால் யதிராஜவைபவத்தில் பாஷ்யகாரருடைய ஜ்ஞானபுத்திரரென்று கொண்டாடப்பட்டவருமான ***திருக்குருகைப்பிரான் பிள்ளானைக்*** குறிக்கிறதாகவுமாம். ''பெரிய முதலியார் சரம திருமேனி முன்பு தாம் செய்தருளிய ப்ரதிஜ்ஞைகளில் ஒன்றாகிய திருவாய்மொழிக்கு வ்யாக்யானம் செய்வதாகிய மஹா கைங்கர்யத்தைப் பூர்த்தி செய்வதற்காக அவராலே நியமிக்கப்பட்டு அவருடைய காலக்ஷேப ஸங்க்ரஹமாய் அவர் தாமே ப்ரவசனம் செய்தருளும்படியான ஏற்றம் பெற்றபடியாலே ஆசார்ய விஷயமான மங்கள ஸ்லோகமொன்றுமில்லாததான ஆறாயிரப்படியை அநாதரித்தும் பிள்ளான் விஷயமாகிய தனியனை அனுஸந்திக்காமலும் அவர் பணித்தருளிய அர்த்தவிசேஷங்களை அங்கீகரியாமல் என்று சொல்லுவாருமுண்டு'' என நிரூபித்தும் போந்தார்கள் சிலர். நிகம பரிமளம் எனப்பட்ட எழுபத்து நாலாயிரப்படியில் விஸ்தாரமான வ்யாக்யானம் ஆறாயிரப்படிக்கு அருளிச் செய்திருப்பதினாலும் - ஸ்ரீ த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியிலும் ஸாரத்திலும் அவ்வர்த்தங்களை ஸங்க்ரஹித்து நிரூபித்திருப்பதினாலும் - ''தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே, ஈசுவரனால் வரும் நன்மை முலைப் பால் போலே'' (சரம சுலோகாதி) என்கிற வார்த்தையை உதாஹரித்து, தன்னால் செய்யப்படும் உபாயமான பக்தி விலைக்கு வாங்கிய பால் போலப்

பத்யமுமன்று ப்ராப்தமுமன்று, பகவானுடைய அனுக்ரஹத்தைக் காரணமாகக்கொண்டு செய்யப்படும் உபாயமாகிற ப்ரபத்தி தாயின் முலைப்பால் போலே ப்ராப்தமும் பத்யமு மாயிருக்கும், ஆகையினால் தாய் தன் குழந்தைக்குத் தானே உசித காலங்களில் ஸ்தந்ய பானம் செய்விக்கிறாப் போலே பகவானும் உசிதமான காலத்தில் உபாயாநுஷ்டானம் செய்துவைப்பானாகையால் நாம் உபாயத்தை அனுஷ்டிக்க வேண்டியதில்லையென்று அர்த்தம் சொன்னார்கள். இதற்கு ஸ்வரஸமான அர்த்தத்தை ''பக்தி ப்ரபத்தியாதிகள் எல்லாம் அவனாலே வருகிறதென்று நினைக்கவேணுமென்று தன்னுடைய பராதீந கர்த்ருத்வத்திலே தாத்பர்யம் என்று அருளிச்செய்து,எல்லா ப்ரவ்ருத்திகளும் பகவானுடைய ஸங்கல்பத்திற்கு வசப்பட்டிருப்பதினால் மற்ற ப்ரவ்ருத்திகளைச் செய்கிறாப்போலே உபாய அனுஷ்டானத்திலும் ப்ரவ்ருத்திக்கலாம்,ஆனால் நாம் செய்கிறோம் என்கிற அபிஸந்தி இருக்கக்கூடாது (சரம சுலோகாதி ) என்பதைத் தெரிவித்திருக்கிறபடியாலும் - ஸ்ரீ விரோத பரிஹரத்தில் முக்தன் ஸரீரத்துடனும் அதில்லாமலும் கைங்கர்யம் செய்வது கூடுமோ என்கிற - ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் அருளிச்செய்து, அதற்கு மேற்கோளாக இப்படியே किङ्करत्वं तु शेषस्य स्वामि कैङ्कर्य निष्ठता (78 - ம் வாக்யம்) என்று பிள்ளான் அருளிச்செய்தார்'' என்று இவர் ஸூக்தியை எடுத்து நிரூபித்திருப்பதினாலும் என்றபடி. அப்புள்ளார் என்று பாடாந்தரம்.

(37) அதுவுமன்றிக்கே ராமாநுஜ என்பது ஸ்ரீவிஷ்ணு சித்தர் என்கிற மற்றொரு திருநாமமுடைய ***எங்களாழ்வானைக்*** குறிக்கிறதாகவுமாம், இவருடைய வேதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யானம் முதலியவற்றை ஸ்ரீ ந்யாயபரிசுத்தி முதலிய ஸ்ரீ ஸூக்திகளில் மேற்கோளாக நிரூபித்திருப்பதினாலும், ஸ்ரீ பாஷ்யகாரர் அங்கீகரித்ததாகச் சில அபார்த்தங்களை சிலர் வெளியிட அவை ஸரியல்ல என்று கண்டித்தவர் இவர் என்பதை तत्तु श्रीविष्णुचित्ताद्यैः निर्मूलमिति दर्शितः (ஸ்ரீமத் ரஹ -12) என்றும், தாம் அருளிச்செய்த அர்த்தவிசேஷங்கள் இவர் முதலிய பூர்வா சார்யர்களின் ஸூக்திகளை அனுஸரித்த தென்பதை, ''ஸ்ரீவிஷ்ணு

சித்த வாதி ஹம்ஸாம்புத வரதாசார்யர்கள் ஸங்க்ரஹித்தார்கள்'' என்றும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திலும், उक्तंच श्रीविष्णुचित्तैः -- श्येन कपोतीय कपोतोपाख्यान काक विपीषण क्षत्रबन्धु मुचुकुन्द गजेंद्र द्रौपदी तक्षक शतमखादिषु मोक्षार्थतय क्षणकालनिर्वर्त्य प्रपदनार्थ दर्शनात् अबधिराणां तत्र मुख्यत्वं इति என்று இவருடைய ஸூக்தியை ஸ்ரீ நிக்ஷேப ரக்ஷையிலும், இவருடைய கத்ய வ்யாக்யானத்தை ஸ்ரீ ரஹஸ்ய ரக்ஷையிலும் विष्णुचित्तैर्विवव्रे என்று ஸ்ரீஅதிகரணஸாராவளி யிலும் உதாஹரித்திருப்பதினால் என்றபடி.

(50) அன்றிக்கே ராமானுஜ என்னும் பதம் ***நடாதூர் அம்மாளைக்*** குறிக்கிறதாகவுமாம். இவருடைய பெருமையை श्रीमद्ब्यां स्यादसाविद्यनुपधि वरदाचार्य रामानुजाब्यां (ஸ்ரீ அதிகரண ஸாராவளி-2), व्यातानीत् वेङ्कटेशो वरदगुरु कृपा लम्भितोद्दाम भूमा (ஸ்ரீதத்வ முக்தா-2), प्रणम्य वर्दाचार्य (ஸ்ரீதத்வடீகை)என்றும், ''அம்மாள் அருளிச்செய்த சுருக்கு'' (ஸாங்கப்ரபத) என்றும், ''வாதிஹம்ஸாம்புத வரதாசார்யர்கள்'' (ஸித்தோபாய) என்றும் அருளிச்செய்திருப்பதினாலும், இவருடைய தத்வஸாரம் முதலிய க்ரந்தங்களைத் தம்முடைய ஸ்ரீஸூக்திகளில் உதாஹரித்திருக்கிறபடியாலும் என்றபடி.

(39) அன்றிக்கே ராமானுஜ என்னும் பதம் ராம குருக்கள் என வஸிஷ்டர் ஒரு தரம் பெற்றதோபாதி, க்ருஷ்ணனுக்கு ஆசார்யன் என ஸாந்தீபினீ பெருமை பெற்றதோபாதி, पत्युः संयमिनां प्रणम्य चरणौ तत्पादकोटीरयोः संबन्धेन समिध्य(न्ध)मानविभवान् धन्यांस्तथान्यान् गुरून् (ஸ்ரீ ந்யாய பரிசுத்தி) என்றபடியே எம்பெருமானாருடைய திருமுடி ஸம்பந்தத்தினால், அதாவது அவரை ஸிஷ்யராகப் பெற்றமையினால் பெரிய நம்பிகள் ஒரு ஏற்றம் பெற்றதோபாதி, இந்தக் குருவராவதாரத்தில் ஆசார்யனாக விருக்கும்படியான பரம பாக்யம் பெற்ற ஸாக்ஷாத் ஆசார்யனான ***கிடாம்பி ராமானுஜ அப்புள்ளாரைக்*** குறிக்கிறதாகவுமாம். இவருடைய பெருமையை ''அப்புள்ளார் அருளிச்செய்த விரகு'' (ப்ரதானப்ரதி), ''கிடாம்பி அப்புள்ளார் அருளிச்செய்தார்'' (ப்ரபாவ ) என்றும், ''கிடாம்பி அப்புள்ளார் அடியேனைக் கிளியைப் பழக்குமிக்குமாப் போலே பழக்குவிக்க'' (ஆசார்ய

க்ருத்யாதி) என்றும், ''அப்புள்ளார் அருளிச்செய்யும் பாசுரம் '' (பரிகரவிபா ) என்றும், श्रुत्वा रामानुजार्यात् सदसदपिततं (ஸ்ரீ தத்வமுக்தா -2), श्रीमद्भ्यां .........रामानुजाभ्यां (ஸ்ரீ அதிகரண ஸாரா) अश्रौषं शेषकल्पादहमपि विदुषो वादिहंसाम्बुवाहात्‌ः(ஸ்ரீ அதிகரண ஸாரா -25), वन्देयात्रेय रामानुज गुरुमनघं वादिहम्साम्बुवाहम् (அப்புள்ளார் தனியன்), नमो रामानुजार्याय वेदान्तार्थ प्रदायिने (வாழித்திருநாமம்), तत्वक्ता ... मम गुरुभिः वादिहम्साम्बुवासैः(ஸ்ரீ அதிகரண ஸாரா - 500) என்றும் அருளிச்செய்திருப்பதினாலும், இவருடைய நியாய குலிஸ வாக்யங்களைத் தம்முடைய ஸ்ரீ ஸூக்திகளில் உதாஹரித்திருக்கிறபடியாலும் என்றபடி.

(40) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் எம்பெரு மானாருடைய மாஹாநஸிக கைங்கர்யத்தை நடத்தி வந்த வேதாந்தோதயனர் என்கிற திருநாமம் பெற்ற ***கிடாம்பி ஆச்சானைக்*** குறிக்கிறதாகவுமாம். இவருக்கு பாஷ்யகாரருடன் நெருங்கிப் பழகுவதற்கு ஸந்தர்ப்பங்கள் மற்ற ஸிஷ்யர்களை விட மிகவும் அதிகமாக இருந்தபடியினால் நுட்பமாகிய அனேக விஷயங்களை அறிந்திருந்தார். இவற்றை இவர் ஒருவரே ப்ரவசனம் செய்தார். இவ்வர்த்த விசேஷங்களையே இவருடைய திருப்பேரனாருடைய திருக்குமாரரான ஸ்வாசார்யரிடமிருந்து க்ரஹித்தருளி இவை பிற்காலத்தியவர்களுக்கும் பயன்படுமாறு முப்பத்து நான்கு ரஹஸ்யங்களாக அருளிச் செய்திருப்பதினாலும், ''ஆச்சான் பக்கலிலே கேட்டு'' (ஸித்தோபாய) என்றும், எதிவரனார் மடப்பள்ளி வந்த மணம்(ஸ்ரீபரமபதஸோபானம்), इति यतिराज महानस परिमळ परीवाह वासितां पिबत (நிகமனாதிகா), मान्यं यतीश्वर महानस संप्रदायम् (ஸ்ரீ ஸரணாதி தீபிகை-1), यो माहानसिको महान् यतिपतेर्नीतश्च तत्पौत्रजानाचार्यान् (ஸ்ரீ ந்யாஸ திலகம்-9) என்று அருளிச்செய்திருப்பதினாலும் என்றபடி .

(41) அன்றிக்கே ராமாநுஜ என்னும் பதம் எம்பெரு மானாருக்குத் திருவாய்மொழியின் அர்த்தங்களை உப தேசித்த திருமாலையாண்டானைக் குறிக்கிறதாகவுமாம். இவர் விஷயமாக ''திருமாலையாண்டான் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழி கேட்டார்'' (ஸ்ரீ குருபரம்) என்றிவை முதலியவற்றை அருளிச்

செய்திருப்பதினால் என்றபடி.

இப்படி ஆசார்ய பரம்பரையிலுள்ள ஒவ்வொரு ஆசார்யருடையவுமான பெருமையை எடுத்து நிரூபித்தபடியினால் அந்தந்த ஆசார்யனுடைய க்ருபைக்குப் பாத்திரமானபடி ஒருவாறு நிரூபிக்கப்பட்டது. இதே ரீதியில் இன்னும் ஏற்படக் கூடிய யோஜனா விசேஷங்களை அவரவர்கள் தங்கள் பக்திக்கும் புத்திக்கும் அனுகுணமாக யோஜித்துக்கொள்க. ஸ்ரீமந்நாதமுனிகள் முதலாக ஸ்வாமி தேசிகன் வரையிலாக ஓராண்வழியாக வந்திருக்கும் பரம்பரையில் நேரில் சந்தித்த ஆசார்யர்களின் கடாக்ஷம் பெற்றமை மட்டும் இங்கு சொல்லப் பட்டிருக்கிறது. இவர்களைத் தவிர விசேஷ உபகாரம் செய்த ஆசார்யர்கள் இருக்கிறார்கள். அவர்களில் பிரதானர்கள் எம்பெருமானார்க்கு ரஹஸ்யார்த்தங்கள் பரீக்ஷித்த திருக்கோட்டியூர் நம்பிகளும், ராமாயணார்த்த விசேஷங்களை உபதேசித்த பெரிய திருமலை நம்பிகளும். இவர்களுடைய ப்ரபாவத்தை ஸ்ரீ குருபரம்பராஸாரம், ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரம் ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலியவற்றில் நிரூபித்தபடியினால் அவர்களுடைய தயைக்கும் பாத்ரமானார் என்றபடி.

## தயா பாத்ர சப்தார்த்தம்

தயா பாத்ரம் என்றது கீழ் நிரூபிக்கப்பட்டவர்களுடைய தயைக்குக் கொள்கலம் - இருப்பிடம், ஒன்று சேர்ந்து தங்கி யிருக்குமிடம் என்றதாயிற்று. ஆகையினால் அந்த ஆசார்யர் களுடைய தயையைஅபேக்ஷிக்குமவர்கள் இவரை ஆச்ரயித்தே பெறவேண்டும்படியாய் இருக்கிறது.அவர்களையே நேரில் ஆச்ரயித்துப் பெறுவதென்பதும் ஸாத்யமன்று. இப்படிப் பஹு முகமாகத் தங்கள் பெருமையை வெளியிட்டருளிய இவர் விஷயத்தில் கடாக்ஷம் பண்ணிக் கொண்டிருப்பதை விட்டு நம்மைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார்களாகையினால். ''எங்கும் பக்க நோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே'' (திருவாய்மொழி) என்னப்பட்டதிறே. ஒரு பசுவைக் கறந்து பாலை ஒரு பாத்திரத்தில் வைத்துவிட்டால் பால் வேண்டியவர்கள் அப்பாத்திரத்திலிருந்தே பெற வேண்டுமல்லவா? ஆழ்வாருடைய

திவ்யகடாக்ஷத்திற்குப் பாத்ரமான பெரிய முதலியாரைப் பார்த்து பகவான், ப்ரதி தினமும் திருக்குருகைக் காவலப்பன் யோக த்யானத்திற்கு விஷயமாய் நிற்பவர் அவரைப் புறக்கணித்து எட்டி எட்டிக் கடாக்ஷித்தாப் போலே என்று இங்கும் கண்டுகொள்வது.

இவ்வர்த்தத்தை ப்ரதிவாதி பயங்கர அண்ணனும் ஸப்ததி ரத்ன மாலிகையில் गुरौ वादिहंसाम्बुदाचार्य शिष्ये . . . यतीन्द्र प्रियास्युः कुतो मुक्तिवार्ता हि तादृग्विधान्म् என்று வெளியிட்டிருக்கிறார். அன்றிக்கே பாத்ரம் என்றது யோக்யமான வஸ்து என்றபடியாகவுமாம். அதாவது பாத்ரமறிந்து பிச்சை இடு என்று சொல்லப்படுகிறதல்லவா. கீதாசார்யன் தானும் देशे काले च पात्रे च (கீதை 17-20) என நியமித்தான். தானமென்பது ஐயம் என்றும் பிச்சையென்றும் இரண்டு வகைப்படும். கேவலம் தயையினால் தூண்டப்பட்டுக் கொடுப்பதை ஐயமென்கிறது. சாஸ்திரங்களில் விதிக்கப் பட்டிருக்கும் யோக்யதையுள்ளவர்களுக்குக் கொடுப்பது பிச்சை எனப்படும். ''அடியிலே வித்யை தான்'' (ஆசார்யக்ருத்யாதிகாரம்) ''शोवाधिष्टेस्मि रक्ष म என்று ப்ராஹ்மணனை அபேக்ஷித்த படியாலே'' என்று அருளிச்செய்யப் பட்டிருக்கிறதல்லவா. பாத்ரம் என்பதற்கு ஸ்ரீ தாத்பர்ய சந்த்ரிகையில் ''पात्रम् तु न विधया केवलया जन्मना ( तपसा) वापि पात्र ता। यस्य वृत्तमिमे चोक्ते तद्धि पात्रं प्रचक्षते॥ ''என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது.

பரக்கும் புகழ்வரும் பைம்பொருள் வாய்த்திடும் பத்தர்களாய்
இரக்கின்றவர்க் கிவையீந்தால் அறமுளதென்றியம்பார்
கரக்கும் கருத்துடைத் தேசிகர் கன்றென நம்மை எண்ணிச்
சுரக்கும் சுரபிகள் போல் சொரிகின்றனர் சொல்லமுதே.

(அம்ருதஸ்வாதினீ8)

என்கிறபடியே கேவலம் க்ருபையினால் தங்களை ஆச்ரயித்த சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்பவர்கள் நம் பூர்வாசார்யர்கள். அப்படி உபதேசம் செய்யப்படும் அர்த்த விசேஷங்கள் மிகவும் ஸங்க்ரஹமாய் அவரவர்களுடைய ஆத்மோஜ்ஜீவனத்திற்கு அமையும். ஆனால் மற்றவர்களுக்கு உபதேசிக்கவோ கலங்கு வாரைத் தெளிவிக்கவோ உபயோகமுடைதாகா. தங்களுக்குப் பிறகு இந்த ஸம்ப்ரதாயத்தைப் பரவச் செய்யக்கூடிய

சிஷ்யனைப் பொறுக்கியெடுத்து அவனுக்கு விசேஷோபதேசம் செய்வதுதான் ''पात्रस्थमात्मज्ञानं च कृत्व् पिण्डं समुत्सृजेत्। नान्तर्द्धथि स्वयं याति जगद्विजयम् बीजकृत्।'' என்கிற பகவன் நியோகத்தையும் கடந்தானாம். ஆகையால் விளக்குப்பிடிக்குமவன் தன்னை ராஜா ஒரு கார்யத்திற்குப் போகச் சொன்னால் தன் கையில் விளக்கை அதுக்கு ப்ராப்தமானார் கையிலே கொடுத்துப் போமாப்போலே ஸத்பாத்ரமானர்க்கு, உபதேசம் செய்யவேணுமென்று விதிக்கப்பட்டிருப்பது (ஆசார்ய க்ருத்யாதிகாரம்) - அதை அனுஸரித்து அப்படிப்பட்ட பாத்ரங்களுள் ப்ரதானரான இவரைக் கடாக்ஷித்தருளினமை தயாபாத்ரம் என்று சொல்லப்படுகிறது. ராமாநுஜ என்னும் பதத்திற்குக் கீழ் நிரூபிக்கப்பட்டிருக்கும் யோஜனைகளில் அநுஜ என்னும் பதம் பிற்பாடு அவதரித்த என்கிற அர்த்தத்தைச் சொல்லும் என்று சொல்லப்பட்டது. சில யோசனை களில் ராம என்னும் பதமே அந்த வ்யக்தியைச் சொல்லுகிறது என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இந்த யோஜனைகளிலே அநுஜ என்னும் பதம் ஸஹஜமான என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறதென்றும், இவ்வர்த்தம் மற்ற யோஜனைகளில் அர்த்த ஸித்தமென்றும் அறியத்தக்கது.

### ஜ்ஞாந வைராக்ய பூஷண சப்தார்த்தம்.

இப்படிப் பூர்வாசார்யர்கள் எல்லோரும் ஒரே முகமாக ஸ்ரீதேசிகனைத் தங்கள் தயைக்கு விசேஷ பாத்திரமாக்கியதின் பலன் யாது என்பதைக் காட்டுகிறது ஜ்ஞான வைராக்ய பூஷணம் என்னும் விசேஷணம். அன்றிக்கே அவர்கள் எல்லோரும் இவரைத் தங்கள் தயைக்குப் பாத்ரமாகக் செய்ததற்கு காரணத்தை காட்டுகிறதாகவுமாம். உயர்வற உயர்நலம் உடையவன் எவன் அவன் மயர்வற மதி நலம் அருளினன் என்றாழ்வார் அனுஸந்தித்தாப் போலே, அந்த உயர்வற உயர்நலம் உடையவனும், அவனால் மயர்வற மதி நலம் அருளப்பெற்ற ஆழ்வாரும் இவரை கடாக்ஷித்தபடியால் இவர் ஜ்ஞான வைராக்ய பூஷணராய் நின்றார் என்றபடி. ஜ்ஞானத்தையும் வைராக்யத்தையும் தமக்கு பூஷணமாக உடையவர் என்றாவது ஜ்ஞானம், வைராக்யம், இவற்றுக்குப் பூஷணமாய் நிற்பவர்

என்றாவது பதத்தின் மேல் அர்த்தம்.

## ஜ்ஞாந சப்தார்த்தம்.

(1) ஜ்ஞானம் என்றது விவேகத்தை, அதாவது பகுத்தறிவை மனுஷ்யன், பசு , திர்யக், முதலிய எல்லா வற்றிற்கும் ஆஹாரம் தூக்கம் முதலியவை பொது வாயிருக்கும். ஆகையினால்தான் அவைகளிற்காட்டில் வித்யாஸத்தைத் தெரிவிப்பதற்காக மனிதனுக்கு ஜ்ஞானம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கேவலம் ஹாரம் முதலிய ஆபரணங்கள் புருஷனை அலங்கரிப்பதில்லை, ஜ்ஞான மொன்றே உண்மையான அலங்காரம், அதுவே அழிவில்லாதது, எல்லா இடத்திலும் மேன்மை பெறக் காரணமாயிருக்கும் என்று ஸாமாந்ய ஜனங்களும் ஜ்ஞானத்தையே போர விரும்பிப் போந்தார்கள். அதை உடையவர் என்றபடி.

(2) அன்றிக்கே ஜ்ஞானம் என்பது ''सा विध्या या विमुक्तये विध्यान्या शिल्पनैपुणम्'', (விஷ்ணுபுராணம் 1-19-41) . ''तत् ज्ञानमज्ञानमतोन्दुक्तम्।''(விஷ்ணுபுராணம் 6-5-87) एतत् ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा। (கீதை 13-11) இத்யாதிகளில் மோக்ஷோபயுக்தமானதே ஜ்ஞானமாகும், மற்றவை எல்லாம் அஜ்ஞானம் என்று நிர்ணயிக்கப்பட்டிருப்பதினால் அப்படிப்பட்ட ஜ்ஞானத்தை உடையவர் என்றபடியாகவுமாம். ''சுமையான கல்விகள் சூழ வந்தாலும் தொகையிவை என்று'' (அதிகார ஸங்க் 9) மற்ற வித்யைகளை வேண்டாமென்று விலக்கி, எட்டிரண்டையே, அதாவது ஹயக்ரீவனுடைய திவ்யகடாக்ஷத்தினால் ஸகல வித்யாபிமானி தேவதைகளும் ஸ்வாமியைச் சூழ்ந்து நிற்க வேதாந்த வித்யையைத் தவிர மற்ற வித்யைகள் ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்கு ஸாதனமாகாததைக் கண்டு அதை ஸாதிக்கவல்ல திருமந்திரம், த்வயம், இவற்றில் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கும் ஜ்ஞானத்தை அங்கீகரித்தவர் என்றபடி.

(3) அன்றிக்கே ஓரொன்றே வானேறப்போமளவும் வாழ்வைத் தரக் கூடிய ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்யும்படியான புத்தி, ஜ்ஞான என்பதினால் சொல்லப்படுகிறதாகவுமாம்.

(4) அன்றிக்கே ஆசார்யனாயிருப்பதற்கு அவச்யம் வேண்டியதாகச் சொல்லப்பட்டிருக்கும் ஸ்திரதித்வம் முதலியவற்றை ஜ்ஞான என்கிற பதம் குறிக்கிறதாகவுமாம். அதாவது ச்ரிய:பதியான பகவானே ஸித்தோபாயம், அவன் திருடிகளில் பரஸமர்ப்பணம் செய்வது பரம ஹிதம், அவன் திருவடிகளில் கைங்கர்யம் செய்வதே புருஷார்த்தம் என்கிற கலங்காத புத்தியையுடையவர் என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது என்றபடி.

(5) அன்றிக்கே "संक्षिप्तं विस्तृतं वा सरलबहु चित्तं " (ஸ்ரீஸங்கல்ப ஸூர்) என்னப்பட்டபடியே லோகத்தில் ஜனங்களுடைய பின்னருசியைக் கடாக்ஷித்து அவர்களுக்கு உபயோகப்படும் படியாக விஸ்தாரமாயும் சுருக்கமாயும் ஸரளமாயும் இருக்கிற க்ரந்தங்களை செய்யக் கூடிய புத்தி இங்கு ஜ்ஞான பதத்தால் சொல்லப்படுகிறதாகவுமாம்.

(6) அன்றிக்கே ஆசார்யர்களுடைய திருவடிகளில் கைங்கர்யம் செய்வதே பரமபதத்திலும் நமக்குப் புருஷார்த்தம் என்கிற துணிவு ஜ்ஞான பதத்தால் சொல்லப்படுகிறதாகவுமாம். "குருக்கள் குழாங்கள் குரைகழற்கீழ் மாறுதலின்றி மகிழ்ந்தெழும் போகத்து மன்னுவமே"(பரிபூர்ண ப்ரஹ்மானுபவஅதிகாரம்), "குலம் திகழும் குருக்கள் அடிசூடி மன்னும் குற்றேவல்" (ஸ்ரீபரமத பங்கம்), "आचार्यादिह देवतां समधिकामन्यां न मन्यामहे" (ஶிஷ்ய க்ருத்யாதிகாரம்) என்றிறே இவர் உத்கோஷித்திருப்பது.

(7) அன்றிக்கே கவிதார்க்கிக ஸிம்மமாய் விளங்கி நின்றமையினால் அந்தப் பாண்டித்யத்தால் நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லராயிருந்தாலும் அப்படிச்செய்யாமல் ப்ரமாண சரணராய்ப் போருகிறோம் என்று அனுஸந்தித்த துணிவு ஜ்ஞான பதத்தால் சொல்லப்படுகிறதாகவுமாம்.

(8) அன்றிக்கே லோகத்தில் அனேகமாய் ஒவ்வொருவரும் ஒவ்வொரு சாஸ்திரத்தையே விசேஷமாக பரிசயம்செய்து அதில் நிபுணராய் விளங்குவர். அதிலும் கவிக்குத் தர்க்கமும், தார்க்கிகனுக்குக் கவித்வமும், மீமாம்ஸகனுக்கு வேதாந்தமும், வேதாந்திக்குத் தர்க்கமும் அதிகமாகத் தெரியாது என்பது

ப்ரஸித்தம். அதற்கு விலக்காய் இவர் கவியாயும் தார்க்கிகராயும் மீமாம்ஸகராயும் வேதாந்தியாயும் விளங்கும்படி செய்த புத்தி விசேஷம் ஜ்ஞான பதத்தால் சொல்லப்படுகிறதாகவுமாம்.

(9) அன்றிக்கே ஸாமாந்ய ஜனங்கள் லோகத்தில் ஒருவரை நாடியோ, ஒரு தேவதையை உபாஸித்தோ ஜ்ஞானம் பெறுவர்கள், இவரோ ஸகல வித்யைகளுக்கும் இருப்பிடம் என்று ''आधारम् सर्व विध्यानां हयग्रीवमुपास्महे'' (ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்தோத்திரம் - 1 ) இத்யாதிகளில் ப்ரஸித்தமான பரிமுகனால் பன்னுகலை நால் வேதப்பெருளையெல்லாம் அருளப்பெற்ற புத்தியைக்குறிக்கிறது ஜ்ஞான பதம் என்றபடியாகவுமாம்.

திருமந்திரத்தின் தேவதையான ஸ்ரீமந்நாராயணனிடமிருந்து திருமந்திரத்தின் அர்த்தத்தை க்ரஹித்தபடியினால் திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியானது அறிவு தரும் பெரிய திருமொழி என்னும்படி நின்றாப்போலே வித்யாமூர்த்தியான ஹயக்ரீவனுடைய திவ்ய லாலாம்ருத பானத்தினால் பெற்ற இவருடைய ஜ்ஞானமே ஸர்வருக்கும் உபஜீவ்யமானது என்பது ஜ்ஞான பதத்தால் சொல்லப் படுகிறது என்றபடியாகவுமாம்.

(10) அன்றிக்கே ஏடுபார்த்தாதல் சுவரேறிக்கேட்டாதல் பெறாமல் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டபடியே ஆசார்ய சுச்ரூஷை செய்தே இவர் ஜ்ஞானம் பெற்றபடியினாலே கார்யவத்தாயிற்று என்பதை ஜ்ஞான பதம் தெரிவிக்கிறதாகவுமாம். அப்படியே ''रामानुजार्यादात्रेयात् मातुलात् सकलाः कलाः। अवाप्त विंशत्यब्दे'' (தேசிக மங்களம் - 7)

காவலனெங்கள் கிடாம்பிக் குலபதி அப்புளார் தம்<br>
தேமலர் சேவடி சேர்ந்து பணிந்தவர் தம் அருளால்<br>
நாவலரும் தென் வடமொழி நற்பொருள் பெற்ற நம்பி"

(பிள்ளையந்தாதி 17) என்று அனுஸந்திக்கப்பட்டிருக்கிற தல்லவா!

(11) அன்றிக்கே "ஜ்ஞாதவ்யதமமான ஸித்தோபாயத்தைப் பற்றவும் ஸாத்யோபாய விஷயமாகவும் இவ்வுபாய ப்ரபாவ விஷயமாகவும் கர்மவச்யருக்குக் கடுகத் தெளிவு

பிறவாமைக்கு ஸ்வதந்த்ரனான ஸர்வேசுவரன் இவர்களுடைய பூர்வாபராதத்தாலே இட்ட நினைப்பு ஈடுமாறுகைக்கு ப்ரதான காரணம் மூன்றுண்டு'' (ஸித்தோபாயசோதனாதி) என்று சொல்லப்பட்டதான திருமுகப் பாசுரம், ஸதாசார்யானுக்ரஹம், ஸத் ஸம்ப்ரதாயஸித்தி, இவற்றைப் பெற்றிருந்தமையினாலிவருக்கு நல்ல தெளிவு ஏற்பட்டது என்பது ஜ்ஞான பதத்தினால் சொல்லப்படுகிறது என்றபடியாகவுமாம். அதாவது ''நின் திருவே அருள்தரும்'' (மும்மணிக் கோவை) என்று பெரிய பிராட்டியார் அனுக்ரஹமும் ''காவலன் எங்கள்'' (பிள்ளையந்தாதி 17) இத்யாதியால் ஸதாசார்யானுக்ரஹமும் பெற்றபடியும். '' श्रीमद्भ्यां स्थादसा वित्यनुपाधि वरदाचार्य रामानुजाभ्यां सम्यक् दृष्टेन '' ( ஸ்ரீ அதிகரண ஸாரா - 2) என்று ஸத்ஸம்ப்ரதாயஸித்தி ஏற்பட்டமையும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றனவல்லவா என்றபடி.

(12) அன்றிக்கே கேவலம் ஆசார்யனிடமிருந்து ஜ்ஞானம் பெறுவது மாத்திரம் போதாது, அந்த ஆசார்யனால் இவன் ஸம்ப்ரதாயப்பர்வர்த்தனம் செய்யக்கடவன் என்கிற அனுக்ரஹமும் பெறவேண்டும் என்பது ப்ரஸித்தம். வஸிஷ்ட புலஸ்த்ய வர ப்ரஸாதத்தினாலல்லவா பராசர ப்ரஹ்மர்ஷி தேவதா பாரமார்த்ய ஜ்ஞானம் பெற்றது. அதைப்போலவே இவரும் அம்மாள் அப்புள்ளார் இவர்களுடைய அனுக்ரஹத்தால் ஸம்ப்ரதாய ப்ரவசனம் செய்யக்கடவாய் என்கிற அனுக்ரஹம் பெற்றபடியினாலே இவருடைய ஜ்ஞானம் விசேஷமானது என்பது ஜ்ஞான பதத்தினால் சொல்லப்படுகிறது என்றபடி. '' प्रतिष्ठापित वेदान्तः प्रतिक्षिप्त बहिर्मतः। भूयास्त्रैविध्यमान्थसत्वं भूरिकल्याणभाजनम्॥ '' (அம்மாள் அனுக்ரஹ வாக்யம்.) என்றது இங்கு அனுஸந்தேயம்.

(13) அன்றிக்கே மீமாம்ஸையாகிற ஒரே சாஸ்திரத்தை ராகு மீமாம்ஸகர்களும் கபந்த மீமாம்ஸகர்களும் தலை வேறு உடல் வேறாகப் பிரித்துப் பற்றினாப் போலே, உபய வேதாந்த ப்ரதிபாத்யமான ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்திலும் ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதங்களென்று சிலர் பிரித்தார்கள். இரண்டு கண்களாலும் ஒரு வஸ்துவை பார்ப்பதற்கும் ஒரு கண்ணால் அதைப் பார்ப்பதற்கும் எவ்வளவு வித்யாஸமுண்டோ, அவ்வளவு

பேதமும், இரண்டு சக்கர வண்டியில் செல்வதற்கும் ஒரு சக்கர வண்டியில் செல்வதற்கும் எவ்வளவு வித்யாஸமுண்டோ அவ்வளவு பேதமுமுண்டு, பரப்ரஹ்மத்தை ஒரு வேதாந்தத்தால் அறிவதற்கும் உபய வேதாந்தங்களினால் அறிவதற்கும். இப்படி பிரித்தது மாத்திரமன்றிக்கே அவைகளுக்குள் அர்த்த பேதங்களையும் கல்பித்தார்கள். இது தவறு, உபய மீமாம்ஸைகளும் உபய வேதாந்தங்களும் ஒரே அர்த்தத்தையே சொல்லுகிறனவாய் இருக்கும் என்று நிரூபித்திருப்பவர்களில் ப்ரதானமானவர் இவ்வாசார்யனேயாவர். அப்படிப்பட்ட புத்தி விசேஷம் ஜ்ஞான பதத்தால் சொல்லப்படுகிறது என்றபடியாகவுமாம். '' मीमंसायाः कबन्धं कतिचन जगृ द्द शद्दुकल्पं शिशेकुन्ये किन्तैरन्तर्विरोध प्रमुषितमातिभिः बाह्यकल्पैः भ्रमदाभिः'' (ஸ்ரீ அதிகரணஸாராவளீ 10), 'कलिबलकलुषैः कल्पितार्थैं विरोधः'' (ஸ்ரீஅதிகரணஸாராவளீ11), '' तत्राध्यंवाक्तिसिद्धं विषयमपि परं तत्प्रतिद्वन्द्वियुग्मं स्वप्राप्तेस्साधनं च स्वयमिति हि परंब्रह्म तत्रापि चिन्त्यम्'' (ஸ்ரீ அதிகரணஸாராவளீ17), '' देवः श्रीमान् स्वसिद्धैः करणमिति वदन्नेकमर्थं '' (ஸ்ரீ த்ரமிடோ தாத் - 7) என்று முறையே ஸ்ரீஅதிகரண ஸாராவளியிலும் ஸ்ரீத்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியிலும் தனித்தனியே நிரூபித்திருப்பதும், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் இவை இரண்டையும் சேர்த்து ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதங்களாகிற ச்ருதிகளில் உத்கோஷிக்கப்படுகிறதென்பதை '' स्वप्राप्तेः स्वयमेव साधनतया जोघ्युष्यमाणः श्रुतौ '' (ஸித்தோபாய சோதனாதிகாரம்) என்று அருளிச்செய்திருப்பதும், இவை இரண்டிற்கும் பரஸ்பர விரோதமில்லை, ஒன்றுக்கொன்று விவரணரூபமாய் இருக்கும் என்பதை '' செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே ''(ஸ்ரீ குருபரம்பரா ஸாரம் ) என்று அருளிச்செய்திருப்பதும் அனுஸந்தேயமாகக்கடவது.

(14) அன்றிக்கே கேவலம் தன் அனுஸந்தானத்திற்கு மட்டும் ப்ரயோஜனப்படக்கூடியதாய் நின்றுவிடாமல் ப்ரதிவாதிகளை நிரஸனம் செய்யக்கூடிய புத்தி விசேஷம் இங்கு ஜ்ஞான பதத்தால் சொல்லப்படுகிறதாகவுமாம். இந்த அம்சம் *ஸ்ரீ சததூஷணீ, ஸ்ரீ பரமத பங்கம், ஸ்ரீ விரோதபரிஹாரம், ஸ்ரீ*

*வாதி த்ரய கண்டனம்* இவற்றில் விசேஷித்துக் காணப்படும்.

(15) அன்றிக்கே ஒரு ஸமயத்திலும் ஒரு விதத்தாலும் ஒருவராலும் கலக்கமுடியாத புத்தி விசேஷம் ஜ்ஞான பதத்தால் சொல்லப்படுகிறதாகவுமாம்.

(16) அன்றிக்கே ரகுவரனாய் அவதரித்து ஸர்வாவஸ்தை யிலும் ஒரு தடவை சரணாகதி செய்தவர்களைக் காப்பாற்றுவதே தம்முடைய நெருக்காத நீள் வ்ரதமாகக் கொண்டாப்போலே, இந்தக் குருவராவதாரத்திலும்

'' सत्कार कीर्ति धनलाब्धिषु निर्व्यपेक्षः प्रश्नोचितेषु परया कृपय प्रसीदन् |
सत्तर्क तन्त्रपरिकर्मितमाशरीरात् शारीरक प्रवचन व्रतमाद्रियेथाः ॥''

(ஸ்ரீ ஸங்கல்ப ஸூர்யோதயம் ) என்கிறபடியே வேதாந்தார்த்தங் களையே தமது ஆயுள் முழுவதும் ப்ரவசனம் செய்வதை வ்ரதமாகக் கொள்வதற்குக் காரணமான புத்தி சொல்லப் படுகிறதாகவுமாம்.

(17) அன்றிக்கே ஸ்திரீ சூத்திராதிகளுக்காகமட்டும், த்ராவிட வேதம் ஏற்பட்டது, ப்ராஹ்மணாதிகளுக்கும் ஜ்ஞானவான் களுக்கும் ஸம்ஸ்க்ருத வேதங்களே உப ஜீவ்யங்கள் என்று சிலர் நினைத்து த்ரமிட வேதங்கள் எல்லோருக்கும் உபஜீவ்யமானவை என்கிற அம்சத்தை அபலபிக்கப் பாரித்தார்கள், வேதங்களினால் ப்ரதிபாதிக்கப்படுமவனும் வேதங்களை ப்ரவர்த்தனம் செய்தருளு பவனுமான ஸர்வேசுவரனால் வேதாந்தாசார்யர் என்று திருநாமம் சூட்டப்பட்டு அதை வித்வான்கள் முன்னிலையில் அந்வர்த்தமாக்கின தமக்கும் த்ரமிடவேதங்கள் உபஜீவ்யங்கள் என்று வெளியிட்டு அவர்களுடைய அபிப்ராயம் உசிதமன்று என்று நிரூபித்ததைக்குறிக்கிறதாகவுமாம்.

(18) அன்றிக்கே பின்புள்ளோர் இவர் விஷயமாக ''மாறன் மறையும் இராமானுசன் பாடியமும் தேறும்படி உரைக்கும் சீர்'' (வாழித் திருநாமம்) என்று கொண்டாடிய மதி விசேஷம் சொல்லப்படுகிறதாகவுமாம். கீழ் நிரூபித்திருக்கிறபடியே ஸ்ரீபாஷ்யம் ஆழ்வாருடைய ப்ரீதிக்காக ஏற்பட்டது. த்ரமிட வேதங்கள் ஸ்த்ரீ சூத்திராதிகளுக்காக மட்டும் உண்டானவை என்று சொல்லிப்போரும் இந்த இருள் தருமாஞாலத்தில் இவர்

தோன்றி உபய வேதாந்தங்களும் ப்ராஹ்மணாதிகளுக்கும் உத்தேச்யமானவை என்பதை " இந்த நிஷ்கர்ஷங்களெல்லாம் பாஷ்யத்திலே ஸத் ஸம்ப்ரதாயத்தோடேகூட சிரபரிசயம் பண்ணின மஹா ப்ராஜ்ஞருக்கு நிலமாயிருக்கும்" (சரம சுலோகாதிகாரம்) என்று அருளிச்செய்திருக்கிறார். ஸத்ஸம்ப்ரதாயத்தோடே என்றது பகவத் விஷயத்தோடே என்றபடி. பகவான் முதலாகத் தன் ஆசார்யன் வரையிலாக ஓராண் வழியாக உபதேச பரம்பரையாகவும் க்ரந்தமுகமாகவும் பெற்ற அர்த்த விசேஷங்களையே ஸம்ப்ரதாயார்த்தங்கள் என்கிறது. ஸ்ரீமந்நாதமுனிகளுக்குத் திருவாய்மொழி முகத்தாலும் யோக தசையில் தோன்றிய ஆழ்வாருடைய உபதேசத்தாலும் ஸம்ப்ரதாய ஸித்தி ஏற்பட்டது ஸுப்ரஸித்தம். பெரியமுதலியார் ஆழ்வார்தாம் நம்முடைய வைஷ்ணவகுலத்திற்குக் குலபதி என்றருளிச் செய்திருக்கிறார். ஆகையினால் ஆழ்வாரையும் அவர் ப்ரவர்த்தனம் செய்தருளிய த்ராவிட வேதங்களையும் அநாதரிப்பவர்களுக்கு ஸம்ப்ரதாய ஸித்தி இல்லை என்று சொல்லப்பட்டதாகிறது. அப்படி ஆழ்வாருடைய பரம்பரையால் கிடைத்த அர்த்த விசேஷங்கள் இவை என அருளிச்செய்தபடியினால் இவற்றிற்கு முரண்பாடாகச் சொல்லப்படும் அர்த்தங்கள் அநாதரணீயங்கள் என்பதும் ஸித்திக்கிறது. பெரியமுதலியாருடைய ஸ்தோத்திரம் ஆழ்வாருடைய ப்ரபந்தானுஸந்தானத்தின் பரீவாஹமாய் உண்டாயிற்று என்பது ஸ்ரீஸ்தோத்ர பாஷ்யத்தில் அருளிச்செய்யப் பட்டிருக்கிறது. ஸ்ரீ பாஷ்யத்தில் நிரூபிக்கப்பட்ட அர்த்த விசேஷங் கள் திருவாய்மொழியினுடைய அனுஸந்தானபரீவாஹம் என்று பூர்வாசார்யர்கள் பணித்துப்போருவர்கள். ஆகையினால் உபய வேதாந்தங்களில் ஒன்றையும் அபலபிக்கமுடியாது. உயர்வற உயர்நலம் உடையவன் என்று த்ரமிடோபநிஷத்தை உபக்ரமித்தருளினார் ஆழ்வார். இவ்வர்த்தமே ஸ்தோத்திரத்தில் பரதத்துவ நிரூபணம் செய்ய ஆரம்பிக்கும் ச்லோகத்தில் " स्वाभाविकानवधिकातिशय " என்று ஸம்ஸ்க்ருதத்தில் சொல்லப் பட்டது. பரப்ரஹ்மத்தை நிரூபிக்கும் ப்ரகரணங்களில் எம்பெருமானார் இதே பதங்களை ப்ரயோகித்துள்ளார். சாரீரக

ஸூத்திரங்களின் இறுதியில் இப்படி உபாயத்தை அனுஷ்டித்து அர்ச்சிராதி மார்க்கத்தால் மோக்ஷத்தை அடைந்தவன் மீண்டும் ஸம்ஸார ஸுக துக்காதிகளை அனுபவிக்கப் பிறப்பதில்லை என்பதை '' अनावृत्तिशब्दात् अनावृत्ति शब्दात् '' என்று ஸூத்திரகாரர் அருளிச்செய்தார். இங்கு சகாரம் கூட இல்லாமையினால் சப்தத்தை (வேதத்தை)த் தவிர வேறு ஒரு காரணமும் இல்லை என்று சொல்லப்பட்டதாயிற்று. இதன் வ்யாக்யானத்தில் ஸூத்திர காரருக்கு அபிமதமான வேத வாக்யத்தை உதாஹரித்து வேத துல்யமான ஸ்ரீ கீதா ச்லோகங்களை எடுத்துக் காட்டியதும் '' सूत्राभ्यासः इति सर्वं समञ्जसम्।'' என்று க்ரந்தத்தை முடித்திருக்க வேண்டும். ஆனால் அப்படிச்செய்யாமல் '' न चोछिन्न कर्म बन्धस्य असङ्कुचित तानस्य परब्रह्मानुभवैक स्वभावस्य तदेकाप्रियस्य अनवधिकातिरायानन्दं ब्रह्मानुभवततः अन्यापेक्षा अदर्थारम्भाय सम्भवात् पुनरावृत्तिशङ्का। न परमपुरुषः सत्य सन्ङकल्पः अत्यर्थप्रियं ज्ञानिनं लब्ध्वा कदाचिदावर्तयिष्यति। च एवमाह - 'சுप्रियो हि ॥ ॥ ॥ सुदुर्लभः'' इति என்கிற வாக்யங்களை அருளிச்செய்திருக்கிறார். இதற்கு ஆதாரம் சித்தரஞ்ஜனத்தோடே ஸர்வரையும் எளிதாகத் தெளிவிக்கும் த்ரவிட வேதத்தில்,

''மயர்வற என் மனத்தே மன்னினான் தன்னை
உயர்வினையே தரும் ஒண் சுடர்க் கற்றையை
அயர்வில் அமரர்கள் ஆதிக்கொழுந்தை என்
இசைவினை என் சொல்லி யான் விடுவேனோ''

(திருவாய்மொழி -- 1 -7 - 4)

என்கிற பாசுரம். இந்த நிர்ணயம் தத்துவார்த்தமே, ஒரு அபிமான விசேஷத்தால் சொல்லப்பட்டதுமல்ல, என்று காட்டுவதற்காகக் கொஞ்சம் விஸ்தாரமாக நிரூபிக்கப்படுகிறது. ஸம்ஸ்க்ருத வேதங்களை உதாஹரித்து அதற்கு அனுவாதமாக கீதா ச்லோகத்தை நிரூபித்து, மேலே 'நச ' என்றாரம்பித்து இந்தப் பாட்டின் அர்த்தமே நிரூபிக்கப்பட்டிருக்கிறது. உச்சிந்ந கர்மபந்தஸ்ய என்றது கீழ்ப் பாட்டில் என் மாயப்பிறவி மயர்வறுத்தேனே என்றனுஸந்தித்திருப்பதை இங்கனுவதித்தபடி. அஸங்குசித ஜ்ஞாநஸ்ய என்றது மயர்வற என் மனத்தே

மன்னினான் தன்னை என்பதின் கருத்தை விவரித்தபடி. பரப்ரஹ்மானுபவைக ஸ்வபாவஸ்ய என்றது உயர்வினையே தரும் ஒண் சுடர்க்கற்றையை என்கிற பதங்களின் அர்த்த விவரணம். தத்தேக ப்ரியஸ்ய என்றது என் இசைவினை என்பதை விவரித்தபடி. அநவதிகாதிசயா நந்தம் ப்ரஹ்மானுபவத: என்றது அயர்வில் அமரர்கள் ஆதிக்கொழுந்தை என்பதை விவரித்தபடி. அந்யாபேக்ஷா ததர்த்தாரம்பாத்ய ஸம்பவாத் ந புநராவ்ருத்தி சங்கா என்றது என்சொல்லி யான் விடுவேனோ என்பதை விவரித்தபடி. ந ச பரம புருஷ: இத்யாதி. இதற்குமேல் ஒன்று விட்டு அடுத்த பிரான் பெருநிலம் கீண்டவன் என்கிற பாட்டின் அர்த்த ஸங்க்ரஹம். இப்படி த்ரமிடோபநிஷத்தை ஸம்ஸ்க்ருதத்தில் நிரூபித்தருளி, இந்த உபநிஷத்திற்கு அனுவாதமாக கீதையிலிருந்து மற்றொரு ச்லோகத்தை உதாஹரித்தருளியபிறகே க்ரந்தத்தை உபஸம்ஹாரம் செய்திருக்கிறார். இதுவே ஸ்ரீ பாஷ்யகாரரின் திருவுள்ளம் என்பது அவருடைய நியமனத்தினால் செய்யப்பட்டதும் அவரால் அங்கீகரிக்கப்பட்டு ப்ரவசனம் செய்யப்பட்டதுமான திருவாறாயிரப்படி பங்க்திகளினால் நன்கு தெரிவிக்கப்படுகிறது. "ஸர்வ காலமும் அவனோடு ஸம்ச்லேஷிக்கைக்கு விரோதியான ஸம்ஸாரத்தைப் போக்கினேன்" என்கிறார்.

(மயர்வற) இப்படி எம்பெருமானோடு ப்ரவ்ருத்தமான ஸம்ச்லேஷத்துக்கு ஒருபடியாலும் மேல் அழிவில்லை என்கிறார். தன் திறத்தில் எனக்குள்ள அஜ்ஞானமெல்லாம் போம்படி என்னுள்ளே புகுந்தருளி தன்னுடைய கல்யாணமான குணஸ்வரூபங்களை அத்யந்தவிசதமாம்படி எனக்குக் காட்டியருளி தனக்கு ஸத்ருசரான அயர்வறுமமரர்களோடு ஸம்ச்லேஷிக்குமாப் போலே என்னோடு ஸம்ச்லேஷித்தருளினவனை எங்ஙனே நான் விடும்படி என்கிறார்.

(பிரான்) அவன்தான் விடில் செய்வதென்னென்னில் தன்னுடைய அதிமனோஹரமான திவ்ய சேஷ்டிதங்களாலும் அழகாலும் என்னைத் தோற்பித்து அடிமையாக்கினவன் என்னை விடுவனோ? விடுவனென்றால் நான் அவனை விடவொட்டுவேனோ என்கிறார், என்றிறே பிள்ளான்

பணித்தருளியிருப்பது.

இப்பாட்டுக்களின் ஸங்க்ரஹத்தில் ஸ்ரீ த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் त्यागे हेतूज्झितस्य, दुस्त्यज स्वानुभूतेः என்றருளிச் செய்யப்பட்டிருப்பது இங்கனுஸந்தேயம். இந்தப் பரம ரஹஸ்யமான அர்த்த விசேஷங்கள் ஸதாசார்ய ஸம்ப்ரதாயாகதமானவை.

(19) அன்றிக்கே ஆசார்ய கடாக்ஷத்தால் தாம் பெற்ற அர்த்த விசேஷங்களே தத்துவார்த்தங்கள், வேறு கிடையா என்கிற உறுதியாகிய ஜ்ஞான விசேஷம் சொல்லப் படுகிறதாகவுமாம். பெரிய முதலியார் " इति गीतार्थ स ङ्ग्रहः" என்று ஸ்ரீமந்நாதமுனிகளின் உபதேஶத்தால் கிடைத்த இவ்வர்த்தங்களே கீதையின் உண்மையான அர்த்தங்கள் என்று வெளியிட்டாப்போலே, येषामुक्तिषु मुक्ति सौध्य विशिखा सोपान प ङ्क्ति ष्वमी, वैशम्प्यायन शौनक प्रभृतयः श्रेष्ठाः शिरः कम्पिनः(சரம சுலோகாதிகாரம்), यन्नास्मिन् क्वापि नैतत् (ஸ்ரீ தத்துவமுக்தா கலாபம்), निश्शेषां वस्तु वृत्ति निपुणिमह मया न्यस्थता (ஸ்ரீ தத்துவமுக்தா கலாபம்) மாலுகந்த ஆசிரியர் வார்த்தைக்கொவ்வா (அம்ருதாஸ்வாதினீ - 27) என்றிவை முதலாக அனுஸந்திக்கும் படியான ஜ்ஞானம் சொல்லப்பட்டதாகிறது.

(20) அன்றிக்கே எம்பெருமான் தொடக்கமாக அவிச்சிந்ந மாய் வந்திருக்கும் நமது ஸம்ப்ரதாயத்தைப் பல படிகளால் பரவச்செய்து अखिलतमः कर्षणम् दर्शनं नः (ஸ்ரீ தத்துவமுக்தா கலாபம்) என்று கொண்டாடும்படி செய்தருளிய ஜ்ஞான விசேஷம் சொல்லப்படுகிறதாகவுமாம்.

(21) அன்றிக்கே அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொரு மூர்த்தியாகிய கண்ணன் உபதேசித்த கீதையில் பக்தி ப்ரபத்திகளாகிற இரண்டு உபாயங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன என்று நிஷ்கர்ஷித்த ஜ்ஞானம் குறிப்பிடப்படுகிறதாகவுமாம்.

(22) அன்றிக்கே எதிவரனார் மடைப்பள்ளி மணமாய்த் தமக்கு ப்ராப்தமான அர்த்த விசேஷங்களை ரஹஸ்யங்கள்

என்னப்படும் ஸ்ரீ ஸூக்திகள் ரூபமாக வெளியிடுவதற்குக் காரணமான ஜ்ஞானம் குறிப்பிடப் படுகிறதாகவுமாம்.

(23) அன்றிக்கே ஆசார்யானுக்ரஹத்தால் தாம் அறிந்த அர்த்தங்களுக்கு விருத்தமாகச் சொல்லுமவர்கள் எவராயினும் எவ்வளவு மேன்மை பெற்றவராயினும் அவற்றைக் கருதாமல் அவருடைய பக்ஷத்தைக் கண்டிப்பதற்கு வேண்டிய ஜ்ஞானத்தை யுடையவர் என்றபடியாகவுமாம். இதை ஸ்ரீ பரமத பங்கத்தில் கண்டு கொள்க.

தாவிப் புவனங்கள் தாளிணை சூட்டிய தந்தை உந்திப்
பூவிற் பிறக்கிலும் பூதங்கள் எல்லாம் புணர்த்திடினும்
நாவிற் பிரிவின்றி நாமங்கை வாழினும் நான்மறையில்
பாவித்ததன்றி உரைப்பது பாறும் பதர்த் திரளே

(38 - ம் பாட்டு) என்றும்,

वेदान् पूर्वं विधाताऽलभत भगवतः सर्वविद्यानियुक्तो
वणीशश्चैष तस्मात् तदुदितविदतौ कम्पनं वेदमूर्ध्नः।
मैवं तस्यापि वेदापहृतिमुख विपद् दर्शनात् क्षौत्रिभावात्
भ्रान्त्यादि सम्भवे दित्यजातिक विषये पूर्व वन्निर्वदामः॥

(ஸ்ரீ அதிகரண ஸாராவளீ - 2 - 7)

என்றிவை முதலியன இங்கனுஸந்தேயம்.

(24) அன்றிக்கே மோக்ஷ மார்க்கங்களென்று வேதாந்தங்களில் ஓதப்படுகிற முப்பத்திரண்டு ப்ரஹ்மவித்யை களில் முக்யமானதென்று ச்ருதிகளே உத்கோஷிக்கும் ந்யாஸ வித்யையின் கரை கண்டவர் என்று புகழ் பெற்றதற்குக் காரணமான ஜ்ஞானத்தைக் குறிக்கிறதாகவுமாம். இவ்வம்சத்தை प्रपदनकला जन्म जलधीः என்று பின்புள்ளோர் அனுஸந்தித்தார்கள். ந்யாஸ வித்யையின் பெருமையை இவரைப் போல் விசே ஷித்து நிரூபித்தவர்கள் வேறு ஒருவரும் இல்லை. *ஸ்ரீ ந்யாஸ தசகம், ஸ்ரீ ந்யாஸ விம்சதி, ஸ்ரீ ந்யாஸ திலகம், ஸ்ரீ சரணாகதி தீபிகை, ஸ்ரீ நிக்ஷேப ரக்ஷை, அடைக்கலப்பத்து, ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரம்*, முதலியவற்றில் சரணாகதியின் ஸ்வரூபாதிகளும் அங்காங்கி விபாகமும் இவற்றைப் பற்றிய ஆக்ஷேப ஸமாதானங்களும் மற்ற எல்லா அம்சங்களும் நன்றாக

விசாரிக்கப்பட்டு நிர்த்தாரணம் செய்யப்பட்டிருக்கிறபடியினால் என்றபடி.

(25) அன்றிக்கே எதிரிகளாலும் அங்கீகரிக்கப்பட்ட பெருமையை, அதாவது அவர்கள் கௌரவம் செய்யத் தகுந்த ஜ்ஞானத்தையுடையவர் என்றபடியாகவுமாம். रत्रोः प्रख्यात वीर्यस्य (ராமாயணம்) என்று ரகுவரன் கொண்டாடப் பட்டாப்போலே இவருடன் வாதம் செய்து தோற்ற கவிகளால் போற்றப்பட்டவர் என்றபடி.

(26) அன்றிக்கே ஒரு பண்டிதர் மற்றொரு பண்டிதனைப் பஹுமானிப்பதில்லை. அதற்கு விலக்காய் நிற்கும்படியான ஜ்ஞானத்தையுடையவர் என்றபடியாகவுமாம். तत्र त्वद्भुत निर्भरप्रसरया बुध्या परिष्कारिणः त्वन्तः प्रत्यायितो न कश्चिदपरः प्रत्यार्थिभिः प्रार्थितः ॥ (ஸ்ரீ ஸங்கல்ப ஸூர்யோதயம் 2-18) என்று சொல்லப் பட்டபடியே ப்ரதிவாதிகளும் உம்முடன் வாதம் செய்து நாங்கள் தோற்றாலும் பாதகம் ஒன்றுமில்லை என்று கொண்டு இவரைப் பஹுமானித்தபடி தெரிவிக்கப்படுகிறது.

(27) அன்றிக்கே 'गुरु प्रसरन स्फुरद्गुणगरिम्णि यन्मानसे सकृत् स्फुराति वस्तु तन्नहि किमप्यप्रभ्रश्यति। ऋषिस्त्तरितरोपि वा यदि गृणाति गत्यन्तरं विकल्प्य तदपि क्षणात् विलयमभ्युपैति स्वयम्॥ (ஸ்ரீ ஸங்கல்ப ஸூர்யோதயம் 2-19) என்கிறபடியே ஆசார்யர்களின் அனுக்ரஹத்தினால் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற குணங்களின் மேன்மையையுடைய தன்னுடைய மனதில் எந்த ஒரு அர்த்தம் ஒரு தடவை ப்ரகாசிக்கிறதோ, அது கொஞ்சமேனும் நழுவுகிறதில்லை, ரிஷியாவது மற்றெவனாவது வேறு அர்த்தத்தைச் சொல்லு கிறானேயானால் அதுவும் அனேகம் விதமான விகல்பங்களை அடைந்து, அதாவது இப்படியா அப்படியா என்கிற கேள்விகளுக்கு இடமாகி ஒரு நொடிப்பொழுதில் நாசத்தை அடையும்படி செய்யக்கூடிய விசேஷம் சொல்லப்படுகிறதாகவுமாம்.

(28) அன்றிக்கே ஶ்ருதிகள் எல்லாம் ஒரே அர்த்தத்தை ப்ரதிபாதிக்கின்றன, அவைகளுக்குள் பரஸ்பர விரோதம் இல்லை என்னும் நிஶ்சயத்தை யுடையவர் என்றபடியாகவுமாம். அதாவது வேதாந்தங்களில் சில வாக்யங்கள் பரமாத்மாவிற்கும்

ஜீவாத்மாவிற்கும் பேதம் உண்டு என்கின்றன, சில இரண்டும் ஒன்று என்கின்றன, சிலர் பேதத்தைச் சொல்லும் பாகங்களை மட்டும் ப்ரமாணமாக அங்கீகரித்தார்கள், சிலர் அபேத வாக்யங் களை ப்ரமாணமாகக் கொண்டார்கள், இவர்கள் இருவரும் இப்படிப்பட்ட பிந்ந அபிப்ராயத்திற்குக் தாத்பர்யத்தை விளக்கும் ஶ்ருதி வாக்யங்களை மறந்தார்கள். ஆகையினால் இவர்களுடைய இரண்டு பக்ஷங்களும் உசிதமல்ல, ஶ்ருதிகளில் ஒரு பாகத்தை அப்ரமாணம் என்றால் அதே ந்யாயத்தினால் மற்றதுவும் அப்ரமாணமாய்விடும், ஆகையினால் இந்தப் பரஸ்பர முரண்பாட்டை ஶரீராத்மபாவ ஸம்பந்தத்தினால் பரிஹரித்து வேதவாக்யங்கள் எல்லாம் ப்ரமாணம் என நிர்ணயித்தருளிய ஜ்ஞானத்தை யுடையவர் என்றபடியாகவுமாம்.

मिथो भेदं तत्त्वष्वभिलपति भेदश्रुतिरसौ विशिष्टैक्यादैक्यश्रुतिरपिचसार्था भगवती| इमावर्थौगोप्तुं निखिल जगदन्तर्यमयिता निरीशो लक्ष्मीशः श्रुतिभिरवराभिः प्रणिदधेः|| (ஸ்ரீ ஸங்கல்பஸூர்யோதயம்) என்று ஸ்ரீஸங்கல்ப ஸூர்யோதயத்தில் அருளிச்செய்யப் பட்டிருக்கிறது. இதன் அர்த்தம் பேதஶ்ருதிகள் தத்துவங்களுக்குள் ஒன்றுக்கொன்றுள்ள பேதத்தைச் சொல்லுகின்றன. ஐக்யஶ்ருதி விசேஷணத்துடன் சேர்ந்தவஸ்து ஒன்றாதலால் அர்த்தத்தோடு கூடியதாகிறது. இவ்வர்த்தங்களைக் காப்பாற்றுவதற்காக எல்லா லோகங்களுக்கும் அந்தராத்மாவாயும் தனக்கு மேற்பட்டஒரு ஈசுவரனு மில்லாதவனு மாகிய லக்ஷ்மிக்குப் பர்த்தாவாகியநாராயணன் மற்ற ஶ்ருதிகளில் சொல்லப்படுகிறான்-என்பது. இத்தால் எல்லா ஶ்ருதிகளுக்கும் ஐககண்ட்யம் ஸித்திக்கிறது.

(29) அன்றிக்கே அறிவுதரும் பெரியதிருமொழியாகிய கலியனுரை குடிகொண்டகருத்துடையவர் என்று சொல்லும் படியானஜ்ஞானத்தையுடையவர் என்றபடியாகவுமாம்.

(30) அன்றிக்கே अहं त्वशेष भाषा वेदी என்கிறபடியே எல்லாப் பாஷைகளையும் அறிந்திருந்தமை சொல்லப்படுகிறதாகவுமாம்.

(31) அன்றிக்கே सर्वज्ञत्वं तत्वमुक्ताकलापे (ஸப்ததி ரத்னமாலிகை)என்னப்பட்டஎல்லா விஷயங்களையும் பற்றிய ஜ்ஞானத்தை யுடையவர் என்றபடியாகவுமாம்.

(32) அன்றிக்கே ''திருமந்திரத்தில் பாஹ்யகுத்ருஷ்டி மதங்களால் கலக்கவொண்ணாத தெளிவுடையவனை ப்ராஜ்ஞன்'' என்று ப்ரமாணங்கள் சொல்லுகிறபடி அத்தகைய ஜ்ஞானத்தையுடையவர் என்றபடியாகவுமாம். அன்றிக்கே மானாவமானங்கள் நேர்ந்தால் அவற்றால் கலக்கமுடியாத புத்தி விசேஷத்தையுடையவர் என்பதைச் சொல்லுகிறது என்றபடியாகவுமாம்.

(33) அன்றிக்கே இவருடைய வாக்கின் பெருமையை உணர்ந்த பகவான் இவரால் ஸ்தோத்திரம் செய்யப் பெற்றோம் என்கிற க்யாதியைப் பெறவிரும்பி இவருடைய ஸ்ரீஸூக்திகளுக்கு वक्ता श्रोता वचन विषयः (ஸப்ததி ரத்னமாலிகை) என்கிறபடியே சொல்லுகிறவன், கேட்பவன் விஷயமாயிருப்பவன் எல்லாமாய் நிற்கும்படி செய்த ஜ்ஞானம் விவக்ஷிதமாகவுமாம்.

(34) அன்றிக்கே ஸம்ப்ரதாயஜ்ஞானம் உடையவர்களை பஹுமானித்தும் அது இல்லாதவர்களை அநாதரம் செய்வதுமாகிய புத்தி விசேஷத்தையுடையவர் என்றபடியாகவுமாம். ஸ்ரீயதிராஜ ஸப்ததியில் यतीश्वर सरस्वती सुरभिताशयानां सतां என்றாரம்பிக்கும் ஶ்லோகத்தை இங்கு அனுஸந்திக்கவும்.

(35) அன்றிக்கே கீதாசார்யன் தன்னுடைய கருணையினால் ஸர்வலோக ஹிதார்த்தமான சரம ஶ்லோகத்தை அருளிச் செய்தாப்போலே இவரும் அந்த ஶ்லோகத்தின் அர்த்தத்தையும், அதில் விதிக்கப்பட்ட ஶரணாகதியாகிற உபாய விஷயமான எல்லா அர்த்தங்களையும் ஒன்று சேர்த்து எல்லோருக்கும் பயன்படும்படி ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் என்னும் பரமோத்க்ருஷ்டமான ஸ்ரீஸூக்தியை அருளிச் செய்தருளிய ஜ்ஞானவிசேஷம் சொல்லப்படுகிறதாகவுமாம். இந்த ஸ்ரீஸூக்தியின் பெருமையை உணர்ந்த பூர்வர்கள் இதை பரப்ரஹ்மம் என்று கொண்டாடியிருக்கிறார்கள். ஸ்ரீவிஶிஷ்டாத்வைத மதத்தின் கொள்கைகளை இதைப்போலே ஸ்பஷ்டமாக நிரூபிக்கும் க்ரந்தம் வேறொன்றும் கிடையாது. தாங்கள் ஒன்றுக்கொன்றே ஸத்ருஶமாயிருக்கும் ராமபாணங்கள் என்கிற உத்கர்ஷம் ஸ்வாமியின் மற்றைய ஸூக்திகளில்

உணரலாமானாலும் இந்த ஸ்ரீஸூக்திக்கு ஸ்வாமியின் இதர ஸூக்திகளையும் ஒப்பிடமுடியாது. அப்படிப்பட்ட விசேஷம் என்ன என்னில் :-- ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களில் இவ்வர்த்தங்கள் ஒருவாறு கூறப்பட்டிருந்தாலும், அவைகள் ஸம்ஸ்க்ருதத்தில் இருப்பதினாலும், த்ரைவர்ணிகர் களே அவற்றை அதிகரிக்கமுடியுமாதலாலும், உபநிஷத் வாக்யங்கள் மேற்கோளாக ஆங்காங்கு உதாஹரிக்கப் பட்டிருப்பதாலும் ஸர்வாதிகாரமான ப்ரபத்தியைப் பற்றி விஸ்தாரமாக நிரூபிக்கப்படாமையாலும், த்ரமிடவேதங்கள் ஸகலரும் அதிகரிக்கும்படியாயிருந்தபோதிலும் அவற்றில் விசாரரூபமாய் அர்த்தநிர்ணயம் பண்ணப்படாமையாலும், திருவாய்மொழி முதலியவற்றின் வ்யாக்யானத்தில் ஶ்ருதி வாக்யங்களை உதாஹரித்திருப்பதாலும், அவைகள் ஸர்வருக்கும் ப்ரயோஜனமுடையவைகளாக ஆகவில்லை. இப்படிப்பட்ட குறைகளை எல்லாம் நீக்கி எல்லோரும் அறிந்தகொள்ளும்படி மணிப்ரவாளத்தில் அதிக விஸ்தார மில்லாமலும் இவருடைய மற்ற ரஹஸ்யங்கள் போலே ஸங்க்ரஹமாகவில்லாமலும், ப்ரஹ்மவித்யைகளின் ஸங்க்யை யான முப்பத்திரண்டு அதிகாரங்கள் அடங்கியதாயும், அதிகாரார்த்தங்களை ஸுலபமாய் அனுஸந்திப்பதற்காக அவற்றின் அர்த்தங்களை ஶ்லோகரூபமாகவும் பாட்டுக்கள் ரூபமாகவும் ஸங்க்ரஹித்தும் அருளிச்செய்யப் பட்டிருப்பதனால் இது ஸர்வோத்க்ருஷ்டமான ஸ்ரீஸூக்தியாய் விளங்கா நிற்கும். ரைக்வருடைய ஜ்ஞானத்தைப்போலேயும் பஞ்சமவேத மெனப் படும் பாரதம்போலேயும் இது இருக்கும். அதாவது மற்ற க்ரந்தங்களிற் சொல்லப்பட்டிருக்கும் அர்த்தங்களை எல்லாம் இதில் காணலாம். இதில் சொல்லப்படாத அர்த்தங்களை வேறோர் இடத்திலும் காணமுடியாது. இக்ரந்தத்தை ஸதா சார்யனிடமிருந்து அதிகரித்தவன் இதில் ப்ரதிபாதிக்கப்பட்ட உபாயத்தை அனுஷ்டித்து மோக்ஷமடைவான் என்பது ப்ரத்யக்ஷ ஸித்தம். இந்த ஸ்ரீஸூக்தியை அருளிச் செய்வதையே முக்யமான ப்ரயோஜனமாக ஸ்வாமியே கருதி அருளியபடியால் இதன்

விசேஷ மஹிமை தெரிவிக்கப்படுகிறது. ராமாவதாரத்தில் ராக்ஷஸ ராஜதானியில் விபீஷணனுக்கு முடிசூட்டியபிறகே பகவான் தன்னை க்ருதக்ருத்யனாக எண்ணினான். அதைப்போலவே இந்த ஆசார்யவதாரத்தில், எவ்வளவோ ஸூக்திகளை அருளிச் செய்திருந்தபோதிலும் அவற்றால் திருப்தி பெறாமல் ஸர்வருக்கும் ப்ரயோஜனப்படும்படியான இந்த க்ரந்த ரத்னத்தை அருளிச் செய்ததும் தம்முடைய அவதார ப்ரயோஜனம் பூர்த்தி யடைந்துவிட்டதாகத் திருவுள்ளம் பற்றியே. இனி, பெருவீடு பெறுவதற்குக் காரணமான திவ்ய தம்பதிகளின் ஸங்கல்பத்தை எதிர்பார்த்து நின்றார் என்பது நிகமனாதிகாரத்தின் இறுதியில் शेषिदंपति दयादीक्षामुदीक्षामहे என்று அருளிச் செய்திருப்பதினால் ஏற்படுகிறது. ஜ்ஞான பதம் இந்த ஒரு க்ரந்தத்தை அருளிச் செய்வதற்கு அவஸ்யம் வேண்டியதான புத்தி விசேஷத்தைச் சொல்லுகிறதென்றாலும் போதும். இதற்குள் ஸமுத்திரத்தில் மாட்டுக் குளம்படி என்கிற நியாயத்தால் கீழ்க்கூறிய மற்ற யோஜனைகளில் சொல்லப்பட்ட அர்த்தங்கள் உள்ளடங்கியவை களாய் நிற்கும் என்பது

(36) ஆக நிகமத்தில்

வாதாசனரிவரென மஹா பாடியம் வகை பெறும்படியாயும்
வகுளாபரணப் பெருமாள் தமிழின் வாசி அறியும்படியாயும்
பேதாபேதம் பிரமம் எனாவகை பிரமம் தெளிவிக்கும் படியாயும்
பேச்சொன்றுக்குச் சததூஷணியைப் பேசும்படியாயும்
தீதாகிய பல மாயக்கலைகளை சிக்கென வென்றிடும் படியாயும்
திக்கெட்டும் புகழ் ஸ்ரீபாஷ்யத்தைத் தெளிய உரைத்திடும் படியாயும்

இருந்த புத்தி விசேஷம் ஞான பதத்தால் சொல்லப்படுகிற தாகவுமாம்.

### வைராக்ய சப்தார்த்தம்

வைராக்யம் என்றது விரக்தி என்றபடி.

परमात्मनि यो रक्तः विरक्तोऽपरमात्मनि (பார்ஹ. ஸம் -3,48) என்கிறபடியே எம்பெருமானைத் தவிர மற்ற எல்லா விஷயங்களிலும் ஆசையற்றவனாய் இருப்பது. ''உன்னா லல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்''

(திருவாய்மொழி 5-8-3) என்கிறபடியே பகவான்தான் வேண்டும். அது பெறுவதும் அவனாலேயே ஆகவேண்டும், வேறு ஒருவருடைய உதவியினால் பகவானைப் பெறுவதும் கூடாது என்னப்பட்ட தேவதாந்தர ப்ராப்யாந்தர உபாயாந்தரங்களில் புத்தியைச் செலுத்தாமலிருத்தல் சொல்லப்படுகிறதாகவுமாம். அன்றிக்கே தர்மத்திற்கு ஸாதனமாகச் சொல்லப்பட்டதும், லோகத்தில் எல்லோரையும் மயக்குவதுமான அர்த்த விஷயத்தில் அதாவது பணத்தில் விரக்தி சொல்லப்படுகிறதாகவுமாம். லோகத்தில் விரக்தியுடன்கூட அனேக மஹான்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் இவரைப்போல் ஶாஸ்த்ரீயமாய்க் கிடைத்த ஸ்வர்ணத்தை (தங்கத்தை)யும் ஓட்டாஞ்சல்லியாகக் கருதியவர் வேறு ஒருவருமில்லை. வித்யாரண்யரால் பல தடவை ப்ரார்த்திக்கப் பட்டாலும் ராஜ ஸேவையையும் அத்தால் உண்டாகக்கூடிய பணத்தையும் மறுத்து இப்படிப்பட்ட எண்ணம் எல்லோருக்குமுண்டாவதற்காக வைராக்யத்தின் ப்ரகாரத்தை ஸ்ரீவைராக்ய பஞ்சகம் என்னும் ஸ்தோத்திரத்தை அருளிச் செய்திருப்பதும் இங்கு அனுஸந்தேய மாகக் கடவது. அன்றிக்கே மஹர்ஷிகளையும் மயக்குகிற மூன்றாவது புருஷார்த்தமாகிய காமத்தில் விரக்தி சொல்லப் படுகிறதாகவுமாம். இவருடைய யௌவன தசையை இவர் கழித்தது '' निर्विष्टं यतिसार्वभौमवचसामाव्त्तिभिर्यौवनम् '' (ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்) என்கிறபடியே ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸூக்திகளின் ஆவ்ருத்தியினால் என்பது ப்ரஸித்தமிறே. அன்றிக்கே பகவானிடமிருந்தும்கூட ஒன்றையும் அபேக்ஷிக்காமல் அதை ஸாதிக்கவல்லதாய் உத்தமமான புருஷார்த்த மென்று கருதப்பட்ட பாகவத கடாக்ஷத்தையே அவலம்பித்துப்போந்த விரக்தி சொல்லப் படுகிறதாகவுமாம். नाथे नस्तृणमन्यदन्यदपि वा ... न यचामहे என்று புருஷார்த்தகாஷ்டாதிகாரத்தில் நிர்ணயிக்கப் பட்டதிறே. அன்றிக்கே '' இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் '' (திருமாலை 2), ''ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே'' (சிறிய திருமடல்), என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானுடைய மற்றைய

ரூபங்களில் விரக்தியும், அவனுடைய அர்ச்சா ரூபத்தில் சக்தியும் சொல்லப்படுகிறதாகவுமாம். वैकुण्ठवासेपि न मेभिलाषः என்று ஸ்ரீவரதராஜ பஞ்சாசத்தில் அனுஸந்திக்கப்பட்டதிறே. ஆக एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः (பாரதம் - சாந்தி. 350-19) என்கிறபடியே வைகுண்டத்துடன் சீர்தூக்கிப் பார்க்கும்பொழுது ஸுகமென்று கருதப்படும் ஸ்வர்க்கமும் நரக ஸ்தானத்தில் நிற்குமாப்போலே லோகத்திலுள்ள மற்றவர்களுடைய விரக்தியெல்லாம் ராகம் என்று சொல்லும்படியான உத்தமமான விரக்தியுடையவர் என்று தெரிவிக்கப்பட்டதாகவுமாம். இப்படி ஜ்ஞானம் வைராக்யம் என்கிற இரண்டு பதங்களினாலும் ஆசார்யனுக்கு இன்றியமையாததாகக் கருதப்பட்ட இரண்டு குணங்களையும் விசேஷமாகப் பெற்றிருந்தவர் என்பது சொல்லப் பட்டதாகிறது.

## பூஷண ஸப்தார்த்தம்

பூஷணம் என்றால் அலங்காரம். ஜ்ஞானம் வைராக்யம் இவை இரண்டையும் தமக்கு அலங்காரமாக உடையவர் என்றபடி. எப்படி ஆபரணமானது ஒருவருடைய ஶரீரத்தில் தரிக்கப்பட்டதாய்க் கொண்டு அவரை மற்றவர்கள் ஆஹ்லாதத்துடன் பார்க்கும்படி செய்வதற்கு ஸாதனமாயிருக்கிறதோ, அதைப்போல இக் குணங்களினால் அலங்கரிக்கப்பட்டிருந்தார் என்றபடி. அன்றிக்கே ஆபரணங்கள் ஆத்ம குணங்களைக் காட்ட ஶக்தியுடையவைகளல்ல. அவற்றை மற்றவர்கள் தெரிந்து கொள்ள முடியாது. இவருடைய குணங்களோ பூஷணங்களைப் போலே பார்க்கும்படி நின்றமை சொல்லப் படுகிறதாகவுமாம். பகவானுக்கு ஷட்குணங்களும் ஹேயப்ரத்ய நீக கல்யாணைகதாநத்வமும் பூஷணமாய் நிற்கிறாப் போலே இவரை ஜ்ஞான வைராக்யங்கள் பூஷித்து நின்றமை சொல்லப் படுகிறதாகவுமாம். அன்றிக்கே திருத்துழாய் முளைக்கும் பொழுதே வாஸனையுடனே உண்டாகிறாப் போலே இவரும் அவதாரகாலம் தொடங்கி இந்த இரண்டு குணங்களுடன் விளங்கினமை சொல்லப்படுகிறதாகவுமாம். அதாவது பால்யத்திலேயே ஸாமாந்ய விளையாட்டில் ஈடுபடாமல்

இருந்ததும் அம்மாள் கோஷ்டியில் ஜ்ஞான விசேஷத்தை வெளியிட்டதும் இங்கு விவக்ஷிதங்கள். அன்றிக்கே அழகன் ஆபரணம் பூண்டாப்போலே ஶோபாவஹமாய் இருந்தமை சொல்லப்படுகிறதாகவுமாம். அன்றிக்கே ஸத்யம் ஜ்ஞானம் முதலிய குணங்களும் திவ்யாயுதங்கள் முதலியவைகளும் தாங்கள் ஒரு பெருமையை அடைவதற்காக பகவானை ஆச்ரயித்து நிற்கிறாப் போலே ஜ்ஞானமும் வைராக்யமும் இவரை ஆஸ்ரயித்து ஒரு பெருமை பெற்றமை சொல்லப் படுகிறதாகவுமாம். ஸ்ரீமந் நாதமுனிகள் ஜ்ஞான வைராக்ய ராசியாய் நின்றார். வேதாந்தா சார்யத்வம் போலே ஜ்ஞான வைராக்ய பூஷணத்வமும் ஸ்ரீதேசிகனுக்கே அஸாதாரணம் என்றதாயிற்று. அன்றிக்கே எப்படி ஹேய ப்ரத்யநீகத்வ கல்யாணைகதாநத்வத்தைப் பகவானை விட்டுப் பிரிக்க முடியாதோ அதைப் போலே ஜ்ஞான வைராக்யங்கள் அப்ருதஸித்தங்களாய் இவரை பூஷித்து நின்றமை சொல்லப்படுகிறதாகவுமாம், அன்றிக்கே பகவானை ஆறு குணங்களை உடையவன் என்னும்போது மற்றைய குணங்கள் அவற்றிற்குள் அடங்கி இருக்கிறாப் போலே ஆசார்யனுக்கு வேண்டிய இதர குணங்களெல்லாம் இந்த இரண்டு குணங்களுக்குள்ளும் அடங்கி இருக்கின்றன என்பது அறியத்தக்கது. அன்றிக்கே பகவானுடைய திவ்ய திருமேனிக்கு ஶுபத்வம் - பாபத்தைப் போக்கடிக்கும் ஶக்தி, ஆஶ்ரயத்வம் - த்யானத்திற்கு ஶுகோசரமாயிருப்பது என்கிற இரண்டு ஆகாரங்கள் இருப்பதினாலே அதை ஸேவிப்பவர்களுக்கு மோக்ஷம் க்ரமேண உண்டாகுமாப் போலே இந்த ஜ்ஞான வைராக்யங்களையுடைய இவருடைய திவ்யார்ச்சா விக்ரஹத்தை ஸேவிப்பவர்கள் அப்படிப்பட்ட குணங்களைப் பெற்று, அவற்றின் வழியாக மோக்ஷம் பெறுவார்கள் என்றபடியாகவுமாம். அன்றிக்கே பகவானுடைய கடாக்ஷத்தால் மதியையும் நலத்தையும் ஆழ்வார் பெற்றது போல ஹயக்ரீவனுடைய கடாக்ஷத்தால் இவர் பெற்றது ஜ்ஞான வைராக்யங்கள் என்றபடியாகவுமாம். மதி நலம் அருளினன் என்பதற்கு ''அஜ்ஞான கந்தமில்லாத தொருபடி தன்னை

உள்ளபடி அறிவித்துத் தன் திருவடிகளிலே நிரவதிக பக்தியை உண்டாக்கின" என்று பிள்ளான் பணித்தருளினார். அப்படிப்பட்ட ஜ்ஞானமும் பக்தியும் அத்தால் உண்டாக்கப்பட்ட பகவானை விட இதர விஷயங்களில் விரக்தியும் சொல்லப்படுகிறதாகவுமாம். அன்றிக்கே தன் ஆஶ்ரிதர்களைக் காப்பாற்றுவதற்காக பகவான் பஞ்சாயுதங்களைத் தரித்துக் கொண்டிருக்கிறாப்போலே ஸ்ரீ தேசிகன் தம்முடைய ஶிஷ்யர்களைக் காப்பாற்றுவதற்காக ஜ்ஞானவைராக்யங்களைப் பூஷணமாகத் தரித்திருந்தமை சொல்லப்படுகிறதாகவுமாம். பகவானுடைய திவ்ய ஆயுதங்கள் அவனுக்குப் பூஷணங்களாய் நிற்பது ப்ரஸித்தம். ஜ்ஞான வைராக்யங்களை பூஷணமாக உடையவர் என்கிற யோஜனையில் गुणै विरुरुचे रामः: (ராமாயணம்-அயோத்.-2-47) என்கிற ஆகாரமும், ஜ்ஞான வைராக்யங்களுக்குப் பூஷணம் என்கிற யோஜனையில் शोभयन् दण्धकारण्यं (ராமாயணம் - ஆரண்ய - 15) என்கிற ஆகாரமும் தெரிவிக்கப்பட்டதாகிறது.

### ஸ்ரீமத் வேங்கட நாதார்ய சப்தார்த்தம்.

இப்படிப் பூர்வாசார்யர்களின் அனுக்ரஹத்திற்கு ஏகபாத்திர மாய் இருந்ததும், அதின் பலனாய் ஜ்ஞான வைராக்யங்களைப் பூஷணமாகப் பெற்றதும் ஒரு ஏற்றமோ இவருடைய அவதார வைலக்ஷண்யத்திற்கு என்பதை வெளியிடுகிறது ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் என்கிற விசேஷணம். அன்றிக்கே இப்படிப் பூர்வா சார்யர்கள் ஒரு முகமாக அனுக்ரஹிப்பதற்கும் அதற்குக் காரணமான ஜ்ஞான வைராக்ய பூஷணராய் இருந்ததற்கும் மூல காரணத்தைச் சொல்லுகிறது ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் என்கிற விசேஷணம் என்றபடியாகவுமாம்.

***ஸ்ரீமத் வேங்கட நாதார்யம்*** என்றது ஸ்ரீமானாய் வேங்கட நாதன் என்கிற திருநாமத்தையுடையவர் என்றபடி - அதாவது திருவேங்கட முடையானுடைய அனுக்ரஹத்தினால் பெற்ற குழந்தைக்கு அதை நினைப்பூட்டுவதற்காகப் பெற்றோர்கள் சாற்றிய திருநாமம் என்பதும், விசேஷ குணஸம்பன்னராய் நின்றார் என்பதும் காட்டப்பட்டதாகிறதென்றபடி.

அன்றிக்கே த்ரிகாலஜ்ஞானியான வஸிஷ்டரால்

வைக்கப்பட்ட திருநாமத்திற்கேற்ப எல்லோரும் ஸந்தோஷப் படும்படி ராமாவதாரத்தில் நின்றருளினாப் போலே இவருடைய மாதுலரான கிடாம்பி அப்புள்ளார் திருத்தகப்பனாராகிய அநந்த ஸோமயாஜியார், முதலியவர்கள் இவருடைய தேஜஸ்ஸைக் கடாக்ஷித்து திருவேங்கடமுடையானைப் போலே விளங்குவார் என்பதை அறிந்து வேங்கடநாதன் என்று திருநாமம் சூட்டினார்கள் என்றபடியாகவுமாம்.

அன்றிக்கே '' அன்றிவ்வுலகினையாக்கி . . திருவேங்கடநாத னென்னும் குருவாய்'' (பிள்ளையந்தாதி), वेङ्कटेशावतरोयं (மங்களாசாசனம்) என்றிவை முதலியவைகளில் ப்ரஸித்தமான அவதார வைலக்ஷண்யம் தெரிவிக்கப்படுகிறதாகவுமாம்.

அன்றிக்கே '' துளங்கு நீண்முடி - . வளங்கொள் மந்திரம்'' என்கிற பாசுரத்திலும், இவ்வர்த்தத்தையே ஸ்பஷ்டமாகச் சொல்லுகிற ஆசார்ய த்வாத்ரிம்ஶத் என்னும் ஸ்தோத்திரத்தில் अनार्हे என்றாரம்பிக்கும் ஸ்லோகத்திலும் கூறப்பட்ட பெருமை விவக்ஷிதமாகவுமாம். அதாவது தன்னை ஆஸ்ரயித்த தொண்டமான் சக்கரவர்த்திக்கு இதுவே எல்லா வித மங்களங்களையும் கொடுக்கக்கூடியது என்று பகவானால் உபதேசம் செய்யப்பட்ட மஹிமையையுடைய திருநாமம் என்பதைத் தெரிவிக்கிறதாகவுமாம் வேங்கட நாதார்யம் என்னும் பதம்.

அன்றிக்கே ''மற்றப் பெருமைகளை அநாதரித்து, பகவான் தான் பிறந்து படைத்த ஏற்றங்களையே விசேஷித்துப் பஹுமானித்தருளினாப்போலே'', அதாவது தாசரதீ, ஜனக ஜாமாதா, வஸிஷ்ட ஶிஷ்யன் இத்யாதிகளையே ருசித்தாப் போலவும், பிராட்டியிடம் ரூப குண ஸௌந்தர்யாதிகள் இருக்கச் செய்தேயும் அவைகளை விட தமது திருத்தகப்பனார் அங்கீகரித்துத் தாம் க்ரஹித்த பத்னீ எனகிற அம்ஶமே ஸீதையிடம் ப்ரீதி பண்ணியதற்கு முக்ய காரணமாயிருந்தது என்பதை प्रिया तु सीतारामस्य दाराः पितृकृताइति इति (ராமா-பால-77-26 ) என்று சொல்லப்பட்டாப்போலே மற்றைய திருநாமங்களைக் காட்டிலும் தமது திருத்தகப்பனார் சூட்டிய திருநாமம் இது

என்று இத்தை ஸ்வாமி போர உகந்தருளினார் என்பதைத் தெரிவிக்கிறதாகவுமாம்.

***ஸ்ரீமத்*** என்றது ஸம்பத்துடன் கூடிய என்றபடி. இந்தப் பதம் திருவேங்கடமுடையானை விட வித்யாஸத்தைக் தெரிவிக்கிறது. இந்த ஸ்ரீமத் என்னும் பதத்தின் அர்த்தத்தையே '' வென்றி புகழ் திருவேங்கடநாதனென்னும் குருவாய்'' என்று நைனாராசார்யர் அனுஸந்தித்திருக்கிறார். அன்றிக்கே திருவிருத்தத்தில் ஆழ்வாரால் ''அம்பூந் தேனிளம் சோலை அப்பாலது எப்பாலைக்கும் சேமத்ததே'' என்று அருளிச்செய்த எல்லாக்காலத்திலும் க்ஷேமத்தையுண்டாக்கக் கூடிய சீர்மை ஸ்ரீமத் என்பதினால் சொல்லப் படுகிறதாகவுமாம். அன்றிக்கே முன்னாள் புணராத பரமதப்போர் பூரித்து, அஸத்துக்களின் கர்வத்தை நிராகரித்து ஜயலக்ஷ்மியுடன் விளங்கினமை ஸ்ரீமத் என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறதாகவுமாம். அதுவுமன்றிக்கே ஸ்ரீமத் என்பது सतु नागवरःश्रीमान्, अन्तरिक्षगतः श्रीमान् என்றிவை முதலியவைகளில் ஸ்ரீகஜேந்திரன் ஸ்ரீவிபீஷணன் இவர்கள் ஸ்ரீமாந் என்னப்பட்டாப் போலே பாகவதர்களுடைய ப்ரஸாதத்தை தமக்கு உஜ்ஜீவகமாகக் கருதி இருந்தமை சொல்லப்படுகிறதாகவுமாம். அன்றிக்கே பெரிய பிராட்டியின் ப்ரபாவத்தை நன்றாக ஸ்தாபித்தமையினால் அவளுடைய கடாக்ஷத்தைப் பெற்றிருந்தமை சொல்லப்படுகிறதாகவுமாம். வேதாந்த தேசிக ஶப்தார்த்தம்.

இப்படிப் பூர்வாசார்யர்களுடைய அனுக்ரஹத்திற்குப் பாத்திரமாயும், ஜ்ஞான வைராக்ய பூஷணராயும், ஸ்ரீமத் வேங்கட நாதராயும், விளங்கியது காட்டில் காய்ந்த நிலாவைப் போல நிஷ்ப்ரயோஜனமாகாமல் எல்லோருக்கும் ப்ரயோஜனமாம்படி நின்றபடியை ***வேதாந்த தேசிகம்*** என்னும் பதம் தெரிவிக்கிறது. வேதாந்த தேசிகம் என்றது வேதாந்தங்களில் நிலவர், அதாவது அவற்றை அறிந்தவர் என்றபடி. வேதங்கள் கர்ம காண்டம் என்றும், உபநிஷத் என்றும், இரு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும். கர்ம காண்டம் க்ரியாகலாபங்களை விசேஷித்துச் சொல்லும். அதாவது அவற்றில் சொல்லப்படும் அக்னி இந்திரன்

வாயு முதலியவர்களுக்கு அந்தராத்மாவான பகவானுடைய ஆராதனத்தைச் சொல்லும். உபநிஷத்துக்கள் பகவானுடைய ஸ்வரூப ரூப குணாதிகளை நேரில் சொல்லும். இதை வேதாந்தம் என்றும் கூறுவதுண்டு. இவற்றின் அர்த்தங்களையெல்லாம் ஸ்வாசார்யரிடமிருந்து நன்கு அறிந்தவராகையினால் இவர் வேதாந்ததேசிகம் என்னப்படுகிறார் என்றபடி. *அன்றிக்கே இவருடைய வேதாந்த ஜ்ஞானத்தின் உத்கர்ஷத்தைக் கண்ட திருவரங்கத்தெம்பெருமான் இது வரையில் தனக்கே பொருத்த முடையது என்று வைத்திருந்த வேதாந்தாசார்யர் என்கிற பிருதை ப்ரஸாதித்தருளியது தெரிவிக்கப்படுகிறதாகவுமாம்.* இந்த அனுக்ரஹ விசேஷம் பெற்றபடியை ஸ்வாமி தேசிகன் தாமே तेन देवेन दत्तां वेदान्ताचार्य संज्ञां (ஸ்ரீ அதிகரண ஸாராவளீ - 1) .स्वगमिति हरिदत्तं यामुन स्तोत्रवृत्तया व्यवृणुत निगमान्ताचार्यकं वेङ्कटेशः (ஸ்ரீரஹஸ்ய ரக்ஷை.), என்று அருளிச்செய்திருக்கிறார். இப்படிப்பட்ட அனுக்ரஹம் ஸ்வாமியொருவருக்கே கிடைத்தது, வேறு ஒருவருக்கும் கிட்டவில்லையென்பதைப் பின்புள்ளோர்கள் " यस्मिन्ननन्य सामान्या वेदान्ताचार्यता गुरौ | यथा पुरुषता विष्णौ (ஸப்ததி ரத்ன மாலிகை - 34 ) अनितरजलभ्यां लम्भितो रङ्गभर्त्रा (வைபவ ப்ரகாசிகை) என்று அனுஸந்தித்தார்கள். ஸ்வகமிதி ஹரிதத்தம் வேதாந்தாசார்யகம் என்று யோஜித்து, இது வரையில் தானே வைத்திருந்த பிருதை ஸ்வாமிக்கு ஸ்ரீ ரங்கநாதன் அளித்தார் என்பது தெரிவிக்கப்பட்டதாகும். ஹரிதத்தம் ஸ்வகம் வேதாந்தா சார்யகம் என்று யோஜித்து ஸ்வாமிக்கே அஸாதாரணமாய், அதாவது பகவானுக்கும் இல்லாத பிருதாயிருக்கும் இது என்று சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பார்கள். வ்யாஸருக்கும் வேதாசார்யர் என்கிற பிருதே உண்டு.

அன்றிக்கே வேதாந்தார்த்தங்களை உபதேசிக்கும் ஆசார்யன் என்றபடியாகவுமாம். அதாவது மற்றைய ஆசார்யர்களும் வேதாந்தார்த்த ப்ரவசனம் செய்திருந்தபோதிலும் அவர்களுடைய ப்ரவசனம் இவருடையதைப் போல் எல்லோருக்கும் ப்ரயோஜன முள்ளதாகவில்லையாலே இவருக்கே வேதாந்த தேசிகம் என்கிற திருநாமம் என்றதாயிற்று. இங்கு ''முந்தை மறை மொய்ய

வழி மொழி நீ என்று முகுந்தனருள் தந்த'' (நவமணி மாலை - 10) பயன் பெற்றதும், அதை ''அந்தமில் சீர் அயிந்தை நகர் அமர்ந்த நாதன் அடியிணை மேல் அடியுரையால் ஐம்பதேத்தி சிந்தைகவர் பிராகிருதம் நூறு கூறி செந்தமிழ் மும்மணிக் கோவை செறியச் சேர்த்து பந்துகழ லம்மானை ஊசலேசல் பரவு நவமணி மாலை இவையும் சொன்னேன்'' என்று அனுஸந்தித்தபடியே பல ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்து ஸ்தாபித்தபடியாலும் வேதாந்தார்த்தங்களைப் பரவச் செய்தவர் என்பது ஸூசிதமாயிற்று என்றபடி.

அன்றிக்கே ஸ்ரீவிஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அஸாதாரணமான உபய வேதாந்தார்த்தங்களையும் ப்ரவசனம் செய்தபடியால் வேதாந்த தேசிகம் என்றபடியாகவுமாம். அதாவது உபயவேதாந்தங்களையும் விசேஷித்து ப்ரவசனம் செய்தது மாத்திரமன்றிக்கே அவற்றை உபய பாஷைகளிலும் பரக்க நிரூபித்தருளியவர் என்றபடி. இந்தப்பெருமை ஆசார்யர்களில் வேறு ஒருவருக்கும் கிடையாது. இப்படிப் பல பாஷைகளில் க்ரந்தங்களை அருளிச் செய்வதே ஆசார்ய லக்ஷணம் என்று प्राकृतैः संस्कृतैस्चव गद्य पद्याक्ष रैस्तथा॒ देशभाषादिभिः शिष्यं बोधयेत् स गुरुः स्मृतः என்று உவர்கள் நிரூபித்திருக்கிறார்கள்

அன்றிக்கே தேசிகம் என்பது தேசத்தை அறிந்தவன் என்பதைச் சொல்லி, அத்தால் உபய வேதாந்தங்களில் இவர் அறியாத ப்ரதேசம் இல்லையென்பது சொல்லப்படுகிறதாகவுமாம். இவ்வர்த்தம் प्रज्ञाख्ये मन्थसैले प्रथितगुणरुचिं नेत्रयन् संप्रदायं (ஸ்ரீத்ரமிடோ -தாத் - 2), सारं द्रमिढ निगमस्यान्वकथयत्, ( ஸாரம்-25 ) पाराशर्यप्रभूतादुपनिषदमृतोदन्वतः सारभूतं निर्मथ्य (ஸ்ரீ அதிகரண ஸாரா 500) , त्रय्यन्त सूत्र भाष्यार्थ तत्वटीका विधीयते ( ஸ்ரீ தத்துவ டீகை) என்றிவை முதலாக அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

அன்றிக்கே வேதாந்தங்கள் மறை என்கிற பெயருக்கேற்ப அர்த்தங்களை மறைபொருளாகச் சொல்லாநிற்கும். அவற்றை விவரணம் செய்தருளியபடியால் வேதாந்த தேசிகம் என்றபடி யாகவுமாம்.

அன்றிக்கே தேசிகம் என்றது ஆசார்யனுக்கு லக்ஷணமாகச்

சொல்லப்பட்ட ஷோடச லக்ஷணங்களையும் உடையவர் என்றபடியாகவுமாம்.

அன்றிக்கே உபய வேதாந்தங்களும் ஒரே விதமான அர்த்தத்தையே உத்கோஷிக்கின்றன என்று உபதேசித்தவர் என்றபடியாகவுமாம்.

அன்றிக்கே பகவானுடைய நியமனத்தையும் ஆசார் யர்களுடைய நியமனத்தையும் பெற்று வேதாந்த ப்ரவசனம் செய்தவர் என்றபடியாகவுமாம்.

அன்றிக்கே ஆஶ்ரிதரை அல்லாத வழிகளில் போகாதபடி தடுத்து நல்வழியில் செல்லும்படி செய்தவர் என்றபடியாகவுமாம். இதுவே தேசிக ஶப்தார்த்தமென்று ஸ்ரீரஹஸ்ய ரத்னாவளீ ஹ்ருதயத்தில் நிரூபிக்கப் பட்டிருக்கிறது.

அன்றிக்கே ''நன்மையால் மிக்க நான் மறையாளர்கள்'' என்கிறபடியே வேதாந்தங்கள் நன்மையில் மிகும் அர்த்தங்களையே சொல்லுகின்றன என்று நிர்வஹித்தவர் என்றபடியாகவுமாம்.

அன்றிக்கே வேதாந்தங்களுக்கு ஆசார்யன் என்றபடியாகவுமாம். ஶ்ருதிகள் சில இடங்களில் சொல்ல வேண்டிய விஷயங்களைச் சொல்லாமலும், சொல்லிய இடங்களில் ஹீனோபமானங்களையிட்டும் நிரூபித்து நின்றன. அவற்றை எப்படி நிரூபித்திருக்க வேண்டுமென்பதை எடுத்துக் காட்டி இருப்பதினால் வேதாந்த தேசிகம் என்றபடியாகவுமாம். பகவத் ஸ்வரூபத்தை நிரூபிக்கும் ப்ரகரணத்தில் ஸ்ருதி எல்லாப் பாகமும் உணர்முழு நலமாயிருக்கும் என்பதற்கு உப்புக்கட்டியை உதாஹரணமாகக் கூறிற்று. கேட்பவர்களுக்கு அதை அனுபவிப்பதில் ருசிஉண்டாக்கக் கூடிய த்ருஷ்டாந்தம் இதுவல்லவல்லவா. மற்றோர் இடத்தில் பகவானை அனுபவிப்பதைச் சொல்லும் பொழுது வெய்யில் காலத்தில் குளிர்ந்த மடுவில் போல' என்று நிரூபித்தது. கன்னற்கனி யன்றோ பகவத் ஸ்வரூபம்! மடு சிறியதானாலும், பெரிதாயிருந்தும் ஜலம் மிகவும் குறைந்திருந்தாலும், பூர்ணமாயிருந்து உப்பாயிருந்தாலும் அதில் ஸ்நானம் செய்வது

பகவதனுபவத்திற்கு ஸத்ருஶமாகாதல்லவா. இது எப்படி நிரூபிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை அந்த ஶ்ருதி சொல்லிய த்ருஷ்டாந்தத்தையே பரிஷ்கரித்து गंभीर पूर्णमधुरं मम धीर्भवन्तं ग्रीष्मेतटाकमिव शीतामनुप्रविष्ठा (ஸ்ரீதேவநாயக பஞ்சாசத்௯) என்றருளிச் செய்திருக்கிறார்.

## வந்தே ஶப்தார்த்தம்.

வந்தே என்றது ஸேவிக்கிறேன் என்றபடி. இத்தால் தமக்கு மற்றைய எல்லா க்ரந்தங்களுக்கும் ஸாக்ஷாத் ஆசார்யராயும், ஸ்ரீபகவத் விஷயத்துக்கு மட்டும் ப்ராசார்யருமான ஸ்ரீதேசிகனுடைய பெருமையை கீழ்ப் பதங்களினால் நன்றாய் அனுபவித்து அவ்வனுபவ பரீவாஹமாய் ஸ்வாமியைத் தண்டன் ஸமர்ப்பிவித்தபடி சொல்லப் படுகிறது. ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ர ஜீயருக்கு உண்டான அபிஸந்தி விசேஷம் நமக்கு உண்டாகாமல் போனாலும் ஸ்ரீ தேசிகன் எல்லோராலும் ஸேவிக்கப்படவேண்டியவர் என்பது தெரிவிக்கப்படுகிறது. அன்றிக்கே இப்படி உபகரித்தருளிய ஸ்வாமி விஷயத்தில் நாம் செய்யக்கூடிய கார்யம் அவரை ஸேவிப்பதைத் தவிர வேறு இல்லை என்பது தெரிவிக்கப் படுகிறதாகவுமாம். ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் இந்த சுலோகத்தை விண்ணப்பம் செய்த காலத்தில் அர்த்தானுஸந்தானத்தில் மெய்மறந்து, சித்ரகூடத்தில் ராமனை தூரத்தில் பார்த்த பரதாழ்வான் ஆர்ய என்று சொல்லி மேலே பேசமுடியாமல் நின்றாப் போலே, ஸ்தப்தராய் பிறகு கொஞ்ச காலம் கழித்து ப்ரஜ்ஞை பெற்று மேல் சுலோகத்தை பூர்த்தி செய்தார் என அபூர்வர்கள் அனுஸந்திப்பார்கள். இந்தப் பதம் இறுதியில் இல்லாமல் இருப்பதற்குக் காரணம் இது அன்றிக்கே வந்தே என்பது நம: என்னும் பதத்திற்குப் பர்யாயமாய் நின்று அத்தால் சொல்லப்படக்கூடிய எல்லா அர்த்தங்களையும் விவக்ஷிக்கிறது என்றபடியாகவுமாம்.

## உபஸம்ஹாரம்.

இப்படி இவ்வளவு அர்த்தபுஷ்டியுள்ள சுலோகத்தினால் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயரும் நைனாராசார்யரும் அக்காலத்தில் அங்கிருந்த மற்றவர்களும் ஸந்தோஷப்பட்டதினால் நமக்கு யாது

ப்ரயோஜனம் என்னில் - பெரிய முதலியார் ஸ்வானுபவத்தை வெளியிட்ட ஸ்தோத்திரம் நமக்கு ப்ரயோஜனப்படுவதற்குக் காரணம், ஸ்ரீ ஸ்தோத்திரபாஷ்யத்தில் यद्यप्यत्र न सन्तृष्टं परार्थ प्रतिपादनम् | तथापि तादृग्रूपत्वं परसङ्कल्पतःस्थितम् || என்று நிரூபிக்கப் பட்டிருக்கிறது. அது இங்கும் துல்யம். ஆகக் கீழ் நிரூபிக்கப்பட்ட அர்த்த விசேஷங்களை ஒருவாறாகவாவது தெரிந்து கொண்டு ஸ்ரீ தேசிக திவ்ய சரணாரவிந்தத்தில் பக்தி செய்து, அதின் பலனாய் ஆசார்ய ஸமாஶ்ரயணம்பண்ணி மோக்ஷ மடைய வேண்டும் என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது.

## விசேஷார்த்த ப்ரதிபாதனம்.

கீழ் நிரூபிக்கப்பட்ட அர்த்தங்களைத் தவிர இந்த ஸ்லோகத்தில் இன்னும் பல விசேஷார்த்தங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ப்ரதானமானவை ஸங்க்ரஹமாகக் காட்டப்படுகின்றன,

ராம ஶப்தம் அகாரார்த்தத்தையும், அநுஜ ஶப்தம் மகாரார்த்தத்தையும், தயாபாத்ர ஶப்தம் அநந்யார்ஹ சேஷத் வத்தையும் அதாவது உகாரார்த்தத்தையும், ஜ்ஞான பதம் எம்பெருமான் ஒருவனுக்கே சேஷ மென்பதையும், வைராக்ய பதம் ஸம்ஸாரத்தில் விரக்தியையும் சொல்லி அத்தால் நமஶ்ஶப்தார்த்தத்தையும், ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் என்பது நாராயண ஶப்தார்த்தத்தையும், வந்தே ஶப்தம் சதுர்த்தியின் கருத்தையும் வெளியிடுகிறபடியால் திருமந்த்ரார்த்தம் சொல்லப் பட்டதாகிறது. திருமந்திரம் ஸர்வார்த்த ஸங்க்ரஹமாய் ஸர்வோபஜீவ்யமாகிறாப் போலே இதுவும் இருக்கும் என்றபடி.

அன்றிக்கே ராம பதம் ஸ்ரீமந் நாராயண சப்தார்த்தத்தை யும், ஜ்ஞான பதம் ப்ரபத்யே ஶப்தார்த்தத்தையும், மேல் பாகம் உத்தர கண்டார்த்தத்தையும் சொல்லுகிறபடியால் த்வயத்தின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்படுகிறதாகவுமாம்.

அன்றிக்கே வைராக்ய பதம் மற்றைய உபாயங்களிலிருந்து நிவ்ருத்தித்திருப்பதைச் சொல்லுகிறபடியால் பரித்யஜ்ய வரையிலான ஶப்தங்களின் அர்த்தமும், ஜ்ஞான பதம்

அவதார ரஹஸ்ய ஜ்ஞானத்தைக் குறிக்கிறபடியால் மாம் அஹம் என்பதின் அர்த்தமும், தயாபாத்ரம் வந்தே என்பதினால் ஶரணம் வ்ரஜ எனபதின் அர்த்தமும், ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் என்பது அவதார வைலக்ஷண்யத்தைச் சொல்லுவதால் மோக்ஷயிஷ்யாமி என்பதும் குறிப்பிடப்பட்டு சரம சுலோகார்த்தம் ஸூசிப்பிக்கப்படுகிறதாகவுமாம்.

அன்றிக்கே ராம, ஸ்ரீமத் வேங்கட நாதார்யம், என்கிற பதங்களினால் பரமாத்ம ஸ்வரூபமும், தயா பாத்ரம் என்பதினால் ஜீவாத்ம ஸ்வரூபம், ஜ்ஞான பதத்தால் உபாய ஸ்வரூபமும், வந்தே என்பதினால் பல ஸ்வரூபமும், வைராக்ய பதத்தில் அடங்கிய ராக என்பதினால் ப்ராப்தி விரோதியும் குறிப்பிடப்பட்டு அர்த்த பஞ்சக ஸங்க்ரஹமாயிருக்கும் இது என்றபடியாகவுமாம்.

அன்றிக்கே த்ரமிடோபநிஷத்துக்களுக்கு இது அஸாதாரணமாகையினால் அவற்றின் அர்த்தங்களை ஸங்கரஹிக்கிறதாகவுமாம். அதாவது அவற்றுள் ப்ரதானமானது திருவாய்மொழி. அதில் முதல்பத்து எல்லாப் பத்துக்களின் ஸங்க்ரஹமாகவும், முதல் திருவாய்மொழி அதனுடைய ஸங்க்ரஹமாயும், முதல் பாட்டு ஸர்வ ஸங்க்ரஹமாயும் இருக்கும் என்று பூர்வர்கள் நிரூபித்திருக்கிறார்கள். இந்த சுலோகம் முதல் பாட்டின் அர்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறது. எங்ஙனே என்னில்:-- ராமாநுஜதயாபாத்ரம் என்பதினால் பூர்வாசார்யர்களுடைய கடாக்ஷத்திற்குக் காரணமான கல்யாண குண பரிபூர்ணத்வம் விலக்ஷிதமாய் முதல் அடி ஸங்க்ரஹிக்கப்பட்டதாகிறது. ஜ்ஞானவைராக்யபூஷணம் என்பதினால் ''மயர்வற மதிநலம் அருளினன்'' என்கிற இரண்டாம் பாதத்தின் அர்த்தம் நிரூபிக்கப் பட்டதாகிறது. ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் என்பது அயர்வறும் அமார்கள் அதிபதி என்பதின் ஸங்க்ரஹம். வேதாந்த தேசிகம் என்பது ஸர்வ வேதாந்தார்த்த ஸாரமான துயரறு சுடரடி என்பதினர்த்தம். வந்தே என்பது தொழுதெழு என்பதை ஸங்க்ரஹிக்கிறது.

அன்றிக்கே இது ஸ்ரீபாஷ்யத்தின் மங்கள சுலோகத்தின் அர்த்தத்தை தெரிவிக்கிறதாகவுமாம். அதாவது முதல் பாதி

சுலோகத்தினால் अखिल भुवन जन्म स्थेम भङ्गादि लीले विनत विविध भूतव्रातरक्षैकदीक्षे என்பதினர்த்தமும், அதாவது பரப்ரஹ்மமே ஜகத்காரணமும், பக்தர்களைக் காப்பாற்றுமவனும் என்று அல்லவா சொல்லப்பட்டது, அந்தவர்த்தம் ஸகல கல்யாண குணங்களையுமுடையவர் என்பதைச் சொல்லுகிற முதல் பாதத்தினால் ஸூசிப்பிக்கப்படுகிறது. பகவானுடைய கருணை யல்லவா ஜகத்ஸ்ருஷ்டிக்கும் மோக்ஷத்தைக் கொடுப்பதற்கும் காரணம்! பகவானுடைய கருணை நம்மைக் கிட்டும்படி செய்வது ஆசார்யர்களின் க்ருபையே என்றதாயிற்று. மேல் பாதி சுலோகத்தில் வந்தே பதத்தைத் தவிர மற்றைய இரண்டு பதங்களினாலும் श्रुति शिरसि विदीप्ते ब्रह्मणि श्रीनिवासे என்பதின் அர்த்தமும், வந்தே என்பதினால் भवतु मम परस्मिन् ऊएमुषी भक्तिरूपा என்கிற பக்தியின் கார்யமான நமனமும் சொல்லப்பட்டதாகிறது.

அன்றிக்கே தர்மார்த்தகாமமோக்ஷங்களெனப்படும் நான்கு புருஷார்த்தங்களுக்கும் ஸாதனமாயிருப்பது சொல்லப்படுகிறது என்றபடியாகவுமாம். ஆசார்யானுக்ரஹத்தைத் தெரிவிக்கும் முதல் விசேஷணம் தர்மத்தை ஸாதித்துக்கொடுக்குமென்பதும், ஜ்ஞானவைராக்ய பூஷணம் என்பதால் தர்மத்திற்கு ஸாதனமான அர்த்தஸாதனத்வம் சொல்லப்பட்டதாகிறது. தனங்களுக்குள் உத்தமமானதும் அழிவில்லாததும் எல்லா இடத்திலும் ப்ரயோஜனப் படக்கூடியதும் ஜ்ஞானமென்பது ப்ரஸித்தமிறே. ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் என்பதினால் மூன்றாவது புருஷார்த்தத் திற்கு விஷயமாயிருக்க வேண்டியவன் பகவானே என்பது சொல்லப்படுகிறது. வேதாந்ததேசிகம் என்பது நாலாவது புருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதனமாயிருப்பதைச் சொல்லுகிறது. அதாவது கீழ் நிரூபிக்கப்பட்ட பெருமைகளுடைய ஸ்ரீ தேசிகனுடைய கடாக்ஷத்திற்குப் பாத்திரமாகி அவரால் வற்புறுத்தப்பட்ட உபாயத்தை அனுஷ்டித்து மோக்ஷத்தை அடையுங்கோள் என்று விதிப்பதிலேயே இந்த சுலோகத்திற்குத் தாத்பர்யம் என்றபடி.

அன்றிக்கே தத்வம், ஹிதம், புருஷார்த்தம், இவற்றை தெரிவிக்கிறதாகவுமாம். அதாவது ராமா என்பது பரமாத்ம

ஸ்வரூபத்தையும், தயாபாத்ர பதம் ஜீவாத்ம ஸ்வரூபத்தையும் சொல்ல, இத்தால் அசேதன ஸ்வரூபமும் விவக்ஷிக்கப்பட்டு, தத்வம் சொல்லப்பட்டது. ஜ்ஞான வைராக்ய பதங்கள் அவற்றினால் உண்டாக்கப்படும் உபாயானுஷ்டானத்தைச் சொல்லுகிறபடியால் ஹிதம் நிரூபிக்கப்பட்டதாயிற்று. வந்தே வேதாந்த தேசிகம் என்று வேதாந்தார்த்தங்களை ப்ரவ்ருத்தித்த ஆசார்ய நமஸ்காரம் சொல்லப்பட்டு, அத்தால் குருக்கள் குழாங்கள் குரைகழல்கீழ் மாறுதலின்றி மகிழ்ந்தெழும் போகத்து மன்னுதலே புருஷார்த்தம் என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

அன்றிக்கே இந்த சுலோகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அஸாதாரணமான ஒரு நாளை ஐந்து பாகங்களாகப் பிரித்துச் செய்யப்படும் பகவதாராதனத்தைக் குறிக்கிறதாகவுமாம். ராமாநுஜதயாபாத்ரம் ஆசார்யானுக்ரஹம் பெற்றதைச் சொல்லுகிறபடியினால் அதற்கனு குணமான ஶாஸ்த்ரீய கைங்கர்யங்கள் குறிப்பிடப்பட்டு அத்தால் அபிகமனமும். ஜ்ஞான வைராக்ய பூஷணம் என்பதினால் ஆத்மகுண ஸம்பாதனமான உபாதானமும், ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் என்று பகவதவதார வைலக்ஷண்யம் சொல்லப்பட்டு அதற்கனுகுணமாகச் செய்யப்படவேண்டிய இஜ்யையும், வந்தே என்பதினால் ஆசார்ய நமஸ்கார பூர்வகமாக ப்ரதி தினமும் செய்யப்படும் க்ரந்த காலக்ஷேபாதிகளாகிற் ஸ்வாத்யாயமும், வேதாந்த தேசிகம் என்பதினால் श्रुतीनाम् विश्रमायालं இத்யாதிகளிற்படியே வேதாந்தங்களுக்கு விஶ்ரமஸ்தானம் சொல்லப் பட்டு பகவத் குணானுஸந்தான பூர்வகமான யோகமும் சொல்லப்பட்டதாகிறது.

அன்றிக்கே பகவான் அவதரித்துச் செய்தருளிய ஸாது பரித்ராணம், துஷ்ட ஸம்ஹாரம், தர்ம ஸம்ஸ்தாபனம், என்பவை இந்த குருவராவதாரத்திலும் செய்யப்பட்டன என்பது இந்த சுலோகத்தினால் சொல்லப்படுகிறது என்றபடியாகவுமாம். ராமாநுஜதயா பாத்ரமாவதற்காக ஆசார்யர்களுடைய பெருமை நன்கு நிரூபித்திருப்பதினால் ஸாது பரித்ராணமும், ஜ்ஞான வைராக்ய பூஷணராய் நின்று ப்ரதிவாதிகளை வென்றமை சொல்லப்பட்டு, அத்தால் துஷ்க்ருத்விநாசமும், வேதாந்ததேசிகம்

என்பதினால் வேதமார்க்கமாகிற தர்மத்தை நிலைநாட்டி யருளினமையால் தர்மஸம்ஸ்தாபனமும் சொல்லப் பட்டதாகிறது. ஸர்வ ஶாஸ்திரார்த்தங்களையும் ஸங்க்ரஹித்து, ப்ரத்யக்ஷத்தில் பாமர ஜனங்களும் பார்த்து அறிந்து கொள்ளும்படியாக அருளிச் செய்யப்பட்ட ஸ்ரீ ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் अङ्गीकुर्वन्त्वकलुषधियो नित्यमध्यात्मविद्यां आर्षो धर्मः स्पृशतु वसुधामाशिषःपारवर्ती। என்று இத்தையே ப்ரார்த்தித்திருக்கிறார். ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் என்றது ஸம்பவாமி யுகே யுகே என்பதின் அர்த்த ஸங்க்ரஹம்.

அன்றிக்கே ஸர்வவேதங்களின் ஸங்க்ரஹமாயிருப் பதினாலே சிறுவேதம் என்னப்படும் ப்ரணவம் வேத பாராயண காலங்களில் ஆரம்பத்திலும் கடைசியிலும் அனுஸந்திக்கப் படுமாப்போலே இதுவும் த்ராவிட ஸேவா காலங்களில் முதலிலும் கடைசியிலும் அனுஸந்திக்கப்படும் பெருமை பெற்றதாகையினால் இந்த சுலோகம் ப்ரணவத்திற்கு ஸத்ருஶ மென்றபடியாகவுமாம்.

# சுபம்

**ஸ்ரீதேசிகதர்சனரத்னதீபப்ரகாசிகா**

**முதல் பாகம் நிறைவு பெற்றது.**

